# செந்தமிழ்ப் பாவை



தி. மாணிக்கவாசகம்

வெளியிடுவோர்:
ஸ்ரீ விசாலாட்சி பதிப்பகம்
மதுரை

விற்பனை உரிமை:
மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக் கோபுரத் தெரு, :: மதுரை-1.

உ

# முன்னுரை

தமிழ் நாடு, தமிழ் மொழி, தமிழர் பண்பாடு, நாகரிகம் புகழுடன் வாழ்ந்த நாள் அந்த நாள். எங்கோ ஒருவன், தமிழ் மன்னர்களில் ஒருவனை ஏசிய காரணத்தால், தமிழ் மன்னனொருவன் வடதிசை சென்ற நாள். அந்த நாளில் எழுந்த ஒரு காப்பியம் "சிலப்பதிகாரம்". சீறடிச் சிலம்பு ஒன்றினால் ஏற்பட்ட அவல நாடகம் உலகிலே ஒப்புயர்வற்றுத் திகழ்கிறது. இதைப் படித்த பாரதியார் "நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தைத் தந்த இளங்கோவைப்போல், பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை" எனக் கூறுகிறார்.

நாடகம் எழுதுவதில் சிறந்தவர்கள், காளிதாசனும் சேக்ஸ்பியரும் என நாட்டவர்கள் எண்ணியுள்ளனர். ஆனால் இளங்கோவடிகள், அவர்களைக் காட்டிலும் சிறந்தவர்; ஈடு இணையற்றவர். சேக்ஸ்பியர் முப்பத்தேழு நாடகங்கள் எழுதியுள்ளார். காளிதாசனார் மூன்று நாடகங்கள் எழுதியுள்ளார். இளங்கோவடிகள் எழுதியுள்ள நாடகம் ஒன்றே ஒன்றுதான்.

காளிதாசர் கண்ட உலகம் விரிவானது; ஆண், பெண் என்ற இரு பாலர்களின் மன உணர்வைத் தெற்றென விளக்கும் அவர் திறமை வியக்கற்பாலது. ஆனால், ஆங்கில மேதை சேக்ஸ்பியரோ சில சமயங்களில் அவரை மிஞ்சி விடுகிறார்; இளங்கோவடிகள் இவர்கள் இருவரையும் மிஞ்சி விடுகிறார்; எவ்வாறு என்பதைக் காண்போம்.

காளிதாசரின் "சாகுந்தலம்" மிகச் சிறந்த இலக்கியம் எனப் பேசப்படுகிறது. மகாபாரதத்தில் வரும் சிறுகதை

அது. துசியந்தன் என்ற மன்னன் காட்டிற்கு வந்தான். அங்கே சகுந்தலை என்ற பெண்ணைக் கண்டான். அவளுடன் கொஞ்சி விளையாடினான். அவள் தந்தையில்லாத சமயம் அவளை வற்புறுத்திக் கந்தருவ மணம் செய்துகொண்டு களிப்புற்றான். அங்கே சகுந்தலையிடம் காதல் இல்லை· யாரோ ஒரு அரசனைக் கூடுவதாகவே அவள் கருதுகிறாள்' அரசனது ஆடம்பரம் அவளைக் கவருகிறதே ஒழிய, அவனுடைய அழகோ, குணமோ அவள் மனத்தைக் கவரவில்லை. பின்னால் அவள், அரசனிடம் தன் பிள்ளையுடன் செல்லும்போதும் அவள் உறுதியைக் காட்டவில்லை. மகாபாரதக் கதையில், மோதிரத்தைப் பற்றியோ, துருவாசரின் சாபத்தைப் பற்றியோ பேச்சேயில்லை.

இந்தச் சாதாரணக் கதையை வைத்துக் காளிதாசர், தம்முடைய கற்பனை சக்தியைக் கொண்டு பெரிய நாடகக் காவியம் செய்து விட்டார். நாம் இதற்காக அவரைப் போற்றுகிறோம்; புகழுகிறோம்.

இளங்கோவடிகள், காளிதாசர், சேஃசிபியர் என்ற மூவரும், இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழச்சிகளைத் தங்கள் தங்கள் காப்பியங்களில் புகுத்தியிருக்கின்றனர்.

காளிதாசரின், ''சாகுந்தலத்தில்'' துருவாசரின் சாபம் இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சியாகும். சேஃசிபியரின் ''ஹாம்லெட்டில்'' பேயும், ''மேக்பத்தில்'' சூனியக்காரியும் இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சியாகும். சிலப்பதிகாரத்தில், கோவலன் தலை பேசுதல், தூர்த்தர்கள் நரியாதல், மதுரைமா தெய்வம் வருதல் எல்லாம் இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளாகும்.

சாகுந்தலத்தில், துருவாசரின் சாபத்தையும் மோதிரத்தையும் துசியந்தனின் மறதியையும் நீக்கிவிட்டால், கதை ஓட்டம் தடைப்பட்டுவிடும். ஹாம்லட்டில் பேய்வராவிட்டால், அவன் தன் தந்தையை யார் கொன்றது என்பதை அறிந்து கொண்டிருக்கமாட்டான். ''மேக்பத்தில்'' சூனியக்

காரி இல்லாவிட்டால் கதையே ஆரம்பமாகியிராது. ஆனால், சிலப்பதிகாரத்தில், தூர்த்தர்கள் நரியாகா விட்டாலும் கோவலனும் கண்ணகியும் மதுரை சேர்ந்திருப்பார்கள். கோவலன் தலை பேசாவிட்டாலும் கண்ணகி மன்னனிடம் வாதாடியே யிருப்பாள். ஆகையால் சிலம்பிலே, இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகள் கதையோடு நெருங்கிய தொடர்பு படவில்லை. காளிதாசரும், சேக்ஸ்பியரும் இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளைக் கொண்டு நாடக முடிவை உருவாக்கினார்கள். ஆனால் இளங்கோவடிகள் அவைகளை ஒரு பின்னணியாகவே கொண்டார். இதனால் இளங்கோவடிகளை மற்ற இருவரைக் காட்டிலும் உயர்ந்த பெரிய நாடக ஆசிரியர் எனக் கொள்ளலாம்.

இனி, இலக்கியங்கள் மக்கள் வாழ்க்கையை ஓரளவே சொல்லோவியம் செய்பவை என்பர். அதனால், அவற்றைக் கொண்டு அவை தோன்றிய நாட்டு வாழ்க்கை, நாகரிகம், பண்பாடு ஆகிய எல்லாக் கூறுகளையும் முழுதும் அறிந்து கொள்ள முடிவதில்லை. சேக்ஸ்பியர், காளிதாசர் ஆகியோருடைய இலக்கியங்களும் அவ்வண்ணமேயுள்ளன. ஆனால், இளங்கோவின் சிலம்போ எனின், அது தோன்றிய தமிழ் நாட்டு மக்களுடைய வாழ்வு, வாணிகம், நாகரிகம், பண்பாடு ஆகிய யாவும்—உணவு சமைத்து இலைபோட்டு உண்பிப்பது, வெற்றிலை மென்று துப்புவது உட்பட—எல்லாக் கூறுகளும் பொருந்த எடுத்துக்காட்டும் முழு முதல் வாழ்க்கை ஓவியமாகக் காட்சியளிக்கிறது.

இனி, மக்கள் வாழ்க்கையில் இன்பமும் துன்பமும், புணர்வும், பிரிவும் ''நண்பகல் அமையமும் இரவும்போல, வேறு வேறு இயலவாகி மாறெதிர்ந்து உள'' என்று சாத்தன் பூதனார் என்ற சான்றோர் கூறுவர். துன்ப இன்பங்கள் இரண்டனுள், இன்பத்தால் மகிழ்ச்சி மிகுந்து அறிவு மயங்குதலும் துன்பத்தால் மனம்தெளிவுற்றுஅறிவுவிளங்குதலும்இயல்பு. இதுபற்றியே திருவள்ளுவர், ''இகழ்ச்சியில் கெட்டாரை உள்ளுக தாம்தம் மகிழ்ச்சியில் மைந்துறும் போழ்து'' என்

ருர்.எனவே, இன்பத்திலும் துன்பக்காலமே அறிவுக்குத்தன் குற்றத்தை உணர்வித்துத் தூய்மை செய்து கொள்ளுதற்கு வாய்த்தது என்பது புலனாகும். "சுடச் சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம் சுடச்சுட நோற்கிற்பவர்க்கு" என்ற பொய்யாமொழியும்மெய்யாகிறது.இம்முறையே நோக்கின் துன்பத் தீயால் சுடப்பட்டுத் தூய்மையெய்தி ஞானவொளி திகழும் உயிர், முடிவில் வானுறையும் தெய்வமாம் சிறப்பை எய்துவது இயற்கை முறையாகிறது. இம்முறையை ஒட்டியே கண்ணகியாரது வரலாற்றில் திருமணம் நிகழ்ந்த சிறிது காலத்துக்குப்பின் கோவலன் பிரிவால் அவருக்கு உளதாகிய துன்பம், அவர் வாழ்வு முழுதும் நிலவி, அவர் உள்ளத்தைத் தூய்மை செய்தமையின், இம்மையில் அவர் உயர்ந்தோர் பரவும் உரைசால் பத்தினியாய் மறுமையில் வானவர் வணங்கிவழிபடும் தெய்வமாய் விளங்குவாராயினர்.அறிவைக் கலக்கும் அவலச்சுவை சிலம்புக் காப்பியத்தில் தெய்வ வாழ் வுக்குச் சீரிய வழி செய்வதைக் காணலாம்.

இவ்வாறு எண்ணுவார் எண்ணும் திறத்துக்கு ஏற்ப இனிய தூய நல்லறம் வழங்கும் தலையாய முத்தமிழ்க் காப் பியமாகிய சிலப்பதிகாரத்தின் நிகழ்ச்சி நலம் ஓரளவு இந் நூலின் கண் காட்டப்பட்டுள்ளது. இதனை யான் வாரந் தோறும் தமிழ் நாடு நாளிதழில் சிறு சிறு கட்டுரையாக எழுதி வந்தேன். இவற்றைப் படித்த நண்பரும், அறிஞரும், இக்கட்டுரைகளைத் தொகுத்து நூல் வடிவில் வெளியிடுவது தமிழன்பர்கட்கு மிக்க உதவியாகும் என்றனர். அவ்வாறே இந்நூல் வெளியாகிறது.

இந்நூல் நல்ல முறையில் உருப்பெற்று வருதற்கு அவ் வப்போது கருத்து வழங்கிய நண்பர் பலருக்கும், அவற்றை யெல்லாம் முறைப்படுத்தியும் அச்சுப்பிழை திருத்தியும் உதவிய என் நண்பர் திரு ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கட்கும் என் மனமார்ந்த நன்றி உரியதாகும்.

எத்துணை எண்ணினாலும் எவ்வளவு முயன்றாலும் எண் ணிய கருத்து முழுவடிவு பெறுவது ஆலவாய் அண்ணல்

பங்கில் உறையும் தேவி மீனாட்சி அம்மையின் பேரருள் உண்ணின்று உதவும் சிறப்பு என்பது மறக்க முடியாத தொன்று.

வள்ளுவராண்டு கககூ௦ விளம்பி ஆண்டு பொங்கற் புது நாள் காணிக்கையாகக் கன்னித் தமிழ் அன்னையின் திருவடிக்கு இப்புது நூல் புதிய அணி செய்வதாக.

பொங்கலோ பொங்கல்.

விளம்பி, தை, க.
பொங்கற் புதுநாள்,
*14-1-1959*

தி. மாணிக்கவாசகம்

# உள்ளுறை

உ

# செந்தமிழ்ப் பாவை

## 1. தமிழ் முதனூல்

நம் தமிழகத்தில் தோன்றிய நன் மக்களில் ஒருவனைத் தலைவனாகக் கொண்டு, அவன் தமிழகத்தில் இருந்து நடத்திய தமிழ் வாழ்வைக் கருப்பொருளாக நிறுத்தித் தமிழ் வேந்தர் குடியில் தோன்றிய தமிழ்ச் சான்றோர் இருவரால் தமிழில் தோற்றுவிக்கப்பெற்ற தமிழ் முதல் நூல்கள் இரண்டு உண்டு. ஒன்று சுமார் இரண்டாயிரமாண்டுகட்கு முன் தோன்றிய சிலப்பதிகாரம்; மற்றொன்று சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முன் தோன்றிய பெரிய புராணம். மற்றவை யாவும் பிறமொழி நூல்களிலிருந்து எடுத்தவை. அதுபற்றியே தமிழ் விரும்பும் இக்கால இளைஞருள்ளம் இந்த இரண்டு முதனூல்களிலும் பெரிதும் ஈடுபட்டுள்ளது.

செந்தமிழ் நாட்டுச் செல்வர் குடியில் தோன்றித் துன்பமே அறியாமல் வாழ்ந்து இல்வாழ்வு மேற்கொண்ட பெண்ணொருத்தி, அதன்கண் தான் அடையக்கூடிய துன்பத்தின் எல்லையைக் கண்டு அதற்கு இரையாகி மறையாமல், தனது மனநிறையாலும், கற்பின் திண்மையாலும் வென்று உயர்ந்து வீர மடந்தையானதுபற்றி, அவளுக்குக் கண்ணகியென்று பெயர் இருந்தாலும், தென் தமிழ்ப் பாவை, செந்தமிழ்ப் பாவை என்ற பெயர்கள் சிறப்பாக உரியவையாயின. அத்தகைய வீரபத்தினிகள் தெய்வமாக மிளிர்தலால்,

கண்ணகியான செந்தமிழ்ப் பாவைக்குச் சேரர் இளங்கோ எடுத்த செஞ்சொற் கோயில் சிலப்பதிகாரம். இக்காப்பியம், சொற் சுவை பொருட் சுவைகளில் சிறந்து விளங்கும் ஒரு தமிழ் முதல் நூல். எந்தப் பொருளைப் பற்றிக் கூறினாலும், அந்தப் பொருளை நேரில் கண்டாற்போல், படிப்போர் உள் ளத்தில் பதியவைக்கும் திறனையும், இனிய நடையையும் இதன்கண் காணலாம். ஐம்பெரும் காப்பியங்களில் ஒன் றான இந்நூல், அறுபத்தாறு ஆண்டுகளுக்கு முன், யாரும் காணாத வகையில், எங்கோ மூலைமுடுக்குகளில் கேட்பாரற் றுக் கிடந்தது வியப்பினும் வியப்பே. முதலில் இதன் ஒரு சில பகுதிகளைச் சில அறிஞர்கள் அச்சிட்டு வெளியிட்டனர். பின்னர், இதனைச் சிறந்த முறையில் சமைத்து உலகத்திற் குத் தந்தவர் காலம் சென்ற டாக்டர் உ. வே. சுவாமிநாத ஐயர் ஆவர்.

சிலப்பதிகாரம், நம் நாட்டில், 'கோவிலன்' என்ற பெயரிலே, மேடைகளிலும் திரையிலும் உலவி வந்தது. ஆனால், சிலப்பதிகாரத்தில் கூறப்படும் கோவிலன் கதைக் கும், நாடகத்திலும் திரையிலும் காணும் கோவிலன் கதைக் கும் பெயர்களைத் தவிர வேறு பொருத்தங்களைக் காண்பது அரிதாகவே இருந்திருக்கிறது. நாட்டிலே நடமாடிய கோவிலன் கதையைச் சுருக்கமாகக் கூற விரும்புகிறேன். இக் கதையைத் தெரிந்து கொண்டாலன்றி, பின்னர் வரும் சில சிக்கலான நிகழ்ச்சிகள் எவ்வாறு உருமாறி விட்டன என்பதை நாம் நன்கு அறிந்துகொள்ள முடியாது.

பாண்டியனுக்கு ஒரு மகள் பிறந்திருக்கிறாள். அவள் அழுதால் மதுரை தீக்கிரையாகிவிடும் என்று சோதிடர்கள் சொல்லவே, அந்தப் பச்சிளங் குழந்தையை ஆற்றிலே விட்டுவிடுகிறார்கள். இந்தக் குழந்தையை ஒரு செட்டி எடுத்து வளர்க்க, அக் குழந்தை பெரியவளாகிறாள். அவள்தான் "கண்ணகி" 'கோவிலன்" என்ற வணிகப் பெருமகனுக்கு அவ ளைத் திருமணம் செய்ய ஏற்பாடாகிறது. திருமணப்

பந்தரிலே, ஆடவந்த தாசி 'மாதகி' மாலையைச் சுழற்றி எறிகிறாள். அது கோவிலன் கழுத்தில் விழுகிறது. மாலையைக் கழற்றிக் கொடுக்க முடியாமற் போகவே, அவள் இட்ட நிபந்தனையின்படி அவளுடன் அவன் சென்று விடுகிறான்.

'நாட்கள் பல கழிகின்றன. தன் செல்வத்தை எல்லாம் மாதகிக்குக் கொடுத்து வறிஞனாகிறான் கோவிலன். அவள் பத்துஇலட்சம் பொன் கேட்டுச் சத்தியமும் வாங்கிக் கொள்ளுகிறாள். அவளுக்குக் கொடுக்க வேண்டிய பொன்னுக்காக, அவன் மதுரைக்குச் சென்று பொருள்தேட வேண்டுமென்று கருதிக் கர்ணகியையும் தன்னுடன் கூட்டிக் கொண்டு செல்லுகிறான். வழியில் கவுந்தி அடிகளைக் காண்கின்றான்; அவரும் அவர்களுடன் மதுரைக்குச் செல்லுகிறார். மதுரையில் மாதிரி என்ற பெண்ணிடம் அடைக்கலமாகக் கோவிலனையும் கர்ணகியையும் ஒப்படைத்து விட்டுக் கவுந்தி சென்று விடுகிறாள்.

கோவிலன், கர்ணகியின் சிலம்பை விற்கக் கடை வீதிக்குச் சென்றபோது வஞ்சிப்பத்தன் என்பவனால் வஞ்சிக்கப்படுகிறான். மதுரை மன்னனான பாண்டியன் மனைவியின் சிலம்பைத் திருடியவன் கோவிலன் என்று பொய்க் குற்றம் சாட்டப்பட்டு அங்கே கொலை செய்யப்படுகிறான்.

கர்ணகி கொலைக் களத்திற்குச் சென்று கோவிலனைக் காண்கிறாள். அவன் உயிர்பெற்று எழுந்து அவளை நோக்குகிறான். மாதகியின் மையலை மறக்காதவனாய் "மாதகியானால் அருகில் வா, கர்ணகியானால் கடந்துசெல்" என்கிறான். பின்னர், கொலை செய்த பாண்டியனைப் 'பழிக்குப்பழி வாங்கு' என்று கூறிவிட்டு இறந்துவிடுகிறான்.

கர்ணகி, அரசனிடம் சென்று தன்னுடைய சிலம்பில் உள்ள பரல்கள் 'மாணிக்கப் பரல்கள்' என்பதையும் பாண்டியனுடைய சிலம்பிலுள்ளவை 'முத்துப் பரல்கள்' என்பதையும் தெளிவாக்கி, தன் கணவன் குற்றமற்றவன் என்பதை நிறுவுகிருள். பாண்டியனும் "நானே அரசன் நானே கள்வன்" என்று கூறி உயிர் விடுகிருன். மதுரையை நீக்கிரையாகும்படி. கர்ணகி சபிக்கிருள். பின்னர். மக்கள் கர்ணகி தான் காளி என்று நினைத்து அவளுக்கு ஒரு கோயில் கட்டுகின்றனர். இதுதான் நாட்டில் கூத்தாடும் மக்கள் மேற்கொண்டிருந்த கதை.

இக் கதையைப் பார்த்தபோது, எனக்கு ஒரு ஐயம் எழுந்தது. இந்தக் கதையைப் படித்துத்தாஞ பாரதியார். "நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் என்ற ஒரு மணியாரம் படைத்த தமிழ்நாடு" என்று கூறினுர் என நினைத்தேன். ஆனுல் சிலப்பதிகாரத்தை நன்கு படிக்கும் வாய்ப்புக் கிடைத்தபின்பே அதன் சுவையைக் காணும் பேறு பெற்றேன். பல தடவை அந்நூலைத் திரும்பத் திரும்பப் படித்தேன்; பாரதியாரைப் பற்றித் தவருக எண்ணிய என் அறியாமையை நினைந்து அப்போது வருந்தினேன்.

கோவலன், கண்ணகி, மாதவி என்ற மூன்று பேர்களுடைய வரலாற்றைக் கூறுவதுதான் சிலப்பதிகாரம். சிலம்பு இவர்கள் வாழ்க்கையிலேயே குறுக்கிட்டுக் கோவலன் கொலைக்குக் காரணமாயிருந்ததால், இதனை உரைக்கும் இந் நூலுக்குச் "சிலப்பதிகாரம்" என்று பெயரிட்டார் இதன் ஆசிரியர். தமிழ் நாட்டிலே, அக்காலத்தே, மூன்று தலை நகரங்களில், தமிழ் வேந்தர் தங்கள் அரசாட்சியைச் செலுத்தி வந்தனர். காவிரிப்பூம்பட்டினம், மதுரை, வஞ்சி என்பன அத் தலைநகர்களாம். மூவேந்தர்களைப் பற்றியும், தமிழர்களின் வாழ்க்கை, பண்பாடு முதலியவைகளைப் பற்றியும் நன்ருக எடுத்துக் காட்டுவது இந்நூல். முடியுடை மூவேந்தர்களையும் அவர்கள் வாழ்க்கையைப் பற்றியும் கூறு

வதாதலால், ஆசிரியர் இளங்கோவடிகளைப் பற்றிச் சிறிது அறிந்து கொண்டால் இக் காவியத்தை நாம் இன்னும் நன்கு அனுபவிக்க முடியும்.

''சோதிடத்தில் உங்கட்கு நம்பிக்கை உண்டா?'' என்று ஒரு பெரியவர் கேட்டார். அதற்கு நான், ''சோதிடத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு; ஆனால், அவைகளை உலகினர் தவறாகப் புரிந்துகொள்வதுதான் இயற்கை'' என்றேன். அவர், ''தவறுவது எங்கே?'' என்றார்.

''வரலாற்று ஏடுகளிலே சோதிடர்களால் பல திருப்பங்கள் நடந்துவிட்டன. ஒன்று யேசு பெருமானின் வாழ்க்கை; பிறிதொன்று இளங்கோவடிகளின் வாழ்க்கை'' என்றேன்.

அந்தமில் இன்பத்து அரசாள் வேந்தனாக, யேசு அவதரிப்பார் என்பதைத் தவறாகப் புரிந்து கொண்டான் ஒரு மன்னன். அதன் விளைவால் யேசுநாதர் சிலுவையில் மாண்டார். ஆனால் சோதிடம் பொய்க்கவில்லை. அவருடைய பொய் உடல் போனபோதிலும் அவரது புகழுடம்பு எங்குமே நிலவுவதைக் காண்கிறோம். பரமண்டலத்திலிருக்கும் பரம பிதாவைக் காட்டும் வழி காட்டியாகி அந்தமில் இன்பத்து அரசாள் வேந்தராக மாறிவிட்டார் யேசு.

அதுபோலவே, சேரன் செங்குட்டுவனும் இளங்கோவும் இருக்கும் சமயத்தில் அவர்களுடைய தந்தையாரிடம் ''இளங்கோவின் முகம் சுடர் விட்டுப் பிரகாசித்தது. இவர் அந்தமில் இன்பத்து அரசாள் வேந்தராவார்'' என்று ஒரு சோதிடர் கூறினார். சேரன் செங்குட்டுவன் முகம் மாறியதைக் கண்ட இளங்கோ அரசபோகத்தைத் துறந்து முனிவராகி விட்டார். என்றாலும், சோதிடர் கூறியது பொய்க்கவில்லை; நிலையற்ற செல்வமான மண்ணரசைத் துறந்தபோதிலும் மக்களின் மனத்திலே மாறாத இன்பத்தை ஊட்டும் சிலப்பதிகாரம் இயற்றியதனால், அவர் அந்தமில் இன்பத்து அரசாள் வேந்தரேயாகி விட்டார்.

சிலப்பதிகாரம் இயற்றப்பெற்றதற்குரிய காரணத்தைப் பதிகத்திலே கூறுகிறார் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்.

மதுரையில் நடந்த கண்ணகியின் கதையைச் சிந்தித்த வண்ணம் அவர் சேரன் அரண்மனைக்கு வரும்போது சேரனிடம் சிலர் வந்து, "ஒரு பெண் தலைவிரிகோலமாக வந்து இங்கு இறந்துவிட்டாள்; பின்னர்த் தேவர்கள் வந்து அவளைத் தேவலோகத்திற்கு அழைத்துச் சென்றனர்" என்று கூறினர். அப்பொழுது, சித்தலைச்சாத்தனாரும் இளங்கோவும் உடனிருந்தார்கள். கண்ணகியின் கற்பை வியந்து பாராட்டிய செங்குட்டுவன், அவளுக்கு ஒரு கற்கோவில் எடுக்கக் கருதினான். "மூவேந்தரோடும் தொடர்பு கொண்டு வருவதால், இக்கற்புடைத் தெய்வத்தின் வரலாற்றை அடிகளே அருளுதல் வேண்டும்" எனச் சித்தலைச் சாத்தனார் சொல்ல, இளங்கோ, சிலப்பதிகாரமாகிய இச்சொற் கோயிலை எடுத்தார்.

## 2. குறிக்கோள்

இலக்கியம் ஒன்று தோன்ற வேண்டுமானால் அதற்கு ஒரு குறிக்கோள் வேண்டும். குறிக்கோளில்லாத செயல் எவ்வாறு நலம் பெறாதோ, அவ்வாறே குறிக்கோளற்ற நூல்கள் பயனுடையனவாகா. சிலப்பதிகாரத்தைத் தொடங்கு முன் அதன் பதிகத்தில், எந்த எந்த குறிக்கோளுக்காகத் தம் காரியத்தைச் செய்தார் இந்நூலாசிரியர் என்ற செய்தி கூறப்படுகிறது.

இளங்கோவடிகள், தாம் இந்நூலை இயற்றியதற்கு மூன்று குறிக்கோள்களைக் கூறுகிறார். அம்மூன்றும் பின் வரும் பதிகப் பகுதியில் கூறப்படுகின்றன.

"அரயசில் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாவதூஉம்
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம்
சூழ்வினைச் சிலம்பு காரணமாகச் சிலப்பதிகாரம் என்னும்
நாட்டுதும் யாம்ஓர் பாட்டுடைச் செய்யுள்" [பெயரால்

என்பது அப்பகுதி.

அரசன் என்பான் ஆளப்படும் மக்களின் தலைவன். "திருவுடை மன்னனைக் காணின் திருமாலைக் கண்டேனே" என்று மக்கள் அவனைப் போற்றி வாழ்ந்தனர். அத்தகைய மன்னன் ஒழுக்கத்திலும், கடமையிலும், நீதியிலும் எல்லோருக்கும் ஓர் எடுத்துக்காட்டாக இருக்க வேண்டுமென்பதே பண்டைய மக்களின் பேரவா. ஆனால், அவன் நீதிமுறை தவறுவானானால், அறமே அவனுக்கு எமனாகிவிடும் என்றும்

நம்பினர். இந்தக் கொள்கையைக் கருத்தில் கொண்டுதான் ஆங்கில மொழியாளர்களும் ''அரசன் ஒரு குற்றமும் செய்ய முடியாது''* என்று கூறினர். அரசியலில் பிழை செய்தவர்களுக்குத் தண்டனை அறமே செய்துவிடுமென்பது முதல் குறிக்கோள். முற்காலத்தில் மன்னர்கள், மக்களால் தேர்ந்தெடுக்கப்படாவிட்டாலும், மக்களின் உள்ளக் கிடக்கைக்கு நன்மதிப்பு வைத்திருந்தனர். இதையே ஆங்கில மக்களும் கூறுகின்றனர்.†

கற்பையே தமக்கு அணிகலமாகக் கொண்ட பெண்கள் தெய்வங்களாகவே மதிக்கப்படுவர். உலகம் போற்றும்படியாகப் பெண்கள் வாழவேண்டுமென்ற குறிக்கோளுக்காகவே, ''உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்'' என்று கூறினர்.

விதி என்பது மனித சக்திக்கு அப்பாற்பட்டது. உலகிலே எல்லோரும் நல்லவர்களாகவே வாழ எண்ணுவர். ஆனால் சூழ்நிலையும், சந்தர்ப்பங்களும் தம்மைச் சதி செய்யும்போது, தாம் அதற்கு இரையாகி விடுகிறார்கள். இராமனும் தான் காட்டிற்குச் செல்ல நேர்ந்ததுபற்றி இலக்குவனிடம் ''இது யார் குற்றமுமில்லை; விதியின் பிழை'' என்று கூறுகிறான். புறநானூற்றிலும் இக்கருத்துக் கூறப்படுகிறது. ''எவ்வாறு ஆற்றுநீர் ஓடும் திக்கிலே ஓடம் ஓடுகிறதோ, அவ்வாறே நாமும் விதியின் வழியிலே செல்லுகிறோம். ஆகையால் காட்சிக்குப் பெரியவர்களாகத் தோன்றுபவர்களைப் போற்றுவதும், காட்சிக்கு எளியவர்களாகத் தோன்றுபவர்களை இகழ்வதும் கூடாது'' என்பர்.

இக்கருத்தை ஒட்டியே யேசு பெருமானும் ஓரிடத்தில் கூறுவதைக் காண்கிறோம். யேசு பெருமான் வீதி வழியே, சென்றுகொண்டிருக்கும்போது, அவரைப் பழிக்க எண்ணிய அவர் விரோதிகள், ''வழிகாட்டியே, இதோ பாரும்: உங்

*King can do no wrong.*

†*''Sovereign was more responsive to the people, than the elected head, though not responsible.''*

கள் ஆண்டவன் கருணுமூர்த்தி, அன்பின் பிறப்பிடம் என்று போற்றுகின்றீரே? இதோ போகும் குருடனைக் கண்டீரா? அவன் பிறந்தது முதல் உலகத்தின் எழிலை அறியாதவன்; பிறவிக் குருடு; அஃது அவன் செய்த குற்றமா? அவன் தந்தை செய்த குற்றமா? என்ருர்கள். யேசுபெருமான் அவர்களைப் பார்த்து "அப்பனே, அவன் செய்த குற்றமு மில்லை; அவன் தந்தை செய்த குற்றமுமில்லை; எல்லாம் ஆண்டவன் ஆணை" என்ருர்.

விவிலிய நூலில் யேசுபெருமான் கூறியதன் விளக்கம் இதுதான்: "ஆண்டவன், இவனது குருட்டுத் தன்மைக்குக் காரணம் இவன் குற்றமா; இவன் தந்தை செய்த குற்றமா என்பதை அறிவான்; இது நமது வேலையல்ல; மக்களுக்கு நன்மை செய்வதே நம் கடமை; ஆணையாகிய விதியின் வழியிலே செல்லும் மக்களினத்தைப் போற்றவோ தூற்றவோ நமக்கு உரிமையில்லை"—என்பது.

விவிலிய நூலில் எழும் கேள்வி பிறவிக் குருடன் இப் பிறப்பில் குற்றம் செய்ய முடியாதாகையால், முற்பிறப்பை யும், விதியையும் அது ஒத்துக்கொள்கிறதென்பதைக் காட்டுகிறதல்லவா? மற்றும் பலவிடங்களிலும் "விதியை" நம்பும் வகையில் அந்நூலில், யேசுநாதர் குறிப்பிட்டிருக் கிருர். ஆகையால் விதியை யாரும் மறுக்கவோ மறைக் கவோ முடியாது. இத்தகைய விதியினின்று யாருமே தப்ப முடியாது என்பதுதான் சிலப்பதிகாரத்தின் மூன்ருவது பயன்.

விதி தானுகவே யாதும் செய்துவிட முடியாது. அது சூழ்வதற்கு ஒரு காரணம் வேண்டும். இங்குக் கண்ணகியின் சிலம்பு விதியின் சூழ்ச்சிக்குக் காரணமானதால், இந்நூல் ஆசிரியர், "சிலப்பதிகாரம்" என்ற பெயரால், பாட்டுடைச் செய்யுளை இயற்றினுர்.

சிலப்பதிகாரம் ஓர் அவல நாடகம். துன்ப முடிவே கொண்ட இந்தக் காவியம், நம்முடைய நெஞ்சை அள்ளும் திறனுடையதாகவுள்ளது. இந்த முன்னுரையுடன் நாம் இனிச் சிலப்பதிகாரத்தைத் தொடங்குவோம்.

## 3. மங்கல வாழ்த்து

ஒரு புலவன், நூலை இயற்றும்போது, கடவுள் வணக்கத்துடனேதான் நூலைத் தொடங்குவது மரபு. ஆனால் சிலப்பதிகாரத்தின் முதல் வரிகள் பின்வருமாறு அமைந்துள்ளன:—

''திங்களைப் போற்றுதும். திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண்குடை போன்றுஇவ்
அங்கண் உலகளித்தலான்.

ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
காவிரி நாடன் திகிரிபோல் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்''

''மாமழை போற்றுதும், மாமழை போற்றுதும்
நாமநீர் வேலி யுலகிற்கு அவன் அளிபோல்
மேல்நின்று தான்சுரத்த லான்

பூம்புகார்ப் போற்றுதும் பூம்புகார்ப் போற்றுதும்
வீங்குநீர் வேலி யுலகிற்கு அவன் குலத்தோ
ஓங்கிப் பரந்தொழுக லான்''

எனவரும்.

சந்திரனாகிய வெண்ணிலாவை நாம் போற்றவேண்டும். ஏன்? சோழனுடைய வெண்கொற்றக் குடையைப் போல் உலகிற்குத் தட்பம் செய்து வருகிறான் சந்திரன். காவிரி நாட்டையுடைய சோழனின் ஆணைச் சக்கரத்தைப்போல, சூரியன் உலகத்தைச் சுற்றிவந்து காப்பாற்றுவதால், நாம்

அவனையும் போற்ற வேண்டும். எவ்வாறு சோழன், கடல் சூழ்ந்த இவ்வுலகத்தைத் தன் அன்பினால் பாதுகாக்கிறானோ அதுபோல், விண்ணிலிருந்து நம்மிடத்தே மழையைப் பெய்து நம்மை மகிழ்விப்பதால் அதனையும் போற்றுவோம். சோழனுக்குத் தலைநகராக விளங்கி, அவன் நாட்டு மக்களுக்கு இடம் தந்து பாதுகாப்பதால் பூம்புகாரையும் போற்றுவோம் என்பது பொருள்.

உலகம் சூரியனைச் சுற்றி வருகிறது என்பது விஞ்ஞானம் கூறும் உண்மை. ஆனால் இளங்கோவடிகள், சூரியன் உலகத்தைச் சுற்றி வருகிறது என்று கூறுகிறார். எது உண்மை? மிகப் பெரிய விஞ்ஞான அறிஞனான ஐன்ஸ்டினும் 'சூரியன் உலகத்தைச் சுற்றுகிறதா உலகம் சூரியனைச் சுற்றுகிறதா என்பதை அறுதியிட்டுக் கூற முடியாது'' என்கிறார். உலகிலே எந்தப் பொருளும் நிலையாக இருப்பதில்லை. அதுபோலச் சூரியனும் நிலையாக ஓரிடத்தில் நிற்பதென்பது சாத்தியமில்லை. சூரியனும் பூமியும் பிறவும் சுற்றிக் கொண்டே இருக்கின்றன என்பது உண்மை எனப் பலரும் நினைக்கத் தொடங்கி விட்டனர். ஆகையால் இளங்கோவடிகள், சூரியன் மேரு மலையை (உலகைச்) சுற்றி வருவதாகக் கூறுவது தவறு எனக் கொள்ள முடியாது.

இளங்கோவடிகள் சைவ சமயத்தவரானால், தம் காப்பியத் தொடக்கத்திலே, சிவபெருமானையோ விநாயகரையோ முருகனையோ வழிபடும் பாடல்களை எழுதுவார் என்று நாம் நினைப்போம். ஆனால் அவர், சந்திரன், சூரியன், மழை, பூம்புகார் முதலானவற்றை வாழ்த்தியுள்ளார். என்றாலும் இவர் சைனரோ எனச் சிலர் ஐயுறுகின்றனர். சந்திர சூரியர்களையும் மழையையும் பிறவற்றையும் பரவுவதை நோக்கினால் சைனர் என்பதும் தப்பாகத் தோன்றுகிறது.

இயற்கை வணக்கம் தொன்று தொட்டு வந்தது. அது நம் பாரதநாட்டில் மட்டுமன்றி, உலகம் முழுவதிலும் பரவியிருந்தது. ஆங்கில நாட்டுக் கவிஞரான வோர்ட்ஸ் வொர்த் இயற்கை அன்னையின் எழிலிலே மயங்கியிருந்தார்.

''இயற்கை அன்னை தன்னை அன்புடன் விரும்பும் உள்ளங்களை ஒருநாளும் கைவிட மாட்டாள்'' என்று அவர் கூறினார்.*நம் நாட்டு அறிஞரும், காட்டிலும் மலையிலும் மடுவிலும் கடவுளின் வண்ணத்தைக் கண்டார்கள்.இளங்கோவடிகள் மூவேந்தர்களுக்கு உரிய கதையை மட்டும் எழுதவில்லை. எல்லாச் சமயத்தார்களும் போற்ற வேண்டுமென்று எண்ணியதால் எக்கடவுளையும் குறிக்காது, 'இயற்கை' வணக்கத்துடன் தமது காப்பியத்தைத் தொடங்கினார்.

இளங்கோவடிகள் காலத்தில் இந்திரனைக் கடவுளாகவே கருதி மக்கள் வழிபட்டனர். மழை பெய்வதற்குக் காரணமானவன் இந்திரன் என்று நினைத்தனர். சூரியன் வேத காலத்தில் மித்திரா என்று அழைக்கப்பட்டான். ஆரியரல்லாதார், சந்திரன், சூரியன் (மித்திரா), அக்னி, இந்திரன் முதலிய தெய்வங்களிடத்தில் தெய்வீகத்தன்மை இருப்பதாக நினைக்கவில்லை. வேதத்தில் இந்திரன் தான் முழுமுதற் கடவுள் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் கால மாறுதலால் இடிக்கும் மழைக்கும் நாயகன் அண்டசராசரங்களையும் அழிக்கும் வல்லமை உடையவன், வேள்வி அவிர்ப்பாகத்திற்கு உரியவன் என்று கூறப்பட்ட இந்திரன் தேவலோகத்தில் வாழும் அரசன் என்று கருதப்பட்டான். அதோடு மட்டுமல்லாமல் அவன் சிவனிடமும் விஷ்ணுவிடமும் தன்னைப் பாதுகாக்கும்படி வரம் பெறுகின்ற இழிநிலை காணப்படுகின்றது.

வேதத்தில் கூறப்பட்ட கடவுள்கள் சிறிது சிறிதாக மறைந்து சிறு தெய்வங்களாகப் புராண இதிகாசங்களிலே தோன்றின. ஆயினும் அவைகளுக்கு விழா எடுப்பதையும் பூசை செய்வதையும் மக்கள் விடவில்லை.

ஒளி தருவதால் சந்திரனையும் சூரியனையும் வணங்கினார்கள். மழையில்லாவிட்டால் வாழ்க்கை நடைபெறாததலால் அம்மழையையும், அரசர் காவா விட்டால் மக்கள் வாழ வழியில்லாது போகுமாதலால், அவரது நகரையும் வழிபட்டார்கள்.

---

**Nature never did betray the heart that loved her.*

பூம்புகார் எத்தகைய நகரம் என்பதை மிகவும் சிறப்பாகக் கூறுகிறார் அடிகள். இமயத்திலும் பொதிகையிலும் மற்றும் எங்கும் காணமுடியாத சிறந்தவர்கள் வாழ்கின்ற இடம் அது. பூஞ்சோலையில் மயிலாட, குயில்கள் இசைபாட, மாலை மருங்கசைய, காவிரியாறு அங்கு ஓடியது. அந்தக் காவிரியாறு நாட்டிற்கு நீர்வளத்தையும் நிலவளத்தையும் தந்தது.

"பொறை ஒருங்கு மேல் வருங்கால் தாங்கி இறைவற்கு
இறை ஒருங்கு நேர்வது நாடு"

என்று வள்ளுவர் கூறும் இலக்கணத்திற்கு ஓர் இலக்காக அமைந்திருக்கிறது புகார் நகரம். இமயமும் பொதியமும் எவ்வாறு அழியாது வாழுமோ, அது போலவே. புகார் நகரும் அழியாது. "உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே" என்று கூறுவர் சான்றோர். அந்த உயர்ந்தவர்கள் பலர் புகாரிலே வாழ்ந்து வருதலால், அதற்கு முடிவுகால முண்டென்று கூறமுடியாது.

இமயத்திலும் பொதிய மலையிலும் வாழும் முனிவர்களுக் கொப்பாகப் புகாரிலுள்ள வணிகர்களிருந்தனர். வணிகப் பெருமக்கள் அந்தக் காலத்தில் நன்கு மதிக்கப்பட்டதை இதிலிருந்து காணலாம்.

துறக்கம் என்று ஒன்று இருக்குமானால் அது இதுதான் என்று கூறும்படியிருந்தது புகார் நகரம். போகத்திற்கே உரியதென்று கருதப்பட்ட நாக நாட்டைப் போலவும், தேவலோகத்தைப் போலவும் இது காட்சி தந்தது. இந்த அழகிய நகரத்தின் சிறப்பைக் கூறுவதென்பது முடியாதாயினும், அடிகளின் பாக்கள் நம்மை அந்நகருக்கே கொண்டு சென்று விடுகின்றன. அவை:

"பொதியமாயினும் இமயமாயினும்
பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பின் புகாரே யாயினும்

நடுக்கின்றி நிலேஇய என்ப தல்லதை
ஒடுக்கம் கூறுர் உயர்ந்தோர் உண்மையின்
முடிந்த கேள்வி முழுதுணர்ந்தோரே''

அதனுல்,

''நாக நீள்நகரொடு நாகநாடதனெடு
போகநீள் புகழ்மன்னும் புகார் நகர்''

எனவரும்.

உலகம் முழுவதும் போற்றிப் புகழக்கூடிய பண்பும், வள்ளன்மையும், செல்வமும் ஒருங்கே கூடிய மாநாய்கன் என்பான் அந்நகரிலே வாழ்ந்து வந்தான். அவனுக்கு ஒரு மகளிருந்தாள். பன்னிரண்டு வயதுடைய அவள் பெயர் கண்ணகி. ஒரு பெண்ணே மிகவும் சிறந்தவள் என்று கூற வேண்டுமாளுல், யார் அதைக் கூறுவது சிறந்தது என்பதைச் சிந்தித்துப் பார்த்தார் அடிகள். ஒரு ஆண்மகன் அவளைச் சிறந்தவள் என்று கூறுவதால் யாதொரு பயனுமில்லை. ஆகையால் பெண்களெல்லாம் புகழக்கூடிய பேரழகும், குணமும் வாய்ந்தவள் நம் காப்பியத் தலைவி என்று கூறினுர். இந்த உண்மையை நாம் கம்பனிடத்தும் காண்கிறேம்.

வனத்திலே இருந்த சீதையைச் சூர்ப்பனகை மேலும் கீழும் பார்த்தாள். உடனே அவள் ''அழகிற்கு ஓர் எல்லை இல்லை என்பதை நான் இப்பொழுதுதான் தெரிந்துகொண்டேன்; இந்தப் பெண்ணின் அழகைக் கண்டபின், பெண்ணுகிய எனக்கே வேறு பொருளின்மேல் நாட்டம் செல்லவில்லையே! பிற ஆடவர் கண்டால் அவர் மனம் என்ன பாடுபடும்!'' என்று கூறுவாளாய்,

''பண்புற நெடிதுநோக்கிப் படைக்குநர் சிறுமை அல்லால்
எண்பிறங்கு அழகிற்கெல்லை யில்லையாம் என்று நின்றுள்
கண்பிற பொருளிற் செல்லா கருத்தெனின் அஃதேகண்ட
பெண்பிறந் தேனுக்கு என்றுல் எனப்படும் பிறர்க்கு?''

என்ருர்.

இதே கருத்தை அடிகள் இரண்டு வரியில் கூறி முடித்து விடுகிறார்:

பெண்கள் தொழுது ஏத்தும் நற்குணமும் அழகும் ஒருங்கே அமையப் பெற்றவள் கண்ணகி என்பாராய்,

''மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னும் கண்ணகி என்பாள் மன்னோ''

என்று இசைக்கின்றார்.

அழகிற்கு இலக்குமியையும் கற்பிற்கு அருந்ததியையும் கூறுவது மரபு. தாமரைப் பூவிலுள்ள இலக்குமியை நாம் கண்டதில்லை. அவளுடைய அழகையும் வனப்பையும் கேட்டிருக்கின்றோம். இலக்குமி என்ற திருவுடைப் பெண் தெய்வம் எவ்வாறு இருப்பாள் என்று காண வேண்டுமானால், கண்ணகியைக் கண்டாலே போதும். கவிஞர்கள் சாதாரணமாக இலக்குமியைப்போல அழகுள்ளவள் இவள் என்று கூறுவதுதான் இயல்பு. ஆனால் அடிகள் இங்கு அதை மாற்றி, கண்ணகியைப் போலப் பேரழகு உடையவள் இலக்குமி என்று கூறி விடுகிறார். கற்பைக் கூறுமிடத்தும், கண்ணகியினுடைய திறத்தைப் போலத்தான் அருந்ததியின் ஒழுக்கத்திறம் இருந்திருக்க வேண்டும் என்று கூறுகிறார். உபமானம் உப்மேயமாகவும், உபமேயம் உபமானமாகவும் மாறியிருப்பதால், இலக்குமியும் அருந்ததியும் அழகிலும் கற்பிலும் எவ்வாறிருந்தார்களோ நாம் அறியோம். ஆனால், இவள் அவர்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறாள் என்று அடிகள் கூறுவதன் சிறப்பு வேறு எங்கும் காண முடியாது. இதனை அவர்

''அவளும் தான்
போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்
தீதிலா வடமீனின் திறம்இவள் திறம் என்றும்
மாதரார் தொழுதேத்த'' இருந்தாள்

என்று உரைக்கின்றார்.

அழகும் குணமும் நிறைந்த மணப்பெண்ணுக்கு ஏற்ற மணமகனைப் பெற்றோர்கள் தேர்ந்தெடுத்தனர். அவன் எப்படிப்பட்டவன் என்பதைக் கூறவும் வேண்டுமோ? செல்வத்தில் மிகுந்தவன்; பெருஞ் செல்வம் படைத்த மாசாத்துவான் மகன்; பதினாறு வயதை அடைந்த அவன் கோவலன் என்ற பெயரினன்; அவனுடைய புகழ் மண்ணுக்கு முழுவதும் பரந்து எல்லா உலகும் அறியும் படியாகிவிட்டது. முழு நிலவை ஒத்த இனிய மொழியை உடைய பெண்கள் பாராட்டுகின்ற பெருமையுடையவன். இதனை இளங்கோ எங்ஙனம் கூறுகிறார் என்பதைப் பாருங்கள்.

''அவனுந்தான்,
மண்தேய்த்த புகழினான், மதிமுக மடவார் தம்
பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக்
கண்டேத்தும் செவ்வேள் என்று இசைபோக்கிக் காதலால்
கொண்டேத்தும் கிழமையான் கோவலன் என்பான்
மன்னோ''

என்று பாடுகின்றார்.

# 4. கண்ணகி திருமணம்

கண்ணகி கோவலர் திருமணத்தைக் கண்டு மகிழ அவர்களது பெற்ருேர் பெரிதும் விரும்பினர். யானையின்மீது மங்கல மகளிரை விடுத்துத் திருமணத்தைக் கண்டு களிக்க வாருங்கள் என்று நகர மக்களை அழைத்தனர். இதனை,

''அவரை
இருபெருங் குரவரும் ஒரு பெரு நாளால்
மணவணி காண மகிழ்ந்தனர், மகிழ்ந்துழி,
யானை எருத்தத்து அணியிழையார் மேலிரீஇ
மாநகர்க்கு ஈந்தார் மணம்''

என்று வருணித்துள்ளார் இளங்கோவடிகள்.

திருமணம் நடக்கும் காலத்திலே முரசங்கள் முழங்கின. முருடுகள் அதிர்ந்தன; அரசர்கள் வழியிலே திருமணம் நடந்தால் எவ்வாறிருக்குமோ, அவ்வாறு சிறந்த முறையிலே இவர்களுடைய திருமணம் நடைபெற்றது. தூண்கள் எல்லாம் நன்ருக அலங்கரிக்கப்பட்டிருந்தன. அவற்றின்மேல், நீலத் துணிகளை விதானித்திருந்தது, மேகங்களை விரித்திருந்தது போலக் காட்சியளித்தது. எந்த நாளிலே திருமணம் நடைபெற்றது என்பதை இளங்கோவடிகள் கூற மறக்கவில்லை.

சந்திரனுக்கு 27 மனைவியர்கள் (நட்சத்திரங்கள்) உண்டு. ஆனுல் அவர்களுள் அவன் உரோகிணியையே மிகவும் விரும்புவான். சந்திரன் பன்னிரண்டு இராசிகளையும் ஒரு மாதத்தில் சுற்றி வந்துவிடுவான், ஆகையால் அவன் ஒவ்வொரு இராசியிலும் நிலைத்து நிற்பது $2\frac{1}{4}$ நாட்கள்தான்.

இடப இராசியிலே அவன் உரோகிணி நட்சத்திரத்துடன் சேருகிறான். அந்த வீடு அவனுடைய உச்ச வீடாகும். ஆகையால் உரோகிணி நட்சத்திரம் திருமணத்திற்குச் சிறந்தது என்று கூறுவர். அந்த நாளும் நட்சத்திரமும் கூடிய நல்ல காலத்திலே மணமக்கள் அம்மி மிதித்து அருந்ததி பார்த்துப் பார்ப்பனர் மறைவழி காட்டத் தீவலம் வந்தனர். இதனை

''அவ்வழி,

முரசு இயம்பின, முருடு அதிர்ந்தன,
முறையெழுந்தன பணிலம், வெண்குடை
அரசு எழுந்ததோர் படியெழுந்தன;
அகலுள் மங்கல அணியெழுந்தது;
மாலை தாழ் சென்னி வயிரமணித் தூணத்து
நீல விதானத்து நித்திலப் பூம்பந்தர்க் கீழ்
வான் ஊர் மதியம் சகடு அணைய, வானத்துச்
சாலியொருமீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலம் செய்வது''

என்று குறிக்கின்றார்.

பெண்களெல்லாம், கண்ணகியை மகிழ்வோடு வாழ்த்தத் தொடங்கிக் ''காதலர்களாகிய நீங்கள், பிரியாமலிருக்க வேண்டும்; உங்களுடைய அணைப்பு நெகிழ்ந்துவிடக் கூடாது; உங்களுக்குத் தீது ஏதும் வரக்கூடாது'' என்று அவர்கள் அவ்வாழ்த்தில் கூறினர். இதனை,

''விரையினர் மலரினர் விளங்கு மேனியர்
உரையினர் பாட்டினர் ஒசிந்த நோக்கினர்
சாந்தினர் புகையினர் தயங்கு கோதையர்
ஏந்திள முலையினர் இடித்த சுண்ணத்தர்
விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர்
போதொடு விரிகூந்தல் பொலன்நறுங் கொடியன்னார்

காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்
தீதறுக எனஏத்திச் சின்மலர் கொடுதூவி
அங்கண் உலகின் அருந்ததி அன்னாளை
மங்கல நல்லமளி ஏற்றினார்''

எனச் சிலப்பதிகாரம் செப்புகின்றது.

சோழ நாடாதலால், அங்குள்ள அரசனைச் சிறப்பிக்க வேண்டிச் சோழன் கரிகாலனுடைய புலிக்கொடி இமயத்தில் என்றும் நிலைத்து நிற்பதாக எனக் கூறி மங்கல வாழ்த்துப் பாடலை முடிக்கின்றார்.

''இப்பால் இமயத்து இருத்திய வாள்வேங்கை
உப்பாலைப் பொற்கோட்டு உழையதா எப்பாலும்''

விளங்குக என்பது.

# 5. மணையறம்

மாலை நேரம்; ஒரு காட்டாற்றின் கரை; கன்னிப் பெண்கள் மணல் வீடு கட்டி விளையாடிக்கொண்டு இருக்கின் றார்கள். மன்றல் மணக்கும் தென்றல் காற்றுச் சிலுசிலு வென அடித்துக் கொண்டிருக்கிறது. அங்கு வருகிறான் ஓர் இளங்காளை. கட்டியிருந்த மணல் வீடுகளைக் காண்கிறான். இளமையின் மிடுக்கு அவனைக் குறும்பு செய்யத் தூண்டு கிறது. அவர்களை நோக்கி. நானும் உங்களுடன் விளையாட வரலாமா?'' என்று கேட்கிறான். குறும்புக்காரப் பெண்கள் சும்மாவா இருப்பார்கள்? ''ஆம். நாம் இருவரும் வீடு கட்டி விளையாடலாம்; என்ன விளையாட்டு?'' என்று ஒருத்தி கேட்கிறாள். ''நாம் இருவரும் கலியாண விளையாட்டு விளையாடலாம்'' என்கிறான் அவன். ''கலியாண விளையாட் டுக்குக் கூப்பிடுகிறாயே; உனக்குச் சொந்தமாக வீடு இருக் கிறதா?'' என்று கேட்கிறாள். ''ஆம், என் தந்தை இவ்வூரி லேயே பெரிய பணக்காரர், எங்கள் வீடு மிகப் பெரியது'' என்றான் அக்காளை. அவள் ஏளனமாக அவனைப் பார்த்து, ''உன்னுடைய தந்தை வீட்டைப் பற்றிக் கேட்கவில்லை; உனக்குச் சொந்தமாக வீடு இருக்கிறதா? நீயாகப் பொருள் தேடி உன்னை வளப்படுத்திக் கொள்ள வழி செய்திருக்கி றாயா?'' என்று கேட்கிறாள். ''இல்லை'' என்று பதில் வருகிறது. ''தனக்கென்று ஒன்றும் தேடிக்கொள்ள முடியாமல் தந்தை யின் நிழலில் வாழ நினைக்கும் நீயும் ஓர் ஆண்மகனா? என் முன் நில்லாதே போ; உன்னைப் போன்றவர்களை ஒரு பெண்ணும் மணக்க இசையாள். நானும் உன்னை மணக்கப் போவதில்லை. தெரிகிறதா? இனி உன்னுடன் விளையாட முடியாது போ'' என்ற கருத்துப்பட

"பெற்றேம் யாம் என்று பிறர் செய்த இல் இருப்பாய்
கற்றதிலை மன்ற காண்"*

என்று கூறிவிடுகிறுள்.

"தன்னைத் தான் பாதுகாக்கும் தன்மையை அல்லவா, இப்பெண் சிறப்பாக எடுத்துச் சொல்லுகிறுள்" என்று வியந்து கொண்டே அவன் போகிறுன். இது சங்ககால வாழ்க்கையில் ஒரு கூறு.

இனிச் சிலப்பதிகார காலத்துக்கு வருவோம். சிலப்பதிகாரத் தலைவன் கோவலன். அவன் தனக்கென ஒரு மாளிகை வகுத்துக்கொண்டு சிறப்புடன் வாழ்ந்திருந்தான் என்பதைப் பின்னர்க் கூற இருக்கிறுர் ஆசிரியர். கண்ணகியும், அவனுடன் தனியே குடித்தனம் செய்து வந்தாள். இதனைக் கூறுவதுதான் மனையறம் படுத்த காதையின் சிறந்த நோக்கம். தமிழர்களுடைய நாகரிகமும் பண்பாடும் மிகவும் சிறந்தவை. தந்தை வாழ்ந்த காலத்திலேயே அவருக்கு மேலாக வாழவேண்டுமென்பதே மக்கள் குறிக்கோள். ஆங்கில மரபிலே, இன்னுரின் மகன் இவன் என்று குறிப்பது வழக்கம். ஆனுல் தமிழர் சமுதாயத்திலே இன்னுருடைய தந்தை இன்னுர் என்று கூறுவது இயல்பாக அமைந்துவிட்டது. ஆதன் (Adan) தந்தை ஆந்தை; கீரன் தந்தை கீரந்தை; சாத்தன் தந்தை சாத்தந்தை எனவரும். ஆதன் என்பதை ஆதம் என்று கூறலாம், ஆதம் என்பதற்கு விவிலிய நூலிலே (பைபிள்) முதல் மனிதன் என்று பொருள். உலகத்திலே முதன் முதலில் படைக்கப்பட்ட முதல் மனிதன் ஆதம்தான். அது போலவே தமிழில் ஆதன் என்பதற்கும் முதல் மனிதன் [ஆதி மனிதன்] என்றுதான் பொருள். முதல் மனிதனுக உள்ள தந்தையே மகன் பிறந்த பின் அவனுடைய தந்தையென்ற பெயரிலே உலவ வேண்டுமானுல் மகன் எத்துணைச் சிறப்புடையவனுக இருக்கவேண்டும் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். வள்ளுவப் பெருந்தகையும் இதனை, "மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி

* முல்லைக்கலி

இவன் தந்தை என் நோற்றான் கொல் என்னும் சொல்" உண்டாக ஒழுகுதல் என்று கூறுகிறார்.

இனி, கண்ணகியும் கோவலனும் எவ்வாறு இன்பம் கண்டார்கள் என்பதைப் பார்ப்போம். அவர்கள் வாழ்ந்த ஊர் மிகவும் சிறப்புடையது. கடற்கரை நகரம்; கடலோடிகள் மிகுந்து இருந்தது அந்த நகரம்; ஒலிக்கும் கடலை வேலியாகவுடைய இந்தச் சிறந்த உலகத்திலுள்ளோர்களெல்லாம் ஒருங்கு கூடி வரினும் அவர்களுக்கு இல்லை என்னாது வேண்டும் உணவு தந்து பேணத்தக்க வளமுடைய நகரம்; கடல் வாணிபத்திலும் உள்நாட்டு வாணிகத்திலும் மிகச்சிறந்து விளங்கியவர்களும், குல தருமத்திற் குன்றாத புகழுடையவர்களுமான செல்வர்களுக்குப் பிறந்த கோவலனும் கண்ணகியும் மயனால் கட்டப்பட்டது போன்றதொரு மாளிகையிலே வாழத் தொடங்கினர். அந்த மாளிகை, நாம் இப்பொழுது அமெரிக்க நாட்டிலே காணப்படுவது போல உயர்ந்த கட்டிடமாக அமைந்து இருந்தது. செல்வர்கள், ஏழு அடுக்கு மாளிகையிலே ஏற்றமுடன் வாழ்க்கையைத் தொடங்குகிறார்கள். இதனை,

"உரைசால் சிறப்பின் அரசுவிழை திருவின்
பரதர் மலித்த பயங்கெழு மாநகர்
முழங்குகடல் ஞாலம் முழுவதும வரினும்
வழங்கத் தவாஅ வளத்த தாகி
அரும்பொருள் தருஉம் விருந்தின் தேஎம்
ஒருங்கு தொக்கன்ன உடைப்பெரும் பண்டம்
கலத்தினும் காலினும் தருவனர் ஈட்டக்
குலத்தில் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்
உத்தர குருவின் ஒப்பத் தோன்றிய
கயமலர்க் கண்ணியுங் காதல் கொழுநனும்
மயன் விதித்தன்ன மணிக்கால் அமளிமிசை
நெடுநிலை மாடத்து இடைநிலத்து இருந்துழி"

என்று அடிகள் கூறுகிறார்.

நறுமணம் கமழும் மலர்களில் உள்ள தேனை மகிழ்ந்து உண்ட வண்டுகள் எங்கும் ஓடி இன்புற்றிருந்தன. இள வேனிற் காலத்தில் இளந்தென்றல் மலர்களின் மெல்லிய மணத்தைத் தாங்கி எங்கும் பரப்பி இன்பம் தந்தது. வண்டு களும் மலரின் மணமும் அந்த மாளிகையில் நுழைந்து சாள ரங்களைத் திறந்தவுடன் அவை அச்சாளரங்களின் வழியாக உள்ளே நுழைந்தன. காதலர்கள் இருவரும், அம்மாளிகையில் உள்ள மணி நிலா முற்றத்தில் இருந்த மேடையிலே அமர்ந் திருந்தார்கள். அம்மேடையிலே வீசிய மெல்லிய பூங்காற் றின் குளிர்ச்சி அவர்களை இன்புறச் செய்தது. மலரின் மண மும், மாலை மதியமும், வீசுதென்றலும், விளங்கிள வேனி லும் அடியார்க்குத்தான் இறைவனிடத்தில் காதலை உண் டாக்கும் என்பது இல்லை; இளங் காதலர்களையும் மகிழ்விக் கும் என்பதைத் தெள்ளத் தெளியக் காட்டின. அவர்கள் ஒருவரை ஒருவர் கண்டு மகிழ்வெய்திக் காதலிலே சிறந்து விளங்கினார்கள். இதனை அடிகள்:

"கழுநீர் ஆம்பல் முழுநெறிக் குவளை
அரும்பு பொதியவிழ்ந்த சுரும்பிமிர் தாமரை
வயல் பூ வாசம அளைஇ அயற்பூ
மேதகு தாழை விரியல் வெணதோட்டுக்
கோதை மாதவி சண்பகப் பொதும்பர்த்
தாது தேர்ந்து உண்டு மாதர் வாள்முகத்துப்
புரிகுழல் அளகத்துப் புகல் ஏக்கற்றுத்
திரிதரு சுரும்பொடு செவ்வி பார்த்து
மாலைத் தாமத்து மணிநிரைத்து வகுத்த
சோலைச் சாளரக் குறுங்கண் நுழைந்து
வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்
கண்டு மகிழ்வெய்திக் காதலில் சிறந்து"

இன்புற்றார்கள் என்று இசைக்கின்றார்.

காதலர் இருவர் கருத்து ஒருமித்து வாழ்கின்றபோது, பல நிகழ்ச்சிகளை ஓவியமாக எழுதவும் அவர்களின் சிந்தனை கள் செல்லுகின்றன. தன் ஓவியத் திறனைக் காட்ட நினைக்கும்

காதலன் தன்னுடைய காதலியின் தோள்களேயே பயன் படுத்திக் கொண்டு விடுகிருன். அதுபோலவே, கோவல ஞும், கண்ணகியின் தோள்களிலே சித்திரங்கள் வரையத் தொடங்குகிருன். காமனுடைய கணேயாகிய கரும்பும் வல்லிக்கொடியும் கண்ணகியின் தோள்களே அலங்கரிக்கின் றன. இவர்கள் இருவரும் இருந்த நிலே, சந்திரனும் சூரிய னும் ஒருங்கே சேர்ந்திருந்தது போலக் காட்சி தந்தது. அவர்களுடைய இன்ப விளேயாட்டில், அவர்கள் அணிந் திருந்த மாலேகள் நிலேகுலேந்து மாறிவிட்டன. கண்ணகியின் இன்பத்திலே கருத்தைப் பறிகொடுத்த கோவலன் பலவாறு பேசலுற்ருன். இக்கருத்தை அடிகள்:

''விசைமலர் வாளியொடு வேனில் வீற்றிருக்கும்
நிரைநிலே மாடத்து அரமியம் ஏறிச்
சுரும்புணக் கிடந்த நறும்பூஞ் சேக்கைக்
கரும்பும் வல்லியும் பெருந்தோள் எழுதி
முதிர்கடல் ஞாலம் முழுவதும விளக்கும்
கதிர்ஒருங்கு இருந்த காட்சி போல
வண்டுவாய் திறப்ப நெடுநிலா விரிந்த
வெண்தோட்டு மல்லிகை விரியல் மாலேயொடு
கழுநீர்ப் பிணேயல் முழுநெறி பிறழத்
தாரும் மாலேயும் மயங்கிக் கையற்றுத்
தீராக் காதலின் திருமுக நோக்கிக கோவலன் கூறும்''

எனக் கூறுகின்ருர்.

வானத்தில் விளங்கும் பிறைச்சந்திரன் இறைவனது சடைமுடியில் அணியப்படும் பெருமை உடையது; இருந்தா லும், திருப்பாற்கடலில் பிறந்ததினுல் அது திருமகளே நேரும் கண்ணகிக்கும் உரியது; அதனுல் அந்த இறையவன் உனக்கு நெற்றியாக அந்தச் சந்திரனேத் தருதற்கு உரிமையுண்டு; ஆகவே உன் நெற்றி பிறைச் சந்திரனேப் போல அழகு கொண்டு விளங்குகிறது என்பானுய்.

''குழவித் திங்கள் இமையவர் ஏத்த
அழகொடு முடித்த அருமைத் தாயினும்
உறுதின் நின்னேடு உடன்பிறப்பு உண்மையின்
பெரியோன் தருக திருநுதலா கென''

என இவ்வாறு கோவலன் கண்ணகியைப் பாராட்டவும், அவள் நாணத்தால் புருவத்தை நெளித்து அவனை நோக்கினுள். அவன் அவளுடைய புருவத்தைப் பாராட்டத் தொடங்கி உன்னுடைய புருவங்கள் காமனுடைய கரும்பு வில் போல இருக்கின்றன. அவன் ஏன் உனக்குத் நன் கரும்பு ஆயுதத்தைக் கொடுத்தான்? போரில் மேம்படுகின்ற வீரர்களுக்கு நல்ல ஆயுதங்களைப் பரிசாகக் கொடுப்பது மரபு. அந்த முறையிலேதான் மன்மதன் தன் கரும்பு வில்லை உனக்கு ஆயுதமாகக் கொடுத்திருக்கிருன் என்ற கருத்துப்பட,

''அடையார் முனையகத்து அமர்மேம் படுநர்க்குப்
படை வழங்குவதோர் பண்புண்டு ஆகலின்
உருவிளாளன் ஒருபெருங் கருப்பு வில்
இருகரும் புருவமாக வீக்க''

என்று கோவலன் கண்ணகியைப் பாராட்டுகின்ருன்.

திருமகளைக் காண விரும்புகிறவர்கள், கண்ணகியைக் காண்பார்களேயானுல் அந்த இலக்குமியைக் கண்டது போலவே மகிழ்வார்கள். இதே கருத்தையே தான் கோவலனும் கூறுகிருன்.

திருப்பாற்கடலைக் கடைந்தபோது, அமுதம் தோன்றுவதற்கு முன் திருமகள் தோன்றினுளல்லவா? அதனுல், கோவலன் கண்ணகியைப் பார்த்து, ''நீ அமுதம் பிறப்பதற்கு முன் பிறந்தவளாதலால் உனக்குப் பாதுகாவலாக, அந்தக் கடலில் தோன்றிய வச்சிராயுதத்தை இந்திரன் உனக்கு இடையாகத் தந்திருக்கிருன்'' என்பான்.

''மூவாமருந்தின் முன்னர்த் தோன்றலின்
தேவர் கோமான் தெய்வக் காவல்

படை நினக்கு அளிக்க அதன் இடைநினக்கு
இடையென''

அளித்தனன் என்று கூறுகின்ருன்.

''கோவலனைப்பற்றி அடிகள் கூறும்போது அவன் ''கண்ணுல் கண்டு வணங்கத்தக்க முருகன்'' என்று பாராட்டினுர். முருகக் கடவுள் கண்ணுல் காணப்படாதவர்; காணப்படாத செவ்வேளாகிய முருகன் காணப்படுகின்ற செவ்வேளாகிய கோவலனுக்கு மாருகத் தன் கைவேலே இரண்டாக்கிக் கண்ணகிக்கு இரு கண்களாகும்படி கொடுத்துள்ளான் என்பானுய்,

''அறுமுக ஒருவன் ஓர் பெருமுறை யின்றியும்
இறுமுறை காணும் இயல்பினின் அன்றே
அஞ்சுடர் நெடுவேல் ஒன்று நின்முகத்துச்
செங்கடை மழைக்கண் இரண்டா ஈத்தது''

என்று கட்டுரைக்கின்ருன். காதலர்களுடைய காதலுரைகளிலே புதிய புதிய கற்பனைகள் தோன்றும். இங்கே, மயில் காட்டில் காணப்படுவதற்கும், அன்னம் நீர்நிலைகளில் காணப்படுவதற்கும், கோவலன் ஒரு கற்பனை செய்கிருன். கண்ணகியின் சாயலுக்கு நாணி, மயில் காடடைந்ததென்றும், அன்னம் அவள் நடைக்குத் தோற்று நீர்நிலைகளிலுள்ள தாமரைப் பூவில் தங்குகின்றதென்றும் கூறுவானுய்,

''மாயிரும பீலி மணிநிற மஞ்ஞை நின்
சாயற்கு இடைந்து தண்கான் அடையவும்
அன்னம் நன்னுதல் மென்னடைக்கு அழிந்து
நன்னீர்ப் பண்ணை நளிமலர்ச் செறியவும்''

எனப் பாராட்டுகிருன்.

மயிலும் அன்னமும், முறையே, காட்டிற்கும் நீர் நிலைக்கும் செல்வதைப் பற்றியே சிந்தித்த கோவலன் கண்ணகியின் கையிலுள்ள கிளிகளைக் கண்டவுடன் அவைகளுடன்

பேசத் தொடங்கி விடுகிருன். "இப்பசுங் கிளிகள், உன் சொற்களைப் போலக் குழலும் யாழும் அமிழ்தும் கலந்த இனிமையான சொற்களைக் கற்க முடியாமல் வருந்து கின்றன. என்ருலும், ஏனையவைகளைப் போல் நீங்கி விடாமல் உன் கையில் இவை எப்போதும் உடனிருக்கின்றன; என்னே இவைகளின் அன்பு!" என்பான்.

"அளியதாமே சிறு பசுங்கிளியே;
குழலும் யாழும் அமிழ்தும் குழைத்த நின்
மழலைக் கிளவிக்கு வருந்தின வாகியும்
மடநடை மாதுநின் மலர்க்கையின் நீங்காது
உடனுறைவு மரீஇ ஒருவாவாயின"

என்று கூறுகிருன். சிந்தனைத் தேரில் கண்ட திசைகளில் திரிந்துகொண்டிருந்த கோவலன், அந்த நிலையினின்றும் பைய மாறுகிருன். கிளியைப் பார்த்த அவன் கண்கள், கண்ணகியின் நகைகளையும், மாலைகளையும், கூந்தலில் ஊட்டப்பட்டிருந்த அகில் புகையையும், மார்பில் பூசப் பட்டிருந்த சந்தனத்தையும் முத்து மாலையையும் பார்க் கின்றன. அவனுடைய காதற்பார்வைக்கு இவைகளெல்லாம் அழகு தருவதாகத் தெரியவில்லை. அந்த அழகின் மயக்கத் திலே அவளை அலங்காரம் செய்தவர்கள், அவளுக்குத் தீங்கு செய்தவர்களாகவே காணப்படுகிருர்கள். இதனை,

"நறுமலர்க் கோதைநின் நலம் பாராட்டுநர்
மறுவில் மங்கல அணியே யன்றியும்
பிறிதணி அணியப் பெற்றதை எவன்கொல்?
பல்லிருங் கூந்தல் சின்மலர் அன்றியும்
எல்லவிழ் மாலையொடு என் னுற்றனர்கொல்!
நானம் நல்லகில் நறும்புகை யன்றியும்
மான்மதச் சாந்தொடு வந்ததை எவனகொல்!
திருமுலைத் தடத்திடைத் தொய்யி லன்றியும்
ஒருகாழ் முத்தமொடு உற்றதை எவன்கொல்!

திங்கள் முத்துஅரும்பவும் சிறுகிடை வருந்தவும்
இங்கு இவை அணிந்தனர் என்னுற்றனர் கொல்?''

என அடிகள் பாடிக் காட்டுகின்ருர்.

கண்ணகியின் இன்பத்தில் களித்திருந்த கோவலனது காதலுள்ளம் அவளுடைய முகம், புருவம் முதலியவற்றைப் பாராட்டி மகிழ்ந்ததை முன்பு கண்டோம். கண்ணகியின் நடையையும், சாயலையும், மொழியையும் பாராட்டி இன்புற்ற கோவலனுக்கு அவ்வாறு பாராட்டுவதிலேயே ஒரு வகை இன்பம் மிகுவதாயிற்று. கோவலன் ஒரு காமுகன் போலக் காட்சி தந்தாலும். அவன் ஒரு கலைப்பித்தன் என்பதையும் நமக்குக் காட்டிவிடுகிருன். அன்னமும் மயிலும் நீர் நிலையிலும் சோலையிலும் முறையே தங்கியிருப்பதைத் தன் கற்பனைக் கலையில் கண்ணகியின் நடைக்கும் சாயலுக்கும் தோற்று ஓடினதாகக் கூறினுன்.

அவனுடைய கலையுள்ளம் கண்ணகி கையில் ஏந்திக் கொண்டிருந்த கிளிகளின் பக்கம் செல்லுகிறது. கிளியின் மொழியில் இயற்கையாகவே இன்பமுண்டு. அதுவும் மகளிர் கற்றுக் கொடுத்த சொற்களை அவைகள் கற்றுத் திரும்பச் சொல்லும்போது அவர்களுக்கு மிகுந்த இன்பமுண்டாகும். கண்ணகியின் கையிலிருந்த கிளிகள் அவள் கற்றுக்கொடுத்த சொற்களையே திரும்பச் சொல்லுகின்றன. அவைகளைக் கோவலன் கேட்கிருன். அவனுக்குக் கண்ணகியின் வாயிலிருந்து வந்த சொற்கள் தந்த இன்பம், கிளிகள் சொல்லிய சொற்களில் தோன்றவில்லை. கண்ணகியை நாயகியாக நிறுத்திய அவனுடைய கலைக்கற்பனையில் அவள் சொல்லும் சொற்களில் யாழிசையும் குழலோசையும் தரும் இன்பமும், அமிழ்தத்தின் ஆனந்தமும் கலந்து அவனுடைய உள்ளத்திலும் உடம்பிலும் பரவி எல்லையில்லாத இன்ப நிலையத்திலே இருத்திவிடுகின்றன். புதுமணப் புது இன்பத்தில் தோய்ந்த கோவலன் என்ன செய்வான்? மேன்மேலும் புதுப்புதுக் கற்பனைகளை நாடித்தொடுப்பது என்றாலும், அஃது அதிகப் பிரசங்கித்தனமாய் இன்பம் வற்றிப் போகச் செய்யுமோ

என எண்ணுகிறன். சுருக்கமாகச் சில சொற்களால் தன் ஆராக்காதலின் நீராப் பெருக்கைச் சொல்லி விடுகிறன். நெஞ்சில் நிறைந்து அடக்க அடங்காது பொங்கி நிற்கும் காதற் சொற்களை ஒன்றின்பின் ஒன்ருகச் சொல்லி விடுகிருன். கடுகு சிறுத்தாலும் காரம் போகாதன்ருே? கண்ணகியிடம் தான் பெற்ற இன்பத்திற்கு நன்றி கூறுபவன்போல் நலம் பாராட்டுகின்ருன்.

கண்ணகியின் மேனியைக் காண அஃது அவனது கற்பனைக் கண்களுக்குப் பசும்பொன் போலக் காட்சி தருகிறது. புறக் கண்ணில் தோன்றும் சிறு ஒளிப் பொருள் சிந்தனைக் கண்ணில் செகசோதியாய் விளங்கும் என்று உளநூல் புலவர் உரைப்பர். அதே நிலையில் கோவலன் மனக்கண்ணுக்குக் கண்ணகியின் மேனி மிக உயர்ந்த தங்கம்போல் ஒளிர்கிறது. சாதாரண சிந்தைக்கே இஃது இயல்பு என்ருல், அது காதலால் கலக்குண்டு அறிவைத் தன் வசப்படுத்திக் கொள்ளுமானுல், அழகில்லாத எந்தப் பொருளும் அழகு மிகுந்ததாகவே காட்சி கொடுக்கும். "காதல் மிக்குழிக் கற்றவும் கைகொடா" என்று திருத்தக்கதேவர் கூறுவர். "காமனுக்கு உருவமில்லை" என்பர் புராணிகர். அதாவது "காமநோக்கத்துக்குப் புறவடிவம் பொருளல்ல" என்பது கருத்து. பிறர்க்கு அழகாகத் தோன்ருத ஒருத்தி அவள் காதலனுக்கு அழகின் உயிரோவியமாகத் தோன்றுவதும், அப்படியே வடிவில்லாத ஒருவன், ஒருத்திக்கு வடிவெடுத்த மன்மதன் போலக் காட்சி தருவதும் இதுபற்றித்தான். இந்தத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டுதான் புராணங்கள் காமதேவனுக்கு உருவமில்லை எனக் கூறுகின்றனர். மேனுட்டு ஷேக்ஸ்பியரும், காதலின் கண்ணுக்கு நீக்கிரோப் பெண்ணின் வடிவிலும் அழகு தோன்றும்* என்ற கருத்துப் படப் பேசுகின்ருர்.

காதல் அழகற்ற பொருளிலும் ஆசை கொள்ளுமென்ருல் அழகிற்கே ஒரு எடுத்துக் காட்டாக உள்ள கண்ணகியின்

---

**Love finds beauiy in the brow of Egypt–Shakespeare*

அழகைச் சிறப்பிக்க உலகத்திலே ஒரு பொருளையும் கூற முடியாது என்பதைக் கண்டான் கோவலன்.

உலகிலே பொன் மிக உயர்ந்த பொருள். ஆனால் அதற்கு மாசு மறு ஏற்பட்டுவிடுகிறது. தேய்ந்து விளக்காவிடில் அதன் ஒளியும் மங்கி விடுகிறது. ஆனால் கண்ணகியின் எழிலோ மாசு மறுவற்றதாய் உள்ளது. ஆகையால் கோவலன் தன் மனையாளைப் பார்த்து, ''மாசு மறுவற்ற தங்கமே! உன் குலத்தின் சிறப்புத்தான் என்ன! ஊறுகின்ற இன்பத்தைத் தரும் வலம்புரி யீன்ற முத்தை ஒப்பானவளே! குற்றமற்ற வாசனைப் பொருள் போன்றவளே, சுவைக்கச் சுவைக்க இனிக்கும் கரும்பை ஒப்பானவளே, தேனைப்போல இனிமையான மொழிபேசும் பெறற்கரிய சித்திரப் பாவையே, நான் உன்னை என்னவென்று அழைப்பேன்? ஆருயிர் மருந்தே, பெருங்குடியிலே பிறந்த வணிகரின் மகளே, மலையிலே பிறந்த மணியே, அமுதம் அலைகடலிலே பிறந்தது என்பார்கள்; ஆனால் நீ அலைகடலிலே பிறவாத ஒரு அமுதம். யாழின் இசைப்பிலேதான்ஏழிசையின் இனிமையான நாதம் பிறக்குமென்று கூறுவார்கள். ஆனால் யாழின் இசைப்பின்றியே இங்கு பிறக்கின்றது நாதம்! நீண்ட கூந்தலையுடைய தையலே, நீ ஏழிசையாய் இசைப் பயனாய் எனக்குக் காட்சி தருகின்றாய்'' என்று பலவாறாகப் பாராட்டுவானாய்,

''மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே
அரும்பெறல் பாவாய் ஆருயிர் மருந்தே
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே
மலையிடைப் பிறவா மணியே யென்கோ
அலையிடைப் பிறவா அமிழ்தே யென்கோ
யாழிடைப் பிறவா இசையே யென்சோ
தாழிருங் கூந்தல் தையால் நின்னையென்று
உலவாக் கட்டுரை பல பாராட்டிக்''

கூறினான்.

தமிழர்கள் தனி வாழ்க்கையைப் பெரிதும் விரும்புபவர்கள். தனக்கென ஒரு வழி வகுத்துக்கொண்டு வாழும் ஒரு ஆண் மகனைத்தான் ஒரு பெண் விரும்புவாள் என்பதை முன்னமேயே கண்டோம். வீட்டிற்கு அரசியாகத் திகழ வேண்டியவள் மனையாள். ஒரே வீட்டில் இரண்டு அரசிகள் இருக்க முடியாது. எல்லாச் செல்வமும் பெற்ற ஆண் மகன் திருமணமானவுடன் மனைவியை இல்லாளாக்கித் தான் இல்லானாகி விடுகிறான். இதனைச் சங்க கால இலக்கியத்தில் காணலாம். பரத்தையர் வீட்டிற்குச் சென்றவனைப் பார்த்து "எம்மனை நாடாதீர்" என்று கூறி விடுகிறாள் மனைவி. அவன் வெளியில் சென்றுவிட்டுப் பின்னர் ஒரு விருந்தினனையும் அழைத்து வந்து விடுகிறான். விருந்து செய்வதற்கே இல்லறமாதலால், அவள், இருவரையும் அழைத்து உபசரித்து அமுது படைக்கிறாள். பின்னர்க் கணவனும் மனைவியும் மனத்தாங்கலை மறந்து பழக ஆரம்பிக்கின்றனர். விருந்தினனும் சென்று விடுகிறான். மறுநாள் காலையிலே தோழி அப் பெண்ணிடம் சென்று 'அவர் வந்தால் என்ன செய்வேன், தெரியுமா?' என்று வீரம் பேசினையே; இப்பொழுது ஏன் வாயடைத்து விட்டது என்று கேட்கிறாள். "நீ என்னைக் கேலி செய்யாதே. எவ்வாறு அஞ்சனம் தீட்டும் கோலை நம் கண் காண்பதில்லையோ அதுபோலவே அவர் என்முன் வந்தவுடன் அவருடைய குற்றங்களையெல்லாம் மறந்து விடுகிறேன். எனக்கு அவருடைய உடைமையெல்லாம் தந்து விட்டு வறியரான அவரைக் கண்டால் இரக்கம்தான் எனக்குத் தோன்றுகிறது" என்று கூறுகிறாள். இந்தக் கருத்தைக் கொண்டே கண்ணகி விருந்து முதலான பல சிறந்த அறங்களைச் செய்து மேம்படுதலைக் காண விரும்பிய கோவலன் தாய், வேலைக்காரர்களோடும் சுற்றமோடும் அவர்களைத் தனியே இருக்கச் செய்தாள். எல்லோரும் வியக்கும் வண்ணம் அவர்கள் இல்லறமாகிய நல்லறத்தை நடத்தி வருவாராயினர்.

இளங்கோ பின்வரும் அடிகளால் கோவல கண்ணகியரின் மணவாழ்க்கையை அழகிய சொற்களால் சிறப்பித்துத்

"தயங்கிணர்க் கோதை தன்னொடு தருக்கி
வயங்கிணர்த் தாரோன் மகிழ்ந்து செல்வுழிநாள்
வாரொலி கூந்தலைப் பேரியற் கிழத்தி
மறப்பரும் கேண்மையோடு அறப்பரி சாரமும்
விருந்து புறந்தரூஉம் பெருந்தண் வாழ்க்கையும்
வேறுபடு திருவின் வீறுபெறக் காண
உரிமைச் சுற்றமோடு ஒருதனி புணர்க்க
யாண்டுசில கழிந்தன இற்பெருங் கிழமையில்
காண்டகு சிறப்பின் கண்ணகி தனக்கே"

என்று உரைக்கின்றார்.

சிலப்பதிகாரம் முற்றிலும் செந்தமிழ்ப் பாவையான கண்ணகியின் அவலக் கதையைக் கூறுவதாகவேயிருக்கிறது. சில ஆண்டுகள் கழிந்தன என்று ஆசிரியர் கூறும்போதே, பின்னர் என்ன நடந்தது என்று கேட்கவே எண்ணம் தோன்றுகிறது. பின் என்ன நடக்கப் போகிறது என்பதை ஒரு வெண்பாவால் கூறி முடித்து விடுகிறார் ஆசிரியர்.

இல்வாழ்க்கையிலே சிறந்து விளங்கிய கோவலன் கண்ணகியாகிய இருவர் இடையே விதி புகுந்து சதி செய்யத் தொடங்குகிறது. இதை அவர்கள் எங்ஙனம் அறிவார்கள்! அவர்கள் நாகப் பாம்புகள் ஒன்றுபட்டுத் தழுவுவதுபோல் ஒருவரை விட்டு ஒருவர் நீங்காமல் குன்றாத இன்பத்தை எல்லாம் துய்த்தனர். நாளை, ஒரு வேளை இல்லாமற் போகுமோ என்ற அச்சத்தினாலோ. உலகத்திலுள்ள பொருள்கள் எல்லாம் அழிந்து போகத் தக்கவை என்பதனாலோ கிடைத்த இன்பமெல்லாம் உடனேயே அனுபவித்து விடுவோம் என்று எண்ணியவர் போலக் கோவலனும் கண்ணகியும் காதலால் கலந்து இன்ப வாழ்வில் ஈடுபட்டு மகிழ்ந்தனர். இதனை,

"தூமப்பணிகள் ஒன்றித் தோய்ந்தால் என ஒருவார்
காமர் மனைவியெனக் கைகலந்து—தாமும்

தொலையாத இன்பமெலாம் துன்னினார் மண்மேல்
நிலையாமை கண்டவர் போல் நின்று''

என்று பாடுகின்றார்.

இன்பமும் துன்பமும் வாழ்க்கையில் பின்னிக் கிடப்பவைகள்தாம். எண்ணியவைகளை அடைந்தவர்கள் இன்பமெய்துகின்றனர்; அடையாதவர்களும் அடைய முடியாதவர்களும் துன்பமுறுகின்றனர். இதுதான் இயற்கை. கண்ணகியும் கோவலனும் தங்கள் தங்கள் எண்ணத்தின் சிறப்பைக் கண்டவர்கள், ஆதலால்தான் அவர்கள் இன்பக் களிப்பிலே மூழ்கியிருக்கின்றனர். ஆனால், அவர்களிருவரும் பண்பட்ட உள்ளத்தினர். இன்ப வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும்போதே, உலக வாழ்க்கையின் நிலையாமையையும் அறிந்துகொள்கின்றனர். நிலையாமை எண்ணம் மேலிடவே அவர்கள் தாங்கள் பெற்ற இன்பத்தைப் பெரிதாக நினைத்துப் பிறவற்றையெல்லாம் மறக்கத் தலைப்பட்டனர். நீரின்மேல் எழுதியதுபோல உள்ளது வாழ்க்கை என்று அவர்கள் எண்ணத் தொடங்கிய உடனேயே அவர்களுடைய இன்பக் கனவுகளெல்லாம் சிறிது சிறிதாக மறையத் தொடங்கின மன்றல் மணக்கும் தென்றல் வீசிய அவர்களது இல்வாழ்க்கையிலே வாடைக் காற்று மோத வட்டமிடுவதாயிற்று.

மனையறம் படுத்த காதையிலே அவர்கள் சில ஆண்டுகளும் எவ்வாறு வாழ்க்கை நடத்தினர் என்று இளங்கோவடிகள் கூறவில்லை. ஆனால், அவர் அக்காதையின் முடிவிலே, "என்னுடைய கதை இன்ப முடிவாக இருக்காது, துன்பமாகவே முடியும்'' என்று குறிப்பாகக் கூறி நம்மை மாதவியின் அரங்கேற்றத்திற்கு அழைத்துச் செல்லுகிறார்.

ஒரு நாடகம் அவல நாடகமாக இருக்கவேண்டுமானால், முதல் காட்சியிலேயே நாம் அதைப்பற்றிச் சிறிதாவது தெரிந்துகொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாக "லியர் மன்னன்'' (*King Lear*) நாடகத்தில் முதல் காட்சியிலேயே,

"லியர் மன்னன்" தன்னுடைய அறிவீனத்தைக் காட்டி விடுகிறார். மன்னனுடைய அன்பு மகளான கார்டிலியாவும், தம்முயிர்க்கு உறுதி எண்ணாது, மன்னன் வெகுண்டபோதும், வெம்மையைத் தாங்கி நீதியை விடாது கூறிய அமைச்சன் கென்டும் நாடு கடத்தப்பட்டு விடுகின்றனர். பசப்பு வார்த்தைகள் கூறிய மற்ற இருமகளிருக்கும் அரசபதவி கிடைத்துவிடுகிறது. இதைப் படிக்கும் நாம், இந்த மன்னனுக்கு என்ன என்ன துன்பங்கள் வரக் காத்திருக்கின்றனவோ என ஐயுறுகிறோம். ஷேக்ஸ்பியரின் அவல நாடகங்களிலெல்லாம் இதுபோல முதற்காட்சியிலேயே அவலத்தின் குறிப்புத் தெரிந்துவிடும். "மாக்பெத்" என்ற நாடகத்தில் மந்திரக் கிழவிகள் தோன்றி மாக்பெத் அரசனாவான் என்று கூறுவதும் ஒதெல்லோவில் இயாகோவின் சதியில் நாடகம் ஆரம்பமாவதும், "ஹாம்லட்டில்," பிசாசுகள் வந்து கதையைத் தொடங்குவதும் அவல நாடகத்தில் முதற் காட்சியே அவலத்தின் சாயையைக் காட்டிவிடும் என்பதற்கு எடுத்துக் காட்டுகளாகும்.

நாம் முதன் முதலில், கண்ணகிக்கும் கோவலனுக்கும் நடக்கும் திருமணத்தைக் கண்டோம். அங்கு வாழ்த்துரைகள் வழங்கப்பட்டன. கண்ணகியைப் பற்றிக் கூறும்போது "புகழுடை வடிவென்று" கூறினார். இன்று நாம் அவளது புகழுடை வடிவைத்தான் காண்கிறோமேயன்றி மற்ற அழகுகளைக் காண முடியவில்லை. கோவலனை, "மண் தேய்த்த புகழினான்" அன்று அடிகள் கூறுகின்றார். அவன் பின்னர்க் கொலை செய்யப்பட்டு மண்மேல் வீழ்த்தப்பட்டு, அதனால் புகழ் எய்தப் போகிறான் என்பதைக் குறிப்பால் கூறுவதாகவே நாம் இங்குக் கொள்ள வேண்டும். கோவலனுக்கும் கண்ணகிக்கும் திருமணம் நடைபெற்றது என்பதைக் கூற வந்த அடிகள் "மாநகர்க்கு ஈந்தார் மணம்" என்று கூறி விடுகிறார். எல்லோரும் அவர்கள் மணத்தைக் கண்டு இன்பமுற்றனர். ஆனால், அவர்கள் நீண்ட நாள் இன்பம் பெறவில்லை என்ற பொருள்படும்படியாகக் கூறியிருப்பதை நாம்

காணவேண்டும். மங்கல வாழ்த்துப் பாடுகின்றார் அடிகள். ஆனால் அதிலும் ஒரு அமங்கலச் சொல் கலந்துவிடுகிறது. ''பெற்றோர் பெட்கும் பிணையை ஆகுக''. என்று வாழ்த்துவதுதான் மரபு. ''நீங்கள் கை அணைப்பு நெகிழாமல்-பிரியாமல்-வாழ வேண்டும்'' என்று கூறிவிடுகிறார். ''நெகிழாமல்-பிரியாமல்'' என்றதால் கையணைப்பு நெகிழ்ந்துவிடும். இவர்கள் இருவரும் பிரிந்து விடுவார்கள் என்பது தெரிய வருகிறது. ''காதலனைப் பிரியாமல். கவவுக்கை நெகிழாமல் வாழ்க'' என வாழ்த்தும் போதே அங்கு அவலம் தோன்றுகிறது.

சில ஆண்டுகள் காதலனும் காதலியுமாகக் கோவலனும் கண்ணகியும் இல்வாழ்க்கைப் படகிலே சென்று கொண்டிருந்தனர். பின்னர் என்ன நடந்தது என்று நாம் கேட்கும் கேள்விக்குப் பதிலளிப்பதுபோல, அடிகள் நம்மைச் சோழவேந்தன் சபா மண்டபத்திற்கு அழைத்துச் செல்லுகிறார்.

## 6. மாதவி அரங்கேறல்

அழகிய புகார் நகரிலே பிறந்த நாடக மகளான மாதவி, நாடக நன்னூல் பயின்று அரங்கிலே வந்து புவி முழுதும் அறிந்து புகழும்படி ஆடுகிருள். இயல், இசை, நாடகம் மூன்றுமே ஒளிபெற்று விளங்கின அவள் ஆட்டத்தில், கலைகட்குக் கருவியாகிய கணிதம், இலக்கணம் என்பவற்றையும், தமிழகத்தின் பதினெரு கூத்தினையும் அவள் ஆட்டத்தால் கண்டு களித்தனர் மக்கள்.

நாடக அரங்கிலே தோன்றி ஆடியதை அடிகள் ஒரு சிறு வெண்பாவில் கூறுகிருர். அது,

எண்ணும் எழுத்தும் இயலைந்தும் பண்ணான்கும்
பண்ணின்ற கூத்துப் பதினென்றும்—மண்ணின்மேல்
போக்கினுள் பூம்புகார்ப் பொற்றொடி மாதவிதன்
வாக்கினல் ஆடரங்கின் வந்து

எனவரும்.

மாதவி ஆடினுள்; மக்கள் மகிழ்ந்தனர். இந்த மாதவி யார் என்று கேட்கும்படியிருந்தது அவள் எழில்! ஆடவர் கண்டால் அவர்களுடைய கண்கள் வேறு எதிலும் நாட்டம் செல்லாது அவளுடைய மேனியழகிலே ஈடுபட்டிருக்கும். அப்படி அவர்கள் நோக்காது போனல் அவர்களைப் பேடிகளின் வரிசையிலேதான் வைக்க வேண்டும் என்று எண்ணும்படி இருந்தது அவளுடைய அழகு.

தெய்வத் தன்மை பொருந்திய பெரிய மலை பொதிய மலை; அதிலே முனிவரில் சிறந்தவரான அகத்தியர் வாழ்ந்து

வந்தார். அவர் ஒரு காலத்தில் இந்திரன் மகனுன சயந்தனை யும் ஊர்வசியையும் சபித்துவிட்டார். அவர்கள் வானுலகம் நீங்கி மண்ணுலகிலே சில காலம் வாழ்ந்தனர். மணக்கும் பூக்களைச் சூடிய கடை குழன்று சுருண்ட கூந்தலையுடைய மாதவி அவர்களுடைய மரபிலே தோன்றியவள்: இதனை,

''தெய்வ மால்வரைத் திருமுனி யருள
எய்திய சாபத்து இந்திரச் சிறுவனொடு
தலைக்கோல் தானத்துச் சாபம் நீங்கிய
மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிர்
சிறப்பில் குன்ருச் செய்கையொடு பொருந்திய
பிறப்பில் குன்ருப் பெருந்தோள் மடந்தை
தாதவிழ் புரிகுழல் மாதவி''

என்று அவளைக் குறிக்கின்ருர் அடிகள்.

மாதவியை ஒரு கணிகை மகளெனவே நாம் இன்று கருதி வருகிறேம். கோவலன் திருமணத்திலே மாதவி வந்து நடனமாடியதாக நாம் நாடகங்களிலும் திரையிலும் கண் டிருக்கிறேம். ''கழுத்தில் விழுந்த மாலை கழற்ற முடிய வில்லை'' என்று கோவலன் பாடுவதையும் அதற்கு மாதவி ''நான் இங்கே சுற்றி எறிந்த மாலையைத் தரவேண்டும்; இல்லையென்ருல் என்னுடன் வரவேண்டும்'' என்று கூறுவ தையும் கேட்டிருக்கிறேம். ஆனுல், இளங்கோவடிகள். கோவலனும் கண்ணகியும் சிலகாலம் இன்பமாக வாழ்ந் தனர் என்று கூறுகின்ருர். கோவலன் செல்வச் சீமானுகத் தன் தந்தையினும் செல்வம்மிகுந்தவனுக வாழ்ந்துவந்தான். அவன் அரசவையிலே ஒரு நல்ல இடமும் பெற்றுச் சீரும் சிறப்பும் எய்தி வாழ்ந்து வந்தான். அப்பொழுது தெய்வப் பிறப்போ, மேனகையோ, ஊர்வசியோ என எல்லோரும் வியக்கும் அழகுடன் வேந்தன் முன் மாதவி ஆடவந்தாள். அவளுடைய ஆட்டமும் பாட்டும் ஆனந்தக் கூத்தனின் ஆட்டமோ தேவகானமோ என்று கூறும்படி இருந்தன.

வீரக்கழல் அணிந்த சோழனது சபையிலே மாதவி ஆடிய ஆடலும் பாடிய பாடலும் கோவலன் திருமணக்காலத்தே

நடந்தன என்ற கதை எப்படி வந்தது என்பது இன்றளவும் விளங்காத புதிராகவே உள்ளது.

மாதவியின் கூத்திற்கு, இயலமைந்த ஆடலாசிரியரும், யாழிலும் குழலிலும் தாளம் தவுறாது பாடவல்ல இசையாசிரியரும், தமிழ் முழுதறிந்து நல்ல மொழிகளால் நாடகம் இயற்றவல்ல கவிப்புலவரும் அமர்ந்திருந்தார்கள். அவ்வரங்கத்தில், பூங்கொம்பு போன்ற மாதவி மின்னொளி போலத் தோன்றி வலதுகாலை முன்னே வைத்து, நாட்டில் நன்மை பெருகவும் தீமை அகலவும் வேண்டித் தெய்வப்பாடல் பாடினாள். அப்பொழுது குழலின் வழியே யாழ் நின்றது. யாழின் வழியே மத்தளம் நின்றது. இவ்வாறு இசைக்கருவிகளெல்லாம் பருந்தும் நிழலும் போல ஒன்றாய் ஒலிப்ப அவையில் பாட்டும் கூத்தும் நிகழ்ந்தன. இதனை,

ஆடலும் பாடலும் அழகும் என்றிக்
கூறிய மூன்றின் ஒன்று குறைபடாமல்
ஏழாண் டியற்றி ஓர்ஈர் ஆறு ஆண்டில்
சூழ்கழல் மன்னற்குக் காட்டல் வேண்டி
இருவகைக் கூத்தின் இலக்கணம் அறிந்து
பலவகைக் கூத்தும் விலக்கினில் புணர்த்தும்

அடிகள் என்பர்.

ஆடல் மகளிர்க்குப் பரிசம் வகுப்பது அந்நாளைய அரசியல் முறை. அதன்படி, வேந்தன் அவளது அரங்கேற்றத்தின் போது அவளுக்குப் பரிசம் ஆயிரத் தெண்கழஞ்சு பொன் என்று விதித்தான். அதன் அடையாளமாக மணிமாலை தந்து அவளைச் சிறப்பித்தான்.

பதினோ ராடலும் பாட்டும் கொட்டும்
விதிமாண் கொள்கையின் விளங்க அறிந்தாங்கு
ஆடலும் பாடலும் பாணியும் தூக்கும்
கூடிய நெறியின கொளுத்துங் காலை...

என இளங்கோவடிகள் தம் காவியத்தில் எவ்வாறு ஆடலும் பாடலும் அழகுபெற்று விளங்கவேண்டுமென்பதைக் கூறும் போது நாம் வியப்புறுகிறோம். துறவியேயாயினும், நாட்டியம், பாடல் முதலிய துறைகளில் அடிகள் மிகுந்த பயிற்சி உடையவர் என்பதை ''அரங்கேற்றுக் காதை'' நமக்குத் தெளிவு படுத்திவிடுகிறது.

மாதவியின் ஆட்டம் முடிந்தவுடனே மக்களெல்லாம் விண்ணுலகிலேயிருந்து மண்ணுலகிற்கு வந்துவிட்டோமே என்று எண்ணினார்கள். மன்னன் மாதவியின் மனமகிழ ஆயிரத்தெண்கழஞ்சு பொன் அவட்குப் பரிசமாகத் தெரிவித்து மணிமாலை ஒன்று கொடுத்தான்.

மாதவி, அந்த மாலையை வாங்கித் தனக்கு அணிபவருக்குத் தான் மனைவியாவதாகக் கூறித் தன்னுடைய தோழி கையிலே மணிமாலையைக் கொடுத்து நகரத்தில் செல்வ ஆடவர்கள் நடமாடுமிடத்திற்குச் சென்று தன்னுடைய செய்தியைச் சொல்லி விலை கூறும்படி ஏற்பாடு செய்தாள். மாதவியின் தோழி நகரத்தின் நடுவில் சென்று ''மாற்றுயர்ந்த பசும்பொன்னுக்கு விலையாகப் பெறுதற்குரியது இவ்வயிர மணிமாலை; இதற்குரிய பொன்னைத் தந்து வாங்கி அவட்கு அணிபவன் என் தலைவியின் காதலனாக அமைவான்'' என்று கூறினாள்.

மாதவியின் ஆடலையும், பாடலையும், அழகையும் கண்டு மயங்கியிருந்த கோவலனுடைய காதில் இந்தச் சொற்கள் விழுந்தன. தன் உள்ளத்தில் அவள் உருவத்தையே அழகொழுக எழுதிப்பார்த்து மகிழ்ந்திருந்த கோவலன் தன் கலைப்பண்புடைய உள்ளத்திலே இவ்வாறு ஒரு காமப்புரை ஏறி ஓடுவதை மறந்திருந்தான். பெரிய தாமரை மலரைப் போன்ற கண்ணையுடைய மாதவியின் மாலையை, அவள் கேட்ட பொன்னைக் கொடுத்து வாங்கி, அவளுடன் மாதவியின் மண மனையிலே புகுந்தான். மாதவியின் வீடு அடைந்தவுடனேயே அவன் தன்னை மறந்தான்; தன் மனையாளை மறந்தான்; தன் வீட்டையும் மறந்தான். ஆயிரத்

தெண் கழஞ்சு பொன்னைக் கொடுத்து மாலையை வாங்கிக் கொண்டு கோவலன் மாதவியிடம் சென்றான். அங்கே மாதவியைக் கண்டவுடன் யாதொன்றும் தெரியாது, "சித்திரப்பாவையே! சிற்பி செதுக்காத தங்கப் பதுமையே! நான் உன்னைக் கண்டவுடனே மனம் பேதுற்று விட்டேன். முத்தன்ன வெண்நகையாய்! நீ முன் வந்து தித்திக்கப்பேச வேண்டும். நீ ஆட வேண்டும்; நான் பாடவேண்டும். நாம் இருவரும் வீணையும் நாதமும் போலவும், தமிழும் இனிமையும் போலவும் வாழ்வோம். இது உறுதி" என்று அவளிடம் சூள் செய்து கொடுத்தான். இவ்வண்ணம் கோவலன் கண்ணகியை விடுத்து மாதவியைக் கூடி அவளை "விடுதல் அறியா விருப்புடன்" வாழ்ந்து வருவானாயினான்.

மேடைகளிலும் திரைகளிலும் நாம் ஒரு பாட்டைக் கேட்பது வழக்கம். "மாதவி பத்து இலட்சம் பொன்னும் கேட்டாள்; சத்தியமும் வாங்கிக்கொண்டாள்" என்பது. இது கோவலன் மாதவியை விட்டுப் பிரிந்துபோகும் போது பாடுவதாக இருக்கிறது. ஆனால் கோவலன் மாதவியை விட்டுப் பிரிவதற்கு வறுமை காரணமல்ல என்பதும், ஏதோ ஒரு விளக்க முடியாத காரணம் என்பதையும் அடிகள் பின்னர்க் கூறுகின்றார். இடைக்காலத்தில் சிலப்பதிகாரம் என்ன காரணத்தினாலோ மறையத் தொடங்கியது. இலக்கியங்களைப் படிக்காத மக்கள், கோவலன் கண்ணகிகளின் கதையை இங்கொன்றும் அங்கொன்றுமாகவே அறிந்திருந்தனர்; ஆதலால் கால மாறுபாட்டால் கதையும் மாறியது.

மாதவி பத்து இலட்சம் பொன் கேட்டதும் கோவலன் அது தருவதாக உறுதிமொழி கொடுத்து வாங்கியதும் உண்மையாக இருக்கலாம். இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரத்தில் இப்பகுதியைப் படிக்கும்போது மாதவியின் பெருமையைக் காண்கிறோம். ஆனால், நாடகத்தில் இதைப் பார்க்கும்போது, அக்காட்சி மாதவியை வேசிமகள் என்று தூற்றும்படி செய்து விடுகிறது. மாண்புமிக்க மாதவி கற்பின் உறைவிடமானவள். அவளுக்குத் திரையுலகமும்

நாடக உலகமும் அழியாத களங்கத்தை ஏற்படுத்தியுள்ளன. இதைப் பார்க்கும்போது நமது புராண இதிகாசங்களையும், இவர்கள் இப்படியே என்ன என்ன கொடுமை செய்திருப் பார்கள் என்பதைக் கூறவும் வேண்டுமோ? இன்று நாடகங் களிலும் திரைமேடைகளிலும் புராண இதிகாசக் கதைகள் வந்தால் மக்கள் விரும்பாமல் இருப்பதற்கு இதுவும் ஒரு காரணமாக இருப்பதை நாம் மறுக்க முடியாது.

# 7. அந்திமாலைச் சிறப்பு

கோவலன் மாதவியின் மனையை அடைந்ததும் அங்கே அவளை விடுதல் அறியா விருப்போடு கூடினதும், அதனால் அவன் தன் மனையை மறந்ததும் நாம் கண்டோம். இனி மாதவியின் பெருமனையில் கோவலன் இருந்த காட்சியை இளங்கோவடிகள் தமது இயல்பான நடையில் அழகாகத் தருகின்றார்.

காவிரிப்பூம்பட்டினத்தில் அந்திமாலை தோன்றுகிறது; அதாவது மாலையில் பொழுது மறைய இருள் பையப்பரவி வரும் சாயுங்கால வேளை. அந்திநேரத்தில் மேலைக் கடலில் சூரியன் படிவதைக் கண்டு கண்டு நன்றாகப் பயின்றவராத லால் அடிகள் அதனை ஓர் உருவகத்தால் உரைக்கின்றார். நில மாகிய மங்கைக்குச் சூரியன் அரசனாகும். சூரியன் மறைந் தது அரசனை இழந்ததுபோலவும், அதனால் நாற்புறமும் நிறம் குறைந்து இருள் படிந்தது, அவள் துன்பத்தால் முகம் பசந்தது போலவும், பூக்களிடத்தே பனித்துளிகள் தங்கித் துளிப்பது, கண்ணீர் துளிப்பது போலவும் அமைத்துக் கொள்ளுகின்றார். இதனை,

விரிகதிர் பரப்பி உலக முழுதாண்ட
ஒருதனித் திகிரி உரவோன் காணேன்
அங்கண் வானத்து அணிநிலா விரிக்கும்
திங்கள்அஞ் செல்வன் யாண்டுளன் கொல் எனத்
திசை முகம் பசந்து செம்மலர்க் கண்கள்
முழுநீர் வார முழுமெயும் பனித்துத்

திரைநீர் ஆடை இருநில மடந்தை
அரைசு கெடுத்து அலமரும் அல்லற்காலை

என்று பாடுகிறார். சூரியன் மறைந்தாலும் அந்த இடத்தே சந்திரன் தோன்றி இருளை நீக்கலாமல்லவா? அந்த மாலையில் அதுவும் தோன்றாமையால் நிலமடந்தை திங்களஞ் செல்வன் யாண்டுளன் கொல் என்று புலம்புகின்றாள் என்று அடிகள் அறிவிக்கின்றார்.

இங்கே நமது சிந்தனையைச் சிறிது திருப்புவோம். காதலனும் காதலியுமாய் மனம் கலந்து வாழ்ந்து வந்த கோவலனும் கண்ணகியும் பிரிந்து நீங்கி விட்டார்கள்; மாதவியோ தன் மனத்திற்குப் பிடித்தமான மணாளனை அடைந்து விட்டோம் என்ற பெருமிதத்துடன் வாழ்கின்றாள். இதுபோன்ற காட்சிகளைத்தான் நாம் திரைகளிலும் நாடக மேடைகளிலும் காண்கின்றோம். அப்பொழுது கதைத் தலைவியின்பால் நமக்கு அனுதாபம் ஏற்படுகிறது. உணர்ச்சி வசப்படும் நாம் இவர்களைப் பிரித்தது விதியா? சதியா? என்று வினவுகின்றோம். அடையும் துன்பத்திலும் பங்கு கொள்ளுகிறோம்; கண்ணீர் விட்டு அழவும் செய்கிறோம். ஆனால் இதே காட்சியை உலகில் நடைமுறையில் பார்க்கும்போது நமக்குச் சோகமோ கோபமோ ஏற்படுவதில்லை. கவிதையிலும் நாடகத்திலும் திரையிலும் ஏற்படும் தாப அனுதாபங்கள் வாழ்க்கையிலே உண்டாகுமானால் அப்பொழுதுதான் மக்கள் சமுதாயம் ஒரு பண்பட்ட சமுதாயமாக உருப்படும். இந்தப் பண்பாட்டை உண்டுபண்ணுவது கருதியேதான் இலக்கியங்கள் தோன்றியுள்ளன. நாடகங்களும் திரைக் காட்சிகளும் இக்கருத்திலே அமைந்தவையாகும். இந்த அடிப்படையில் எழுந்த இலக்கியமாதலால். அடிகள் மாதவியின் மகிழ்ச்சியையும் கண்ணகியின் கலுழ்ச்சியையும் சொல்ல வருகிறார்; இதில் கதைத் தலைவியான கண்ணகிபால் நமக்கு அனுதாபம் உண்டாகிறபடியால் அதற்கு முகவுரையாகச் சூரியன் மறைந்ததையும் நிலம் குளிர்ந்து பனி படிந்து இருண்டிருப்பதையும் ஒரு சோகக் காட்சியாக உரைக்கின்றார்.

மாலை நேரத்தில் ஆடவரும் மங்கையரும் களிப்புடன் வாழ வேண்டும். கணவனைக் காணாத மனைவியோ மனைவியைக் காணாத கணவனோ நாட்டில் எங்கும் காணமுடியாத காட்சியாக இருக்கவேண்டும். அதுவே இன்ப வாழ்வின் குறிக்கோள். அனுமன் இலங்கைக்குள் புகுந்து சீதையைத் தேடுகிறான்; தேடியபோது அங்கே களிக்கின்றவர்களைக் காண்கின்றானே தவிர வருந்துகின்றவர்களைக் காணவேயில்லை என்று கம்பர் சொல்லுகின்றார். ஆனால் இன்றைய வாழ்வில் மாலைக்காலம் எல்லார்க்கும் இன்பமாக இருப்பதை நாம் காண்பதில்லை.

மாலைக்காலத்தில் அந்திவானம் சிவந்து தோன்றும் போது காதலர் உள்ளத்தில் காதலுணர்ச்சி எழத் தொடங்குகின்றது. மெல்லென வீசும் தென்றலும் பால்போல ஒளிவிடும் முழுமதியமும் இந்தக் காதலுணர்ச்சிகள் பெருகுவதற்கு உதவுகின்றன. இந்நிலையில் பிரிந்தும் கூடியும் இருக்கும் பெண்களின் மனநிலையைக் காட்டுகின்றார் அடிகள்.

சூரியன் மறைதற்கும் சந்திரன் தோன்றுவதற்கும் இடையில் வந்து புகும் இருள்மாலையாகிய அந்திமாலையை அடிகள் உரைப்பதைப் பாருங்கள்.

ஒரு நல்ல அரசு நாட்டில் ஆட்சி செய்கின்றது; அரசியல் தலைவன் இறந்துபடவே சூழ்நிலைகள் மாறுகின்றன. அப்போது வேறொருவன் அரசு மேற்கொள்ளுகிறான்; அவனோ கொடுமனம் படைத்தவன். நாட்டு வாழ்வு எப்படியிருக்கும்? அதனால் நாட்டின்கண் நல்லவர்கள் தலைமேல் கை வைத்துப் புலம்புவார்கள்; பொல்லாதவர்கள் கொடிய வேந்தன் கையாளாய் இருந்து மக்களை வருத்துவார்கள்; எங்கும் அழுகை யொலியும் அவலக் கூச்சலும் கிளம்பும்; பொல்லாத மக்களிடத்தில் மகிழ்ச்சியும் ஆரவாரமும் தோன்றும். இதைப் போலவே அந்தி மாலை வந்ததும் கணவனைப் பிரிந்தோர் கையற்று வருந்தினர்; கூடின மகளிர் களித்தனர். மலர்ந்த முல்லையில் தும்பி படிந்து ஒலிக்க, தென்றற்காற்று வந்து அசைப்பதால் பூக்களில் தங்கின

வண்டினம் பறந்தோட மாலைப்போது வந்தது என்று உரைக்கின்றார். இதனை.

"அரைசுகெடுத்து அலம் வரும் அல்லற்காலை
கறைகெழு குடிகள் கைதலை வைப்ப
அறைபோகு குடிகளோடு ஒருதிறம் பற்றி
வலம்படு தானை மன்னர் இல்வழிப்
புலம்பட இறுத்த விருந்தின் மன்னரில்
தாழ்துணை துறந்தோர் தனித்துயர் எய்த
குழல்வளர் முல்லையில் கோவலர் தம்மொடு
மழலைத் தும்பி வாய் வைத்து ஊத
அறுகாற் குறும்புஎறிந்து அரும்புபொதி வாசம்
சிறுகாற் செல்வன் மறுகில் தூற்ற
எல்வளை மகளிர் மணிவிளக்கு எடுப்ப
மல்லல் மூதூர் மாலை வந்து இறுத்தது"

என்று இசைக்கின்றார்.

காதலரைப் பிரிந்து தனியே வாழ்பவர் வருந்தவும், அவரோடு கூடியிருப்போர் களிப்பெய்தவும் காவிரிப்பூம்பட்டினத்திலே மாலை நேரம் வந்தது. நிலமாகிய மகள் தன் தலைவனும் சூரியனைப் பிரிந்து வருந்தினாள். ஒரு நாட்டின் மன்னன் இறந்தபின், அவன் குடிமக்கள் துன்பம் எய்துவது போல சூரியன் மறைந்தபின் யாநிலத்து மக்கள் ஒளியின்றி வருந்தினர். கோவலனோ மாதவியோடு கூடி மட்டிலா இன்பம் பெற்றான். அவள்பால் அவன் கொண்ட அன்பு, வளர்மதி போல் வளர்ந்தது என்றும், பின்னும் தேய்பிறை தேய்வது போலத் தேயப்போகிறது என்றும், கண்ணகிபால் அவன் முன்பு கொண்ட அன்பு சூரியன் ஒளிபோல என்றும் மங்காமல் இருக்கும் என்றும் அடிகள் இங்கே குறிப்பாக உணர்த்துகிறார் எனலாம். கண்ணகியோடு கூடியிருக்காவிட்டாலும், அவன் மனத்தில் அவள் பெற்ற இடம் ஒரு சிறிதும் குறையவில்லை.

கண்ணகி மிகுந்த அழகியேயானாலும், அவள்பால் இயற்கையாக அமைந்திருந்த அடக்கமும் ஒழுக்கமும், அவளழகின் கவர்ச்சியை மறைத்து விட்டன. கோவலன் கலையுள்ளம் படைத்தவனாதலால், கலைகளில் வல்ல மாதவியின் ஆடலைத் தற்செயலாகக் காண நேர்ந்தபோது, அவள்பால் மனத்தை ஓடவிட்டான். அந்த ஈடுபாட்டினால், கண்ணகியை மறந்து மாதவியோடு வாழத் தொடங்கினான்.

கோவலன் ஒரு கீழ் மகனாக—காமுகனாக—இருந்திருப்பானேயாகில் அவன் அவல நாடகத்தின் தலைவனாக முடியாது. சீரிய குணங்கள் பலவும் அமையப்பெற்ற ஒரு தலைவன், ஒரு சில சிறு குறைபாடுகளால் வீழ்ச்சியுறுவதைச் சித்திரிப்பதே அவல நாடகம். கலைப்பித்துக்கு அடிமையாகிக் கடிமனைக்குரிய கடமை அறத்தை நெகிழ்த்தமை ஒன்றுதான் அவன்பால் இருந்த குறை; அதனால் நற்பண்புகள் யாவுமுடைய கோவலன் மனம் கண்ணகியின்பால் நன்கு ஈடுபட்டிருப்பினும் கலையின்பால் அவன் கொண்ட அதிக விருப்பமும், சோழ நாட்டில் நிலவிய கலைமிக்க சூழ்நிலையும் அவனைக் கண்ணகியிடமிருந்து பிரித்து விடுகின்றன.

அவன் மாதவியோடு இன்புற்றிருந்த இளவேனிற் காலத்தில் வந்த மாலை நேரம் ஒன்றைத்தான் அடிகள் இங்கே வருணிக்கிறார். இருள் வந்து கவிந்த சிறிது நேரத்தில் பிறைச் சந்திரனும் அந்திவானத்து ஒருபுறத்தே தோன்றினான். அவன் பாண்டிய குலத்திற்கு முதல்வனாகக் கருதப்படுகிறவன். அக்குலத்தில் பிறந்து அரசுரிமை பெறுபவர், மிக இளையவராக இருந்தாலும் பகைவரை வெல்லும் பேராற்றல் பெற்றவராவர். பாண்டியன் சிறுபிள்ளைதானே என்று எண்ணிப் பகைவர் யாரும் அவன்மேல் படையெடுக்க முடியாது. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்ற பாண்டியன், தன் இளம்பருவத்திலேயே, முடிமன்னர் இருவரையும் குறுநில மன்னர் ஐவரையும் ஒரே போர்க்களத்தில் வென்றான் என்பதை புறநானூறு அறிவிக்கின்றது. இத்தகைய வீரப் பண்பு படைத்த பாண்டியரின் குல

முதல்வனுதலால், சந்திரனும், இளம்பருவம் வாய்ந்த பிறை யாக இருந்தாலும், தன் பகையான இருளை ஒட்டும் ஆற்ற லைப் பெற்றுள்ளான் என்று கூறுவாராய்,

இளைய ராயினும் பகையரசு கடியும்
செருமாண் தென்னர் குலமுத லாகலின்
அந்தி வானத்து வெண்பிறை தோன்றிப்
புன்கண் மாலைக் குறும்பெறிந்து ஓட்டி''

என்று கூறுகின்றார்.

தமிழகத்து முவேந்தர்களின் புகழை, ஏற்றவிடத்தி லெல்லாம் எடுத்துரைப்பதை தம் நோக்கங்களில் ஒன்றாகக் கொண்டு காவியம் பாடும் இளங்கோ, பாண்டியர் மரபின் வீரச்சிறப்பைச் சோழர் தலைநகரமான புகாரின் கலைநலம் பற்றிக் கூறும் இந்த இடத்தில் புகழ்ந்துள்ளார். விண்மீன் கள் நிறைந்த வான அரசின் வேந்தனாகச் சந்திரனை அவர் வருணிக்கிறார். அவனுடைய ஒளி உலகத்திற்குப் பகைவனா கிய இருளை ஒட்டிப் பால் நிலவை வீசி அரசைச் சிறப்புற ஆள்வதாகக் கூறுகிறார்.

நிலவு வீசிய இவ்வேளையில், மாதவி கோவலனோடு சேர்ந்திருந்து நிலவினால் பெறத்தக்க இன்பமெல்லாம் பெற் றாள். தன் மாளிகையின் நிலாமுற்றத்தில் இடப்பெற்ற பள்ளிக்கட்டிலில் முல்லை மல்லிகை முதலிய மலர்களைப் பரப்பச் செய்து, ஆடை அணிகளில் தன்னை ஒப்பனை செய்து கொண்டு அந்தக்கட்டிலில் கோவலனோடு இருந்து இன்பம் நுகர்ந்தாள். ஊடல் கூடல் ஆகியவற்றிற்கான குறிப்புக் களை மாறிமாறிக் காட்டு அவனை மகிழ்வித்தாள். கூடலால் கலைந்த ஒப்பனையைத் திருத்திக்கொண்டு மீண்டும் அவனோடு அளவளாவினாள். காவிரிப்பூம்பட்டின நகரம் எங்கும், அவளைப் போலவே காதலரோடு இணைந்த காரிகையர், அந்தி மாலையின் அளவிலா இன்பத்தைப் பெற்று மகிழ்ந்தனர். இன்பம் நுகரும் காலத்து, அவர்கள் பயன்படுத்திய பொருள்

களை இளங்கோவடிகள் கூறுவது நாம் இங்கே காணத்தக்க தாகும்.

பனிக்காலம் போய் இளவேனிற்காலம் வந்துள்ளது. அயல் நாட்டிலிருந்து வந்த கண்டசர்க்கரை நம் நாட்டு அகிற்கட்டை ஆகியவற்றைத் தீயிலிட்டுக் குளிர்காயும் வழக்கத்தைவிட்டு, நகரத்துச் செல்வர்கள் வடமலையில் பிறந்த அரை கல்லில் தென்மலைச் சந்தனக்கட்டையை அரைத்து அதன் குழம்பை மார்பில் பூசிக்கொண்டார்கள். மலர் மாலைகளையும் மணி மாலைகளையும் அணிந்து கொண் டார்கள். மெல்லென வீசிய தென்றலின் இன்பத்தை உயி ரனைய காதலரோடு கலந்து அனுபவித்தார்கள்.

இளவேனிற் காலத்து இன்ப வாய்ப்புக்களை நன்கு பயன்படுத்திக் கொள்ளும் பேறு மாதவிக்குக் கிடைத்தது. ஆனால் கோவலன் மனைவியாகிய கண்ணகிக்கோ இக்காலம் எவ்வித பயனையும் அளிக்கவில்லை. பிற பெண்கள் காலந் தோறும் வெவ்வேறு இன்பப் பொருள்களை மாற்றி மாற்றித் துய்த்து வர, அவள் அளவில் எல்லாக் காலமும் மாறுதலின்றி ஒரே மாதிரியாகத் துன்பம் நிறைந்தே இருந் தது என்பதைத் தெரிவிப்பதற்காகவே அடிகள் இவ்வின்ப நுகர்ச்சியை விரிவாகக் கூறலுற்று,

மனைர சாண்ட வெள்ளி விளக்கத்தில்
இல்வளர் முல்லையோடு மல்லிகை யவிழ்ந்த
பல்பூஞ் சேக்கைப் பள்ளியுள் பொலிந்து
செந்துகிர்க் கோவை சென்றேந்து அல்குல்
அந்துகில் மேகலை அசைந்தன வருந்த
நிலவுப்பயன் கொள்ளும் நெடுநிலா முற்றத்துக்
கலவியும் புலவியும் காதலற் களித்து ஆங்கு
ஆர்வநெஞ்சமொடு கோவலற்கு எதிரிக்
கோலம் கொண்ட மாதவி யன்றியும்
குடதிசை மருங்கின் வெள்ளயிர் தன்னொடு
குணதிசை மருங்கில் காரகில் துறந்து

வடமலைப் பிறந்த வான்கேழ் வட்டத்துத்
தென்மலைப் பிறந்த சந்தனம் மறுகத்
தாமரைக் கொழுமுறித் தாதுபடு செழுமலர்க்
காமரு குவளைக் கழுநீர் மாமலர்ப்
பைந்தளிர்ப் படலை பருஉக்காழ் ஆரம்
சுந்தரச் சுண்ணத்துத் துகளொடும் அளைஇச்
சிந்துபு பரிந்த செழும்பூஞ் சேக்கை
மந்த மாருதத்து மயங்கினர் மலிந்து ஆங்கு
ஆவியங் கொழுநர் அகலத்து ஒடுங்கிக்
காவியங் கண்ணார்''

களித்துயில் எய்தினர். கண்ணகியைப் போன்ற பிற இளம் பெண்களின் நிலையையும் அவள் நிலையையும் ஆசிரியர் இங்கு வேறு படுத்திக் காட்டுகின்றார். அவர்கள் எல்லாம் கணவரின் மார்பில் களித்துத் தூங்கினராக. அவள் தூக்கமின்றிப் பல இரவுகளைக் கழித்தாள். அவள் அழகிய ஆடையணிகளை அணிந்து எத்தனையோ நாட்கள் ஆய்விட்டன. மணிச்சிலம்பு அவள் பாதங்களை அணு செய்யவில்லை; அவள் இடையில் மேகலை இலங்கவில்லை; அவள் கூந்தல் நெய்யிட்டுச் சீவி முடியுறப்பெறவில்லை; அவள் நெற்றியில் திலகம் விளங்கவில்லை; கண்களில் மை தீட்டப்படவில்லை; மங்கல அணியல்லாமல் வேறு அணிகளில் அவள் விருப்பம் செல்லவில்லை. கற்புடைய மகளிர் கணவர் இல்லாதபோது தம்மை அணிகளால் ஒப்பனை செய்து கொள்ள விரும்பார் அன்றோ! கண்ணகியின் சிந்தனையைத் துயரம் வாட்டியதால் அவள் நெற்றியில் சிறு சிறு வியர்வைத் துளிகள் தோன்றின; புன்னகையோ அவள் முகத்தினின்றும் மறைந்தது. அதைப்பெற்று மகிழும் வாய்ப்பைக் கோவலன் இழந்தான். அவள் செயலற்ற நெஞ்சினளாய் அமர்ந்திருந்தாள்.

அஞ்செஞ் சீறடி அணிசிலம்பு ஒழிய
மென்துகில அல்குல் மேகலை நீங்கக்
கொங்கை முன்றில் குங்குமம் எழுந்தாள்

மங்கல அணியின் பிறிது அணி மகிழாள்
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்
திங்கள் வாண்முகம் சிறுவியர் பிரியச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்ப
பவள வாள்நுதல் திலகம் இழப்ப
தவள வாள்நகை கோவலன் இழப்ப
மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்
கையறு நெஞ்சத்துக் கண்ணகி

நிலா முற்றத்தில் உள்ள பள்ளியில் இருந்து நிலவின் ஒளியையும் தென்றலின் இன்பத்தையும் நுகர்தலை விரும்பவில்லை. புழுக்கம் மிக்க குளிர்காலப் படுக்கையறையினுள் நுழைந்து அங்கிருந்த சிறு சாளரங்களையும் அடைத்து விட்டுத் தூக்கம் இன்றிப் படுக்கையில் புரண்டாள். கண்ணீர் சிந்தினாள். அவளைப் போலவே, காதலரைப் பிரிந்த வேறு சில பெண்களும் வருந்தினர். கணவன்மார்களின் கலங்கா நெஞ்சங்களையும் ஊடல் காலத்தில் கலங்கச் செய்த அவர்களுடைய கண்கள் பிரிவின் காரணமாக கண்ணீர் வடித்தன. கணவரோடு கூடிய பெண்களெல்லாம் இரவு நேரம் கழிவது தெரியாமல் துயில் கொள்ளவே, கண்ணகியை ஒத்த பெண்கள் இரவு முழுவதும், மன்மதன் காவிரிப்பட்டின விதிகளில் கரும்புவில் ஏந்தி காவல் செய்து திரிவது போல் தூக்கமில்லாது வருந்தினர்.

# 8. இந்திரவிழா

தேவர்களுக்குத் தலைவனான இந்திரனை முழுமுதற் கடவுள் என்றே இருக்குவேதமும் மற்ற வேதங்களும் கூறுகின்றன. யாகங்களில் அவிர்ப்பாகத்திற்கு உரியவனும் அண்ட சராசரங்களை ஆட்டி வைப்பவனுமாகிய அவன், பின்பு சிறு தெய்வங்களில் ஒன்றாகத் தாழ்த்தப்பட்டான். அவனுக்கு இன்று கோயில் கூடக் கிடையாது. மாணிக்கவாசகப் பெருந்தகைக்கோ, வள்ளுவருக்கோ, அவன் வழிபாட்டில் சிறிதும் ஈடுபாடில்லை. வாதவூரார், இந்திரனைச் சுயநலக் காரன் என்றே கூறுகின்றார். அவன் ஆண்டவனைப் பணிவதும் தான் வாழ்வதற்காக என்றே கூறுகிறார். "வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் மனம் நின்பால் தாழ்த்துவதும் தாம் உயர்ந்து தம்மையெலாம் தொழவேண்டி...' என்பது காண்க. வள்ளுவரும் தேவரைக் கயவருக்கு ஒப்பாக நிறுத்தி 'தேவர் அனையர் கயவர் அவரும் தாம் மேவன செய்து ஒழுகலான்..." என்பது காணலாம்.

இந்திரன் கற்பகத் தருவும் காமதேனுவும் உடைய நாட்டை ஆண்ட ஒரு பெரு மன்னன் என்றும், அவன் பாரத நாட்டை ஆளவேண்டும் என்ற எண்ணமுடையவன் என்றும் நாம் அறிகிறோம். இந்த எண்ணத்தை அடைய முடியாதவாறு, அரக்கர் என்ற இனமும், பாரதமக்களும் செய்துவந்தனர் என்பது தான் புராணங்கள் கூறும் வரலாறு. இராவணன் தேவர்களை வென்று திரும்புங்கால், இமயம் தடுத்தது என்பதனால், தேவலோகம் என்பது இப்பொழுது கூறப்படும் சீனா தேசமாகுமோ என நினைக்க

நேருகிறது. சீனர்கள், வரலாறு தொடங்குவதற்கு முன்னரே பெருநாகரிகம் படைத்தவர்கள் என்பது வரலாற்று அறிஞர் கண்ட உண்மை. அவர்களே தங்களைத் தெய்வப் பிறவிகள் (*Celestials*) என்று கூறுகிறார்கள். பாரத பாகவத புராண காலத்தில், இவனுக்கு வழிபாடு செய்வது தவறு என்று கண்ணன் கூறியதாக நாம் அறிகிறோம். அவனது படையெடுப்பைக் கோவிந்த (கோவர்த்தன) கிரியைக் கொண்டு கண்ணன் தடுத்ததையும் நாம் பாகவதத்தில் படிக்கின்றோம். பணம் படைத்த நாடுதான் உலக ஆதிக்கம் பெறமுடியும் என்பதை இன்று அமெரிக்க நாடு செல்வாக்குப் பெற்றிருப்பதிலிருந்து நாம் அறிகிறோம். அது போல எல்லாச் செல்வமும் படைத்த தேவர்கள், பிற நாடுகளை அடிமைப்படுத்தி ஒரு புதிய சாம்ராச்சியத்தை ஏற்படுத்த நினைத்ததில் தவறு ஒன்றும் இருந்திருக்க முடியாது. வெற்றிக் கொடியுடன் வந்தவர்கள் பிற மக்கள்; பின்பு அவர்கள் தங்களுடைய மன்னனையும் வணங்கி வழிபட வேண்டுமென்ற எண்ணமுடையவர்களானார்கள். சப்பான் நாட்டில் வழிபடுதற்குரிய தெய்வங்களாகவே மன்னர்கள் இருக்கிறார்கள். யேசுநாதர் காலத்திலும், ரோமாபுரி மன்னனை வணங்க மறுத்ததே அரசத் துரோகம் என்று அவரைச் சிலுவையில் அடித்துக் கொன்றார்கள் அந்த நாட்டவர். ஆகையால், மன்னன் வணக்கத்திற்கு உரியவன் என்ற குறிக்கோளை நிறுவுவதற்கே, கற்றோர் பலரும் தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்தி நிலவுலகில் பரப்பினர். வாழ்வாங்கு வாழ்ந்தால் மக்கள் தெய்வமாவர் என்பதைத் திரித்து, 'மன்னன்தான் தெய்வம், அவனைப் பார்ப்பதே தெய்வங்களைப் பார்ப்பதற்குச் சமம்' என்று கவிதைகளைச் செய்து நாட்டில் நிலவ விட்டனர். வேந்தன், நாளடைவில் தெய்வத்தின் அவதாரமானான். அவ்வாறுதான். இந்திரனும் தெய்வத் தன்மை அடைந்து வேதத்திலே ஒரு சிறப்பிடம் பெற்றான். தமிழகத்தில் இந்திரன் ஐவகை நிலத்தெய்வங்களில் ஒருவனானான். ஆனால் கண்ணன் போன்ற பெருமக்கள் தோன்றி அவன் மன்னனேயன்றித் தெய்வம் அல்லன் என்ற

உண்மையை வெளிப்படுத்தினுர்கள். இந்த உண்மை தெரிந்த பின், புராணங்களும், இதிகாசங்களும் இந்திரனைத் தெய்வ நிலையிலிருந்து இறக்கித் தேவர்களுக்குத் தலைவனுக்கின. தமிழ் நாட்டில் அவனுக்கு வழிபாடு நடந்துவந்தது. தூங்கு எயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் காலத்தில் இவ்விழா முதல்முதல் தொடங்கி இருபத்தெட்டு நாட்கள் நடைபெற்றது. பின்பு ஆண்டுதோறும் இடைவிடாமல் வேனிற் காலத்தில் கொண்டாடப்படும் விழாவாக இது விளங்கிற்று. சிலப்பதிகாரக் காலத்தில் இஃது உச்ச நிலையை அடைந்திருந்தது.

இளங்கோவடிகள் இந்திரவிழாவைப் பற்றிய செய்திகளைக் கூறுமுன் நம்மைப் புகார் நகரத்துக்கு அழைத்துச் செல்லுகிறுர். காவிரிப்பூம்பட்டினம் என்ற புகார் நகரம், கடல் கொண்டு செல்லப்பட்ட நகரமாதலால், நாம் இன்று அதைப் பார்க்க முடியாது. இன்று அஃது ஒரு கடற்கரைச் சிற்றூராக இருக்கிறது. பூம்புகார் என்று கூறப்பட்ட அந்நகரம் அடிகள் காலத்தில் சீரும் சிறப்பும் பெற்று, ''இமயமும் கடலும்போல் என்றும் வாழும்'' என்ற பெருமையுடனிருந்தது. ஆனுல், முழுமையாகக் குற்றமற்றதாக உருவாகப் பெறும் யாவும் அழியும் என்பதற்கிணங்க மணிமேகலைக் காலத்தில் புகார் நகரம் அழிந்தது. இதைத் தான் நாம் கண்ணேறுபட்டு விட்டது என்று கூறுகிறோம்.

நிலத்தை அடிகள் ஒரு பெண்ணிற்கு உவமையாகக் காட்டுகிறுர். அவள் அணிந்திருக்கும் ஆடை அலைவீசும் கடல்; அவளுடைய மார்பகம் மலை; ஆறுகளும் நதிகளும் அவள் அணிந்திருக்கும் ஆபரணங்கள்; மேகக்கூட்டங்கள் தான் அவளுடைய கூந்தல்; இருள் அம்மடந்தையின் அழகை மறைத்து நின்றது. சிறுபாணுற்றுப் படையிலும், உலகத்தை ஒரு பெண்ணுக உருவகப்படுத்தியிருப்பதைக் காணலாம். ''மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை, அணி முலைத் துயல் வருஉம் ஆரம் போலச், செல்புனல் உழந்த சேய்வரற்கான் யாறு'' என்று கூறுவதை யொட்டியே

"அலைநீராடை மலைமுலை யாகத்து, ஆரப் பேரியாற்று மாரிக் கூந்தல் கன்னகன் பரப்பின் மண்ணக மடந்தை, புதையிருட் படா அம்போக நீக்கி, உதைய மால்வரை உச்சித் தோன்றி, உலகு விளங்கு அவிரொளி மலர்கதிர் பரப்பி, வேயாமாடமும் வியன்கல இருக்கையும், மான்கண் காதலர் மாளிகை இடங்களும், கயவாய் மருங்கிற் காண் போர்த் தடுக்கும் பயனற வறியா யவனர் இருக்கையும், கலந்தரு திருவின் புலம்பெயர் மாக்கள், கலந்திலிது உறையும் இலங்கு நீர்வரைப்பும்" என்று கூறுவதைப் பட்டினப் பாலையிலும் காண்கின்றோம்.

சூரியன் கிழக்கே உதித்தான். அவனுடைய செந்நிறக் கதிர்கள் உச்சியிலே தோன்றியவுடன், உலகம் எங்கும் இருள் அகன்றது. அப்பொழுது நிலா முற்றங்களும் மான் கண்களைப் போன்ற துவாரங்களை உடைய சாளரங்களை உடைய மாளிகைகளும் யாவரும் காணும்படியிருந்தன. புகார் நகரக் கடற்கரையில் கிரேக்க நாட்டிலேயிருந்து வந்து குடியேறிய யவனர்களின் வீடுகளும், கடலோடிகளின் வீடுகளும் இருந்தன. புகார் நகரம் ஒரு கடற்கரைப் பட்டினம். அங்கு வெளிநாட்டு வாணிபமும் மிகுந்திருந்ததால் வேறு பல நாட்டவர்கள் அங்கு வந்து தங்கியிருந்தனர்.

பெண்கள், தங்கள் தோள்களிலும் பிறவிடங்களிலும், வண்ணம் எழுதத்தக்க பல வாசனைப் பொருள்களும், பொட்டிட்டுக் கொள்ளக்கூடிய சாந்தும், பூவும், கூந்தலைப் பினிக்கும் மணக்கயிறும் அகிற் புகையைத் தரும் கட்டைகளும் பூம்புகார் நகரத் தெருக்களிலே விலை கூறி விற்கப்பட்டன. பட்டு, ஆட்டு மயிர், பருத்தி நூல்களினால் நெய்யப்பட்ட ஆடைகள் அங்கே காணப்பட்டன. கலைச்செல்வர்கள் அந்த வீதிகளில் தங்களுடைய வேலைத்திறன்களைக் காட்டி வந்தவர். எல்லா வகையான பொருள்களும் அங்கு விற்பனையாயின. பொன், மணி, முத்து, பவளம் முதலிய விலை உயர்ந்த பொருள்களும் சாதாரணப் பொருள்களும் அங்கு ஒரேவிதமாக விற்கப்பட்டு வந்தன.

இளங்கோவடிகள் பூம்புகாரைக் கூறும்போது, வெற்றிலை கட்டுவோர் முதற்கொண்டு பல திறப்பட்ட வணிகர்களைப் பற்றிக் கூறுகிறார். பிட்டு விற்பவர்களும், அப்பம் சுடுவோர்களும் அவர் பாட்டிலே இடம் பெற்று விடுகின்றனர். இதனை அவர்,

வண்ணமும் சுண்ணமும தண்ணறுஞ் சாந்தமும்
பூவும் புகையும் மேவிய விரையும
பகர்வனர் திரிதரும் நகர வீதியும்
பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டும் நுண்வினைக் காருக இருக்கையும்
தூசும் துகிரும் ஆரமும் அகிலும்

என்று கூறுகின்றார்.

பூம்புகார் நகரத்திலே, எழுநிலை மாடங்களும் இனிய மாளிகைகளும் அமைந்திருந்தன என்பதை முன்னம் கண்டோம். அந்த நகரிலே, பல வணிகப்பெருமக்கள் பல வகையான வாணிகங்களைச் செய்து வந்தனர். சிறு கைத்தொழில் முதல் பெரிய தொழில்கள் வரை யாவும் சிறப்புற்றிருந்தன. பண்டங்களைப் பகுதி பகுதியாக வைத்து விற்கும் பெரிய பண்டகசாலைகளையும் நாம் அங்கே காண்கிறோம். இப்பண்டக சாலைகளை, அமெரிக்கா, சப்பான் முதலான நாட்டினர் டிபார்ட்மென்டல் ஸ்டோர்ஸ் (*Departmental Stores*) என்று கூறுவர்.

ஒரு நகரம், செல்வத்திலே திகழ்ந்து விளங்குமானால் அங்கு இயல் இசை நாடகம் முதலானவை சிறந்து விளங்கும். இதற்கு ஏற்ப,

"குழலினும் யாழினும் குரல்முத லேழும்
வழுவின் றிசைத்து வழிதிறம் காட்டும்
அரும்பெறல் மரபின் பெரும்பாண் இருக்கை"கள்

அந்நகரில் இருந்தன.

குழலிலும் யாழிலும் பாடும் அவ் வல்லவர்கள் பாணர்கள் என்று அழைக்கப்பட்டனர். இந்த இசை

வாணர்கள் கடல் கடந்து சென்று தங்கள் திறமையை உலகிற்குக் காட்டி வந்தனர் என்பது கீழை நாட்டுப்பழங் குறிப்புகளால் தெளிவாம். இளங்கோவடிகள் காலத்தே, தமிழ்க் குடிகள், 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற சிறப்பை ஒருபால் கொண்டவராயினும் செய் தொழில் வேற்றுமையைப் பெரிதும் மதித்து வந்தனர். ஒவ்வொரு வீதிக்கும் ஒவ்வொரு பெயரிட்டு வழங்கும் வழக்கமும் மிகுவதாயிற்று.

அரசர்களும் அவர்களைச் சுற்றியிருப்போரும் வாழும் வீதி கோவியல் வீதி, என்றும், வாணிகர் குடியிருப்பென்றும், மறையோர் அல்லது பார்ப்பனர் குடியிருப்பென்றும், காலவல்லுநர் சோதிடர் குடியிருப்பென்றும், இவ்வாறே பெயர் குறிக்கப்பட்ட பல்வேறு வீதிகளும் அவண் இருந்தன.

கோவியல் வீதியும் கொடித்தேர் வீதியும்
பீடிகைத் தெருவும் பெருங்குடி வாணிகர்
மாட மறுகும மறையோ ரிருக்கையும்
வீழ்குடி உழவரோடு விளங்கிய கொள்கை
ஆயுள் வேதரும காலக் கணிதரும்
பால்வகை தெரிந்த பன்முறை யிருக்கையும்

என்று இளங்கோ முறைப்படக் கூறுகின்றார்.

விலை மாதர்களுக்கும் காதற் பரத்தையர்களுக்கும் குற்றேவல் புரியும் மகளிர்க்கும் தனித் தனி வீதிகள் இருந்தன.

காவற் கணிகையர் ஆடற் கூத்தியர்
பூவிலை மடந்தையர் ஏவற் சிலதியர்
பயில் தொழிற் குயிலுவர் பன்முறைக் கருவியர்
நகைவேழம்பரொடு வகைதெரி யிருக்கையும்

என்று பரத்தையர்களில் பல்வேறுபட்ட பண்பும் இயல்பும் டையார்க்கும் தனித்தனி இருக்கை இருப்பதை ஆசிரியர் புலப்படுத்துகிறார்.

இவ்வாறு பல்வேறு தெருக்களையும் உடைய புகார் நகரம் மருவூர்ப்பாக்கம் பட்டினப்பாக்கம் என இரு பகுதி யுற்று இருந்தது. சோழர் தலைநகரின் இவ்விரு பகுதிகளுக்கும் இடையே பன்னிற மலர்களைப் பூத்திருக்கும் நன்னிழல் மரங்கள் அடர்ந்த சோலை ஒன்று இருந்தது. அச்சோலையின் கண் நாளங்காடி என்ற கடைகளின் வரிசை அமைந்திருந்தது. நாளங்காடி என்பது பகல் நேரத்தில் சிறு வணிகர் தத்தம் பொருள்களை விலை கூறி விற்கும் கடைகளின் வரிசையாகும். இரவு நேரங்களில் திறந்திருக்கும் கடையை அல்லங்காடி என்பார்கள். இவ்வாறு நாளங்காடியும் அல்லங்காடியும் ஆகிய இருவகைக் கடைகள் பாண்டியர் தலைநகரமாகிய மதுரையிலும் அமைந்திருந்தன என்பது மதுரைக் காஞ்சி என்ற பெரும்பாட்டால் தெரிகின்றது. மதுரையில் இன்றும் அம்மன்கோயில் பக்கத்தில் 'ஈவினிங்பஸார்'' என்ற அந்திக் கடைத்தெரு அமைந்திருப்பதே இதற்குச் சான்று.

ஒரு நாட்டின் செல்வ நிலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு அந்நாட்டிலும் நகரங்களிலும் நடைபெறும் இடைவிடாத உழைப்பும் தொழிலுமே ஆகும். கொள்வோரும் கொடுப்போரும் நிறைந்து விளங்கிய காவிரிப்பூம்பட்டினத்தில் பல்வேறு மன்றங்களும் மண்டபங்களும் அமைந்திருந்தன. அந்நகரைக் காவற்பூதம் ஒன்று காத்து வந்தது. அஃது இந்திரன் ஏவலால் சோழ அரசர்க்கு நேரும் துயரையும் இடையூறுகளையும் போக்குவதற்காக அங்கு நிறுவப்பெற்றது. இப்பூதத்திற்கு மன்றங்களிலும் மடங்களிலும் மக்கள் பூவும் புகையும் பொங்கலும் சொரிந்து பலியிட்டு ஆர்த்தனர். மகளிர் பலரும் நாடெங்கும் பசியும் பகையும் ஒழிந்து வசியும் வளனும் சுரக்க என வாழ்த்திக் குரவையாடினர்; மருவூர்ப் பாக்கத்து மறவரும் பட்டினப் பாக்கத்துப் படைவீரரும் ''மன்னர்க்கு வெற்றி சிறப்பதாக'' என்று முந்திச் சென்று முழுப்பலியிட்டனர்.

கொடுப்போ ரோதையும் கொள்வோ ரோதையும்
நடுக்கின்றி நிலைஇய நாளங் காடியில்

சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென
வெற்றிவேன் மன்னர்க்கு உற்றதை ஒழிக்கெனத்
தேவர் கோமான் ஏவலிற் போந்த
காவற் பூதத்துக கடைகெழு பீடிகைப்
புழுக்கலும் நோலையும் விழுக்குடை மடையும்
பூவும் புகையும் பொங்கலும் சொரிந்து
துணங்கயர் குரவையர் அணங்கெழுந்தாடிப்
பெருநில மன்னன் இருநில மடங்கலும்
பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி
மாதர்க் கோலத்து வலவையி னுரைக்கும்
மூதிற்பெண்டிர் ஓதையிற் பெயர
மருவூர் மருங்கின் மறங்கொள் வீரரும்......

என்னும் அடிகள் மேற்சொன்னவற்றை விளக்கும்.

முன்னர்ப் பெருவலி படைத்த கரிகால் வேந்தன் தெற்கிலும் மேற்கிலும் தெவ்வரைப் பெருது வடக்கு நோக்கிச் சென்று இமயம் கண்டு புலிப்பொறி பொறித்துத் திரும்புங்கால் வடநாட்டில் வாழ்ந்த மகத மன்னன் அவந்திவேந்தன் முதலியோர் உவந்து கொடுத்த கொற்றப் பந்தர், பட்டி மண்டபம் முதலியவற்றிலும் விழாச் சிறப்புக்கள் நடைபெற்றன. கூனும், குறளும், ஊமரும், செவிடரும், தத்தம் எச்சம் தீரத்தக்க இலஞ்சி மன்றம் முதலிய மன்றங்களிலும் விழாவுக்குரிய சிறப்புக்கள் நடைபெற்றன.

புகார் நகரம் மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம் என இரு பிரிவுகளையுடையதென்று முன்னே கூறினேம். இவை இரண்டுக்கும் இடையில் நாளங்காடியென்னும் சந்தை இருக்கிறது. இங்கே காய்கறிகளும் பிறவும் கொண்ட நிலையான கடைகள் உண்டு. இவை பகல் முழுதும் இருக்கும். ஆதலால் இவைகளை நாளங்காடி என்பது வழக்கம். இங்கே எப்போதும் மக்கள் கூட்டம் பெருகி ஒரே ஆரவார மாய் இருக்கும். இங்கே காவற் பூதத்திற்குக் கோயில் ஒன்று உண்டு. தேவர் கோமானுகிய இந்திரன் கட்டளைப்

படி வேந்தனைக் காக்கும் பொருட்டு இக்காவற் பூதம் அமைக்கப்பட்டிருக்கிறது. அதன் எதிரேயுள்ள பலிபீடத்துக்குப் பூத பீடிகை என்று பெயர். இங்கே ஆண்டுதோறும் சித்திரைத் திங்களும் சித்திரை நாளும் கூடிய பௌர்ணமியன்று இந்திர விழா தொடங்கும்.

மறக்குடியில் பிறந்த பெண்கள் அன்று பகற்போதில் பொங்கலும் பூவும் எடுத்துக்கொண்டு சென்று பீடிகையில் வைத்துப் பெருநில மன்னனையும் அவனது நாட்டையும்

''பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்க''

என வாழ்த்தித் துணங்கைக் கூத்தும் குரவைக் கூத்தும் ஆடிப் பரவுவார்கள்.

போர்க்களத்தில் வெற்றிபெற்ற வீரர்கள், உயிர்ப்பலி கொடுத்து, அவற்றின் தலைகளைப் பலிபீடத்தில் வைத்து ''வெற்றி வேந்தன் கொற்றம் கொள்வானாக'' என்று வேண்டுவர். பூம்புகார் நகரவிதிகளெல்லாம், பூரணகும்பம், பொற்பாலிகை பாவை விளக்கு முதலியவற்றால் அலங்கரிக்கப்படும்.

சோழவேந்தன், ஒருகால், ஏனைநாட்டு மன்னரும் தன் தோள்வலி காண வேண்டுமெனக் கருதி வடதிசை நோக்கி இமயம்வரையில் சென்றான். அவனை அந்த இமயமலை தடுத்தமையின் அதன் முடிவில் புலிப்பொறியிட்டுத் திரும்பினான். அப்போது வச்சிர நாட்டு மன்னன் கொற்றப்பந்தர் தந்தான்; மகத நாட்டரசன் பட்டி மண்டபம் கொடுத்தான்; இவ்வாறே அவந்தி வேந்தன் தோரணவாயிலும் வேறு வேந்தர் பிறவும் கொடுத்தனர். இவற்றைக்கொண்டு புகார் நகரத்தின் பல்வேறு இடங்களும், பொன்னாலும் மணியாலும் உலகிலே மிகவும் கைதேர்ந்த சிற்பிகளைக் கொண்டு வியக்கத்தக்க வகையில் கட்டப்பெற்றன; காண்போர் 'தேவதச்சனான மயன் அமைத்துக் கொடுக்க இங்கே இவை வந்தன போலும்' என்று தம்மிற் கூறிக்கொள்ளும் அவ்வளவு வேலைப்பாடுகள் அவைகளிலே பொருந்தியுள்ளன.

இனி, இவைகளின் வேருக, வெள்ளிடைமன்றம், இலஞ்சி மன்றம், நெடுங்கல் மன்றம், பூத சதுக்கம், பாவை மன்றம் என ஐந்து மன்றங்கள் உண்டு. இவைகளில் வெள்ளிடை மன்றத்தில் பல்வேறு வணிகரின் முத்திரையிட்ட சரக்குப் பொதிகள் கிடைக்கும். அவ்வவற்றிற்கு உரியவரன்றி வேறு எவர் வரினும் கொண்டுபோக முடியாதபடி பூதம் காக்கும் காவல் இம்மன்றத்தில் உண்டு. கூனர், குள்ளர், ஊமையர், செவிடர் முதலியோர் நாடோறும் நீராடி வழிபட்டுக்குறை நீங்கப்பெறுதற்கு இலஞ்சி மன்றம் ஒரு பெரிய மருத்துவச் சாலையாக விளங்கிற்று. நெடுங்கல் மன்றத்தில் பிறருடைய வஞ்சனை மந்திரத்தால் பித்தேறியவரும் விடமுண்டோரும் பாம்பு முதலியவற்ருல் கடியுண்டோரும், பேய் பிசாசு முதலியவற்ருல் தாக்கப்பட்டோரும் வந்து வழிபட்டுத் தெளிவு பெறுவர். பூத சதுக்கத்தில் பூதத்தின் சிலையொன்றிருக்கும்; அதன் கையில் நெடிய பாசக்கயிறு இருக்கும். 'இரவு ஏாணிகளும், தலைவர்களுக்குத் துரோகம் செய்யும் தகவில்லாதவர்களும், பிறர் மனைவியை இச்சித்துத் திரியும் ஈனர்களும், பொய் சாட்சி சொல்பவர்களும், புறங்கூறுவோரும், எனது நான்கு காத எல்லைப் பரப்புக்குள் வரலாகாது; வந்தால் அவர்களை என் கைப்பாசத்தால் கட்டிக் கொன்று தின்பேன்'' என்று அப்பூதம் விளம்பரம் செய்தது. அரசன் செங்கோல் கோடினுலும் நீதிமன்றங்களில் நீதிபதிகள் முறை தவறினுலும், பாரபட்சம் காட்டினுலும் வாயாற் சொல்லாது கண்களில் நீர் சொறிந்து அழுகின்ற பாவையொன்று பாவை மன்றத்தில் நிறுத்தப்பட்டிருந்தது.

இந்திரவிழா தொடங்கும் நாளில் வச்சிரக் கோட்டத்தில் உள்ள முரசுக்குப்பலியிட்டு யானைமேல் ஏற்றி நகரத்தார்க்கு விழாத் தொடங்கும் செய்தியை நகரத் தலைவர் தெரிவிப்பர். அக்கோட்டத்தில் கொடியேற்றி, மரகதம் வயிரம் முதலிய மணிகள் வைத்து இழைத்த மேடையில் தோரணம் கட்டிப் பூரண கும்பமும் பொற்பாலிகையும் பாவைவிளக்கும் பிறவும் வைத்துச் சுண்ணப்பொடி தூவி,

''ஐம்பெருங் குழுவும் எண்பே ராயமும்
அரச குமரரும் பரத குமரரும்''

குதிரைமேலும், யானைமேலும், தேர்மேலும் ஏறிவந்து அங்கே கூடுவர். மன்னன் தெய்வப் பிறவி என்று கருதப் பட்டு வந்த அந்த நாளிலும், அவன் ஐம்பெருங் குழுவும் *எண்பேராயமும் †துணைபுரிய மக்களாட்சி முறைகளை அமைத்து நாட்டை ஆண்டு வந்தனர். தம்முயிர்க்கு உறுதி எண்ணாது, தலைமகன் வெகுண்டபோதும் அவனது வெம் மையைத் தாங்கி நீதியை விடாது எடுத்துரைக்கும் தன்மை யைப் பெற்ற குழுவும் ஆயமும் அன்று அரசவை எதிர்க் கட்சிகள் போலச் சிறந்து விளங்கின. இவர்கள் யாவரும் கூடி,

''உரைசால் மன்னன் கொற்றும் கொள்க என
மாயிரு ஞாலத்து மன்னுயிர் காக்கும்
ஆயிரத்தோ ரெட்டு அரசுதலைக் கொண்ட''

குடங்களில் காவிரியாற்றுத் தண்ணீரைக் கொண்டு அங்கே எழுந்தருளப் பண்ணியிருக்கும் இந்திரன் சிலைக்கு''விழுநீர்'' ஆட்டுவர் (அபிடேகம் செய்வர்). அதன்பின் அனைவரும் திரண்டு புகாரிலுள்ள சிவன்கோயில், முருகன் கோயில், பல தேவன் கோயில், கண்ணன் கோயில், அரசன் கோயில் அனைத்திலும் வேதியர் வேதமோதித் தீயோம்பி விழாக் கொண்டாடுவர்.

சோழர்கோ நகரமாகிய காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திர விழாவின்போது சிவபெருமான் முதல் திருமால் ஈறாக உள்ள எல்லாக் கடவுளர்களின் கோயில்களிலும் சிறப்பும் பூசனைகளும் செய்யப்பட்டன என்பதை முன்னர்க் கண்டோம். இளங்கோவடிகள் தரும் இக்குறிப்பினால் பல உண்மைகள் வெளிப்படுகின்றன என்பது ஆராய்வார்க்குப் புலனாகும். ஒரு நாட்டில், மக்கள் உடல் வளமும் உள்ள

---

* *Five man Committee*
† *General Council*

வளமும் பெற்றுக் கவலையின்றி இருந்தால்தான், அங்கு விழாக்களும் வேறு சிறப்புக்களும் நடைபெற முடியும். மக்களின் வளத்திற்கும் நலத்திற்கும் உறுதுணையாவது மழையேயாகும். திருவள்ளுவரும்,

"நீர் இன்று அமையாது உலகெனின் யாஎ யார்க்கும்
வான் இன்று அமையாது ஒழுக்கு"

என்பாராயினர். கோயில் வழிபாடுகளும் கடவுட் பூசனைகளும் தவறாமல் நடைபெறுவது பருவ மழையாலே யாகும். மழை பொய்ப்பின் மக்கள் தெய்வங்களைப்பற்றி எண்ணவும் முடியாது. இதனை வள்ளுவர்,

"சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு"

என்று காட்டியுள்ளார். ஆகவே காவிரிப்பூம்பட்டினம் வளமும் நலமும் பெற்றிருந்தது என்பது தெளிவாம். மேலும்,

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்,
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீல மேனி நெடியோன் கோயிலும்
மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்
மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ
நான்மறை மரபின் தீமுறை யொருபால்
நால்வகைத் தேவரும் மூன்று கணங்களும்
பால்வகைத் தெரிந்த பகுதித் தோற்றத்து
வேறுவேறு கடவுளர் சாறுசிறந் தொருபால்
அறவோர் பள்ளியும் அறனோம் படையும்
புறநிலைக் கோட்டத்துப் புண்ணியத் தானமும்"

என்ற பகுதியால் இது நன்கு புலனாகும்.

இவ்வாறு, சோழன் தலைநகரில் அமைந்து விளங்கிய பல்வேறுகோயில்களையும் எடுத்துக்காட்டுகிறார். அடிகளார்.

அந்நகரில் பல்வேறு சமயவாதிகள் வாழ்ந்தனர். அக்கோயில்கள் யாவற்றிலும் ஒரே காலத்தில் பூசனையும் சிறப்புக்களும் நடைபெற்றன என்பதால் அப் பல்வேறு சமயத்தினரும் மனம் ஒன்றி வாழ்ந்தனர் என்பதும், இந்திர விழா ஒரு தேசீயத் திருவிழாவாகத் திகழ்ந்தது என்பதும் வெளிப்படுகின்றன. மக்கள் சமுதாயம் மிகவும் முன்னேறியிருக்கும் இக்காலத்தில் பல்வேறு சமயத்தினரும் இந்தியப் பெரு நிலப் பரப்பில் சமய ஒற்றுமையும், உயர்ச்சியும், ஒத்து வாழும் தன்மையும்* மிகவும் வேண்டப்படுவது என்பதை இச்சிலப்பதிகாரக் குறிப்பு நினைப்பூட்டுகின்றதன்றோ? அன்றியும் உலகச் சந்தையாக† விளங்கிய காவிரிப்பூம்பட்டினத்திற்கு வாணிபத்தின் பொருட்டு இடைவிடாத திரளாக வரும் யவனரும் சோனகருமாகிய வேற்று நாட்டார் சோணாட்டின் வாணிப வளத்தை மட்டும் அல்லாமல் கலை வளத்தையும் சமய உள்ளத்தையும் கண்டு களித்துச் சென்றனர் என்பது மிகையாகாது அன்றோ?

இவையேயன்றி இப்பகுதியில் மற்றொரு அரிய குறிப்பும் ஆராய்ச்சிக்கு விருந்தூட்டுவதாகும். இளங்கோவடிகளைச் சைவப் பெரியார் என்று டாக்டர் உ. வே. சுவாமிநாத ஐயர் முதலிய பெரும் புலவர்களும், சமணப் பெரியார் என்று சில அறிஞரும் கூறுகின்றனர். இளங்கோவடிகள் சிவபெருமானைப் ''பிறவா யாக்கைப் பெரியோன்'' என்றும். முருகவேளை ''அறுமுகச் செவ்வேள்'' என்றும், பலதேவனை ''வால்வளை மேனி வாலியோன்'' என்றும். திருமாலை 'நீலமேனி நெடியோன்'' என்றும் வெவ்வேறு அடைமொழிகளால் சுட்டியிருப்பது சிந்திக்கத் தக்கது. சிவபெருமான்தான் முழுமுதற் கடவுள் என்பது அடிகள் ஒப்புக்கொண்ட ஒன்று என்பது இதனால் தெளிவாகிறது. மாணிக்கவாசகரும் ''தாயுமிலி தந்தையிலி தான் தனியன் காணேடி'' என்றும், ''முன்னைப் பழம் பொருள்'' என்றும் கூறுவர்.

---

**Peaceful co-existence in the religious field*

†*International Market.*

உயிர்களின் இயல்பாகிய பிறப்பை அடையாதவன் தான் இறைவன். பிற சமயங்கள் கூறும் கடவுள்கட்குப் பிறந்த கதை மறைந்த கதை உண்டு; ஆனால் சிவபெருமானுக்குப் பிறந்த கதையோ அல்லது இறந்த கதையோ நாம் கேட்ப தில்லை; ஆகையால்தான் அவனைப் ''பிறவா யாக்கைப் பெரியோன்'' என்று அடிகள் கூறினர்.

ஆசிரியர் இளங்கோவடிகள், ''பயனில் சொல்'' பாராட்டுபவரல்லர். சொற்பொருள் நுனித்தறியும் சங்கச் சான்றோர். நிரலில் வைத்து எண்ணத்தக்க பெருமை உடையவர் அடிகள் என்பதை அறிஞர்கள் மறுக்க மாட்டார்கள். இங்கே கூறப்பட்ட நால்வகைக் கடவுளர்களில் பலதேவனை யும் திருமாலையும், வண்ணத்தாலும், சிவபெருமானை இயற்கை அடையாலும் குறித்துள்ளார். முருகன் சிவபெரு மானுதலால் அவர் அடுத்து வைத்து எண்ணப்பட்டுள்ளார். பிறவாமையாகிய பண்பு இருக்குமேல் இறவாமையும் உட னுண்டாம் என்பது சொல்லாமலே விளங்கும். எனவே சிவனே பிறப்பும் இறப்பும் இல்லாப் பெரும் பொருள்; முழு முதற் பரம்பொருள் என்பது புலப்படும். பிறப்பு இறப்புக் கள் தோன்றுதொழிய வேண்டுமாயின். இருள்சேர் இரு வினையும் பிறப்பு இறப்புக்களும் அற்ற பெரும்பொருளே எல்லா உயிர்க்கும் பரம்பொருள் என்பது பெறப்படும். ''திருவள்ளுவரும், ''இருள்சேர் இருவினையும் சேரா இறை வன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு'' என்று கடவுள் வாழ்த்தாகப் பாடியிருப்பதும் இங்கு நோக்கத்தகும்.

இவ்வாறு பண்பியல்களால் சிவபெருமானை உயர்த்திப் பேசும் இளங்கோவடிகளைச் சிவநெறியினர் எனக்கொள்ளு தலே ஏற்புடையதாகும். பிற சமயங்களைப் புறக்கணிக்கக் கூடாது என்பது அவைகளைப் படிமுறையாக (சோபன மாக)க் கொண்டு போற்றவேண்டும் என்பதும் சிவநெறி யின் அடிப்படையான கொள்கை. கவுந்தியடிகள் பேசும் போது சமண சமயமும், ஆயர் கூட்டத்தில் வைணவ சமய மும், வேட்டுவர் கூட்டத்தில் சாக்த சமயமும் (கொற்றவை

வழிபாடு) கூறப்படுவது இதுபற்றியேயாகும். ஆகையால் தான் அடிகள்பால் புறச்சமயக்காழ்ப்பு ஒரு சிறிதும் இல்லை யாயிற்று என்பது தெற்றென விளங்கும். இப்பண்பு உயர்ந்த சைவப் பெருமகனுர்க்கு இருக்கவேண்டுவது இன்றியமை யாத ஒன்ருகும்.

இனிக் கடவுளரின் கோயில்களைக் குறித்தவர் அவற்று டனே ''மாலை வெண்குடை மன்னவர் கோயிலும்'' என்று உரைப்பதால், அக்கடவுளர்க்கு அடுத்த நிலையில் கண்கண்ட நடமாடும் தெய்வமாக இருப்பவன் முறை தவருத மன்ன வன் என்பதும் விளங்கும்.

இந்திரவிழா எடுத்த காதையுள் இவ்வுண்மைகள் கரு வும் திருவும் கொண்டு மிளிர்வதால் இப்பகுதி விரிந்த ஆராய்ச்சிக்கு இடமாகிறது.

சோழர் பேரூராகிய காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திர விழாவின் போது பல்வேறு மன்றங்களில் பலியீடு நடை பெற்றதும், பிறவா யாக்கைப் பெரியோன் கோயில் முத லாக உள்ள எல்லாக் கோயில்களிலும் பூசனைச் சிறப்புக்கள் செய்யப் பெற்றதும் இதுகாறும் கண்டோம். இனி, ஆசிரி யர் இளங்கோவடிகள் நகரின் இரு பெரும் பகுதிகளுக்கும் இடைப்பட்டு விளங்கிய நாளங்காடிச் சோலையின் நலத்தை யும், பிற வீதிகளின் சிறப்பையும் விளங்க உரைக்கும் திறம் அறிந்து மகிழலாம்.

தெய்வத்தன்மை பொருந்திய திருவிழாவாகிய இந்திர விழாவின் பொருட்டுக் காவிரிப்பூம்பட்டினத்துச் சமணப் பள்ளிகளிலும் பௌத்தப் பள்ளிகளிலும் துறவிகள் முறைப் படி தத்தம் சமய உண்மைகளை விளக்கிச் சிறப்புச் சொற் பொழிவுகள் நிகழ்த்தினர். பொதுமன்றங்களில் அங்ஙனமே அறிஞர் பலர் சொற்பெருக்கு ஆற்றினர். வெற்றித்திருவு டைய சோழ மன்னன், தான் சிறையிட்டிருந்த வேற்றரசர் பலரையும் விடுதலை செய்தனன். இதனை அடிகள்,

'அறவோர் பள்ளியும் அறனோம் படையும்
புறநிலைக் கோட்டத்துப் புண்ணியத் தானமும்

திறவோர் உரைக்கும் செயல் சிறந்தொருபால்
கொடித்தேர் வேந்தனொடு கூடா மன்னர்
அடித்தளை நீக்க அருள்சிறந் தொருபால்'

என அறிவிக்கின்றார்.

நகரின் மற்றொரு மருங்கில் கூத்தர், குழலர், யாழர் பாணர் முதலிய பல்கலைவாணர் பலரும் தத்தம் துறையில் வித்தகத் திறலோடு முழங்குவாராயினர். சிறிய பெரிய தெருக்கள் தோறும் முழவு முதலிய தோற்கருவிகளின் முழக்கம் இடையறாது கேட்டது. இவ்வாறு பண்ணும் பாடலும் விழவும் முழவும் ஒருங்கே சிறந்த நகரில் அமைந்த நாளங்காடிச் சோலையின்கண் நகர மாந்தர் பலர் பொழில் விளையாட்டுப் புரிந்தனர். அரும்பு அலர்ந்து, செவ்வி மாறாத மாதவிக் கொடியில் பூத்த மலருடன், முல்லை, மல்லிகை, இருள்வாசி, குவளை முதலிய பன்னிறப் பூக்கள் இடைமிடைந்து தொடுக்கப்பட்ட மாலைகளைச் சூடிப் பொழிலாட்டயர நாளங் காடியில் வழக்கம் போலப் புகுந்தனர் பலர். இந்நிகழ்ச்சியை

"மாதாக் கொடுங்குழை மாதவி தன்னொடு
இல்வளர் முல்லை மல்லிகை மயிலை
தாழிக் குவளை சூழ்செங் கழுநீர்
பயில்பூங் கோதைப் பிணையலில் பொலித்து
காமக் களிமகிழ் வெய்திக் காமர்
பூம்பொதி நறுவிரைப் பொழிலாட் டமர்ந்து
நாண்மகிழ் இருக்கை நாளங்காடி"

என நயம்பட உரைத்திருப்பது அறிந்து மகிழத்தக்கது. இதில் 'மாதவி' என்ற சொல்லை மாதவி எனப்படும் குருக்கத்திக் கொடிக்கும் ஆடல் மகளாகிய மாதவி மடந்தைக்கும் பொருந்தப் பயன்படுத்தி யிருப்பது அறிவுக்கு விருந்தூட்டுவதாகும்.

இனி அடிகள், புகார் நகரத்தே தென்றல் காற்று உலா வருதலைச் சிறப்பிக்க முற்படுகிறார். நாளங்காடியில் நானா விதப் பூக்கள் விற்கப்படுகின்றன. அவை யாவும் அன்

றலர்ந்த மலர்களாகையால் எங்கும் நறுமணம் கமழ்கின்றது. பொதியிலில் தோன்றிய தென்றல் நாளங்காடியில் நறுமணம் பெற்று அகிலும் சாந்தும் அளாவப் பெற்றுக் காமுகரது நகை மொழிகளின் ஊடே புகுந்து, பாணரோடும் பரத்தையரோடும் கூடித் திரியும் கோவலனைப் போல இசைபாடும் வண்டினேடும் இனிய இளவேனிலோடும் இயைந்து வீதிகளில் உலா வந்தது. இதனை ஆசிரியர்,

'குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொ
திரிதரு மரபின் கோவலன் போல
இளிவாய் வண்டினெடு இன்னிள வேனிலொடு
மலய மாருதம் திரிதரு மறுகில்'

எனத் திறம்படச் சித்தரித்துள்ளார். இவ்வடிகளில் பாணரொடும் பரத்தரொடும் கூடித் திரியும் கோவலனை வண்டினெடும் வேனிலொடும் கூடிவரும் தென்றலுக்கு ஒப்பிட்டது மிகவும் பொருத்த முடையதாகும். இங்கே பாணருக்கு வண்டும், பரத்தர் (காமுகர்)க்கு இளவேனிலும், கோவலனுக்குத் தென்றலும் இணைக்கப்பட்டுள்ளன. பாடுதலும் கள்ளுண்டலும் பாணர்க்கும் வண்டுக்கும் ஒக்கும். பரத்தர் கோவலனுக்குத் துணை நின்று இன்பம் நல்கினர். இதனல் அடிகள், மனையின் நீங்கி மாதவி நல்கிய இன்பத்தில் மகிழ்ந்து மைந்துற்று உலவிய கோவலனது புறத்தொழுக்கத்தை உரைப்பது நினைவிற் கொள்ளத்தக்கது. கோவலனுக்குப் பரத்தர்போல வேனில் தென்றலுக்குத் துணை செய்தது: அஃதாவது: இளவேனிற் காலமாகிய சித்திரை வைகாசி மாதங்களிலேயே தென்றல் சிறந்து தோன்றும். இது பற்றியே அப்பரும் "வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்" என்று அருள்வாராயினர்.

இனி, விழா நாளன்று வீதிகளில் மைந்தரும் மகளிரும் திரிதரும் தன்மையை வியந்து விண்ணிலுள்ள பொருள்களையும் மண்ணிலுள்ள பொருள்களையும் உருவகம் செய்து காட்டும் அழகு ஆசிரியர் வாயிலாகவே படித்து இன்புறத்

தக்கது. கற்புடை மனைவியைக் கைவிட்டு காமக் கிழத்திய ரோடு கூடி மகிழ்ந்து தத்தம் இல்லங்களுக்குத் திரும்பிவரும் கணவன்மார்கள் மனைவியர் ஊடல் தீர்த்தல் பொருட்டு விருந்தினரைத் தம்மோடு அழைத்துக் கொண்டு போவதாக அடிகள் காட்டியிருப்பது ஓர் உலகியல் குறிப்பைப் புலப் படுத்துகிறது. காதலனுக்கும் காதலிக்கும் இடையே எத்த கைய ஊடல் ஏற்படினும் தம்மைத் தேடி விருந்தினர் வரு வரேல் அவ்விருவரும் ஊடல் நீங்கிக் கூடி மகிழ்ந்து விருந்து ஓம்புவதை நாம் இன்றும் காண்கின்றோம் அல்லவா? இதனை அடிகள்,

''வடமீன் கற்பின் மனையுறை மகளிர்
மாதர்வாள் முகத்து மணித்தோட்டுக் குவளைப்
போது புறங்கொடுத்துப் போகிய செங்கடை
விருந்தின் தீர்ந்தில தாயின் யாவதும்
மருந்தும் தருங்கொல்''

என்று வியந்து கூறியுள்ளார்.

இத்தகைய நிகழ்ச்சிகளையுடைய விண்ணவர் கோமான் விழாக் காலத்தில் கண்ணகியின் கருங்கண்ணும் மாதவியின் செங்கண்ணும் முறையே இடத்திலும் வலத்திலும் துடிக்க லுற்றன. இங்கே இளங்கோவடிகள் மிகத் திறமையாக நாடக நூற்புலமையுடன் பின்னே நிகழவிருக்கும் நிகழ்ச்சி ஒன்றுக்கு முன்னரே அதன் சாயலைக் காட்டுகின்றார். இதனைத் தமிழ் நூல்கள் முன்னம் என்றும், முன்னத்தின் உணர்த்தல் என்றும் கூறும்; ''முன்னத்தின் உணரும் கிளவி யும் உளவே'' என்று தொல்காப்பியர் குறிப்பது நோக்கத் தக்கது. வெளிப்படக் கூறுங்கால் இது நிமித்தமாகவும் கன வாகவும் வரும்; குறிப்பாகக் கூறுங்கால் இரட்டுற மொழித லாகவும் பொருள் பொதிந்த சொற்றொடராகவும் வரும்.*
அடுத்து வரும் கடலாடு காதையுள் ஊழ்வினை உறுதலால் மாதவி கோவலனைப் பிரிதலும், கண்ணகி அவனை அடைத

---

*இதனை ஆங்கிலப் புலவர் '*Fore shadowing Element*' அதாவது: முன்னுற மொழிதல் என்று கூறுவர்.

லும் நிகழவிருக்கின்றன. இதனை அடிகள் வெளிப்படையாகக் காட்டாமல் இலக்கிய நயமும் சுவையும் பொருந்த இரு மகளிரின் கண்களில் ஏற்படும் துடிப்பில் வைத்துச் சுட்டியிருப்பது நயம் பயப்பதாகும். இன்னும் உலகியலில் பெண்ணுக்கு இடது கண்ணும் இடது தோளும் துடிப்பதும், ஆணுக்கு வலக் கண்ணும் வலது தோளும் துடிப்பதும் நன்னிமித்தங்களாகக் கருதப்படுகின்றன. இனி வரும் காதைகளுள் கோவலனது வாழ்க்கையில் ஏற்படும் பல திருப்புமையங்களைப் (*Turning Points*) பார்ப்போம்.

இந்திர விழாவைக் காண மக்கள் திரள்திரளாக வந்தனர் என்பதை நாம் முன்பு கண்டோம். மண்ணுலக மக்களேயன்றி வானவர்களும், இவ்விழாவைக் கண்டு களிக்க வந்தனர் எனக் கூறுகிறார் அடிகள். மணிமேகலையிலும்

''நால்வேறு தேவரும் நலத்தகு சிறப்பில்...
பொன்னகர் வறிதாப் போதுவர் என்பது
தொன்னிலை உணர்ந்தோர் துணிபொருள்''

என இதுபோன்ற குறிப்புக் காணப்படுகிறது.

வித்தியாதர நகரில் வெள்ளிமலைச் சாரலில் தன் காதலியுடன் கடவுளை வழிபட்டுக் கொண்டிருந்த விஞ்சை வீரன் ஒருவன், காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திர விழாவைக் காண ஆவலுடன், இமயம், கங்கை, உஞ்சை நகரம் விந்தியம் முதலியவற்றை முறையாகக் கடந்து காவிரிப்பூம்பட்டினத்திற்கு வந்தான். வந்த அவ்வீரன், தன் காதலிக்குக் காவிரிப்பூம்பட்டினத்தில் உள்ள நாளங்காடி, ஐவகை மன்றங்கள், ஆடல் அரங்குகள், இந்திரன் கோயில் ஆகியவற்றைக் காட்டி மகிழ்ந்தான்.

கருங்கயல் நெடுங்கண் காதலி தன்னொடு
விருந்தாட் டயரும் ஓர் விஞ்சை வீரன்
தென்றிசை மருங்கினோர் செழும்பதி தன்னுள
இந்திர விழவுகண் டெடுக்குநாள் இதுவெனக்

கடுவிசை அவுணர் கணங்கொண்டு ஈண்டிக்
கொடுவரி ஊக்கத்துக் கோநகர் காத்த
தொடுகழல் மன்னர்க்குத் தொலைந்தன ராகி
நெஞ்சிருள் கூர நிகர்த்துமேல் விட்ட
வஞ்சம் பெயர்த்த மாபெரும் பூதம்
திருந்துவேல் அண்ணற்குத் தேவன் ஏவ
இருந்து பலியுண்ணும் இடனும் காண்குதும்
அமரா பதிகாத் தமரனிற் பெற்றுத்
தமரின் தந்து தகைசால் சிறப்பில்
பொய்வகை யின்றிப் பூமியிற் புணர்த்த
ஐவகை மன்றத்து அமைதியும் காண்குதும்

என அவன் கூறுவதாக இக்காட்சியைச் சித்திரிக்கும் இளங்கோவடிகள் தமிழ் மக்களிடம் பழங்கால முதலே இருந்து வரும் வீரம் கலைத் திறம் முதலியவற்றை விரிவாக எடுத்துக் கூறுகிறார்.

நாளங்காடி என்னும் இடம், காவிரிப்பூம்பட்டினத்து இருபகுதிகளாகிய பட்டினப்பாக்கம், மருவூர்ப்பாக்கம் ஆகியவற்றின் நடுவில் அமைந்திருந்தது. அங்கு இந்திரன் ஏவலால் வந்த பூதம் ஒன்று காவல் புரிந்து நின்றது.

ஒரு காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் ஒரு கடும்போர் நடந்தது. இந்திரன் அசுரர்களின் தாக்குதலைக் கண்டு அஞ்சி ஓடி ஒளிந்தான். பின்னர் அவன் சோழர் குல திலகனாகிய முசுகுந்தன் என்ற முடி மன்னனிடம் சென்று உதவி வேண்டினான். இந்திரனுடைய வேண்டுகோளுக்கு இணங்க, முசுகுந்தன் போர்க்களத் தலைவனாயிருந்து அசுரர் களைப் புறமுதுகு காட்டி ஓடச்செய்தான். தலைவிரிகோல மாய் தப்பி ஓடிய அசுரர் இருட்புகையை *(Tear gas)* முசு குந்தன் முன்பு விடுத்தனர். அவ்விருள் திரை முசுகுந்தனது கண்முன் தடையாக மாறவே அவன் யாது செய்வது என்று அறியாது திகைத்து நின்றான். அப்போது பூதம் ஒன்று வந்து அவ்விருளைப் போக்கியது. பின்னர் வாகை சூடித்

திரும்பிய அவ்வரசனுடன் அப்பூதத்தையும் இந்திரன் அனுப்பி வைத்தான். அந்தப் பூதம்தான் நாளங்காடியில் காவல் புரிந்து நின்றது. இப்பூதத்தின் வருகை வாயிலாக அடிகள் சோழர்களின் வீரப் பண்பாட்டை விளக்குவதைக் காணலாம். இங்கு ஒரு குறிப்பும் காணப்படுகிறது. கட லால் சூழப்பெற்ற உலகத்தில், சோழப் பெருவேந்தனுக் குப் பகைவரே இல்லாது போயினர் என்பதும், அவனது தோளும் வாளும் தினவெடுக்கவே தேவர் உலகத்தில் அதனைத் தீர்த்து மகிழ்ந்தான் என்பதும் தெளிவாகப் புலப்படுகின்றன. இத்தகைய பெரும் வீரத்தைப் பாராட்டி மகிழ விரும்பிய பழம் புலவர் ஒருவர் சோழ வேந்தன் எப் பொழுது படையோடு வந்து தாக்குவானோ என்று வடவர் யாவரும் வாடி, வழிமேல் விழி வைத்தவராய் உறங்காது காலம் கழிப்பாராயினர் என்ற கருத்துப்பட

''வலமுறை வருதலும் உண்டென்று அலமந்து
நெஞ்சுநடுங்கு அவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத்து அரசே''

என்று பாடியுள்ளனர்.

சோழ மன்னருள் முன்னோன் ஒருவன் இந்திரனுக்கு அவுணரால் நேர்ந்த பகையை ஒழித்து அந்நன்றிக்கு அடை யாளமாக, வெள்ளிடை மன்றம் முதலிய ஐவகை மன்றங் களையும் பெற்று வந்தனன். இவ்விரு வரலாறுகளையும் ஆசிரி யர் காப்பியத்துள் புகுத்தியது காப்பியக் கதைப்புணர்ப்புக் காக அன்று; இவ்வரலாறுகள் இல்லாவிட்டாலும் கதைப் போக்கு மாறாது. தமிழரின் இருகண்களாக விளங்கும் வீர மும் காதலும் ஆகிய இரண்டினுள் வீரத்தை எடுத்துக் காட் டவே இவ்வரலாறுகள் அடிகளால் புகுத்தப்பட்டது என்பது தெளிவு. வீரத்தைத் தொல்காப்பியர் ''பெருமிதம்'' எனப் பெருமையாகப் பேசுவர். இப்பெருமிதம் கல்வி, தறுகண் (ஆண்மையும் அஞ்சாமையும்) இசை, கொடை ஆகிய நான் கின் அடிப்படையில் பிறக்கும். இங்கு அடிகள் காட்டும்

பெருமிதப் பண்பு தறுகண்மையைப் பற்றுக் கோடாகக் கொண்டதாகும்.

தேவர்களை வென்ற அசுரர்களைச் சோழவேந்தர்கள் வென்ற திறத்தை நாம் காணும்போது இந்திரனும் அவன் மக்களான தேவர்களும் மனிதர்களே என்பது புலனாகிறது. இக்கருத்தைக் கொண்டே சூளாமணி ஆசிரியரும் "விஞ்சை யர் வித்தையாலே விழுமியர் என்பதல்லால், அஞ்சலில் தானை வேந்தே மனிதரே அவரும்" என்று கூறினார்.

இனி இப்பகுதியில் மற்றோர் அரசியல் பெருண்மை ஒன்றும் நமக்குத் தெரிகிறது. முசுகுந்தன் முதலிய சோழப் பேரரசர்கள் தத்தம் பெருவிறல் திறனால் இந்திரனிடத்தும் பிற தேவரிடத்தும் பெற்ற அரிய பரிசுப் பொருள்களான பூதம், வெள்ளிடைமன்றம் முதலான விலைமதிக்க முடியாத பெரும்பொருள்களைத் தம் அரண்மனையில் வைத்து அழகு பார்த்து மகிழாமல், தன்னல நோக்கத்தை விடுத்து அவற்றை நாட்டிற்கும் மக்களுக்கும் உரிய பொருள்களாக (*National wealth*) ஆக்கினர் என்பது தெளிவாகிறது.

## 9. கடலாட்டு

கம்பன் கண்ட கனவு உலகமாகிய இராமராச்சியத்தில், கொள்வாருமில்லாமல், கொடுப்பாருமில்லாமல், வேண்டிய யாவும் விரும்பிய வண்ணமே யாவரும் பெற்று வாழ்ந்தனர். அவ்வகை உலகம்தான் வித்தியாதரர்கள் வாழும் விஞ்சையர் உலகம். அது பனிமூடிய இமயப்பகுதியில் வெள்ளிமலை என்ற மலைமுடியைச் சேர்ந்த நாடாகும். அதன் தலைநகரம் சேடி என்ற பெயருடையது. உடலுழைப்பு இல்லாமலே எல்லாச் செல்வவளமும் பொருந்திய காரணத்தால் அவ்வுலகத்தில், வித்தியாதரர்கள் ஆடலிலும் பாடலிலும் அகமகிழ்ந்து வாழ்ந்து வந்தனர். நடன மாதர்களின் நடனம் மிக்க சிறப்புற்று விளங்கி வந்தது. நாட்டில் ஆங்காங்கு நிகழும் விழாக்களுக்குச் சென்று அப்போது நடைபெறும் இசை நிகழ்ச்சிகளைக் கேட்டும், கூத்துக்களைக் கண்டும் இன்புறுவது விஞ்சையர் வழக்கம். அம்முறையில் ஒரு விஞ்சையன் தன் காதலியுடன் காவிரிப்பூம்பட்டினத்திலே நடைபெறும் விழாநிகழ்ச்சி காண வந்தான்.

காவிரிப்பூம்பட்டினம் அடைந்த விஞ்சையன் அங்கிருந்த காட்சிப் பொருளாகிய சதுக்கப் பூதம், வெள்ளிடைமன்றம் முதலியவற்றைக் கண்டுகளித்து, இறுதியில் நகரின் உட்புறத்தே உயர்ந்து விளங்கிய நாட்டிய அரங்கினைக் கண்ணுற்றான். அஃது இந்திர விழாக்காலமாதலால், நகரமாந்தர் அங்கே பெருந் திரளாகக் கூடி இருந்தனர். கலையரசியாகிய மாதவியின் ஆடலும் பாடலும் சிறிது நேரத்தில் நடைபெறவிருந்தது. குறித்த காலத்தில் கோவலனோடு அரங்கினுக்கு

வந்தாள் மாதவி. மாதவி மானிட மகளேயாயினும், கலைத் திறனில் தேவமகளாகவே திகழ்ந்தாள். ஆசிரியர் இளங்கோ வடிகள், அவளை நமக்கு அறிமுகம் செய்யும்போது, வானவர் உலகத்து வனிதையாகிய உருப்பசியே, தமிழ் முனிவனாகிய அகத்தியனது சாபத்தால் பூமியில் மாதவியாகத் தோன்றினாள் என்று குறிப்பிடுகின்றார். இது,

'ஆயிரம் கண்ணோன் செவியகம் நிறைய
நாடகம் உருப்பசி நல்காள் ஆகி
மங்கலம் இழப்ப வீணை மண் மிசைத்
தங்குக இவள்'

என்பதனால் உணரத்தகும்.

இத்தகைய கலைவாணியாகிய மாதவி அரங்கேறி நின்று பதினொருவகைக் கூத்துக்களையும் பாங்குற ஆடிக்கொண்டிருந்தாள். அவற்றுள் முதலாவது மாயோனாகிய திருமாலைப் பற்றியது. இது மாயோன் பாணி எனப்படும் தேவபாணி. பாணி என்பது பாட்டு; பண்ணும் திறமுமாகிய இசைவகையுள் பண்முறையையே கொண்ட பாட்டுப் பாணி எனப்பட்டது. மாயோனைப் பரவியபின் நால்வகைப் பூதர்களையும் வணங்கும் (பூதப்பாணிப்) பாட்டுடைக் கூத்தினை ஆடினள். பின்னர் முறையாகச் சந்திரனை (திங்கள் பாணி பாடி) வாழ்த்தினள். இம்மூவகைக் கூத்துக்களும் தேவபாணி எனப்படும். அதாவது தான் எடுத்துக் கொண்ட முயற்சி இனிது நிறைவேறும் பொருட்டுத் தெய்வங்களை வாழ்த்திப் பண்ணும் தாளமும் பொருந்தப் பாடியாடும் கூத்து முறையாகும். இங்ஙனம் தேவபாணி முடிந்ததும், கொடுகொட்டி, பாண்டுரங்கம், அல்லியம், மல்லாடல், துடி, குடை, குடக்கூத்து, மரக்கால் ஆடல், பாவைக்கூத்து, கடையம் என்ற பதினொரு வகைக் கூத்துக்களும் நிகழத் தொடங்கின.

அவற்றுள், கொடிகொட்டி ஆடுங்கால் உமையொரு பாகனாகிய சிவன் திரிபுரம் எரித்த நிகழ்ச்சியை அவையோர்

காண அவிநயம் செய்து காட்டும் ஆடலாகும். இவ்வாறே பாண்டுரங்கம் முதலிய பத்தும்,

"தேர்முன் நின்ற திசைமுகன் காணப்
பாரதி ஆடிய வியன் பாண்டுரங்கமும்,
கஞ்சன் வஞ்சம் கடத்தற் காக
அஞ்சன வண்ணன் ஆடிய ஆடலுள்
அல்லியத் தொகுதியும் அவுணர் கடந்த
மல்லின் ஆடலும், மாக்கடல் நடுவண்
நீர்த்திரை அரங்கத்து நிகர்த்து முன்நின்ற
சூர்த்திறம் கடந்தோன் ஆடிய துடியும்,
படைவீழ்த்து அவுணர் பையுள் எய்தக்
குடைவீழ்த்து அவர்முன் ஆடிய குடையும்,
வாணன் பேரூர் மறுகிடை நடந்து
நீணிலம் அளந்தோன் ஆடிய குடமும்,
ஆண்மை திரிந்த பெண்மைக் கோலத்துக்
காமன் ஆடிய பேடியாடலும்,
காய்சின அவுணர் கடுந்தொழில் பொறாஅள்
மாயவள் ஆடிய மரக்கால் ஆடலும்,
செருவெங் கோலம் அவுணர் நீங்கத்
திருவின் செய்யோள் ஆடிய பாவையும்,
வயலுழை நின்று வடக்கு வாயிலுள்
அயிராணி மடந்தை ஆடிய கடையமும்"

என்று இளங்கோ விளக்கிக் கூறுகின்றார். இவற்றை ஆடிய போது, சிவன், கண்ணன், முருகன், காமன் ஆகியோருடைய வேடமும், கலைமகள், திருமகள், கொற்றவை, அயிராணி ஆகியோர் வேடமும் பூண்டு, அவ்வக் கூத்துக்குரிய நிகழ்ச்சியைக் காட்டும் ஓவியம் எழுதிய திரைகள் அரங்கில் நின்று விளங்க மாதவி ஆடிய அவிநயக்கூத்தை விஞ்சையன் கூறுவதாக வைத்து.

"அவரவர் அணியுடன் அவரவர் கொள்கையின்
நிலையும் படிதமும் நீங்கா மரபின்

பதினோ ராடலும் பாட்டின் பகுதியும்
விதிமாண் கொள்கையின் விளங்கக் காணாய்''

என்று அடிகள் குறிக்கின்றார்.

இளங்கோவடிகள் இவ்வளவு விரிவாகக் கூத்துவகை களைக் கூறுவதிலிருந்து, அந்நாளில் தமிழ் மக்கள் தெய்வங் களின் வரலாறுகளை நாடகமாக நடத்தி இன்புற்றனர் என் பதும், எனவே, இயலோடு இசையும் கூத்தும் யாவும் தெய்வ பக்தி உண்டு பண்ணும் இயல்பிலே அமைந்திருந்தன என் பதும் ஆகிய உண்மைகள் புலப்படுகின்றன. இக்கூத்துக்கள் சிறப்புற்று விளங்கிய காலம்—இளங்கோ வாழ்ந்த இன்பக் காலம்—பத்திநெறி (*Bakthi Cult*) அரும்பி மலர நின்ற கால மாதலையும் நாம் நன்கு காண்கின்றோம். இக்காலத்துப் பரத நாட்டியமும், இம்முறையைத் தழுவியே அமைய வேண்டியது என்பது இங்கே நாம் மனம்கொள்ள வேண்டிய தொன்று.

இக்கூத்துக்களை மாதவி மெய்ப்பாடு விளங்கக் கோலங் கொண்டு ஆடிய திறம் பார்வையாளரை இன்பத்தில் ஆழ்த் தியது; ஆனால் கோவலன் உள்ளத்தில் மட்டும் மாதவியின் மீது அஃது ஊடலைத் தோற்றுவித்தது. இவன் கொண்ட ஊடலாகிய வெறுப்புணர்ச்சி, நாளடைவில் வளர்ந்து முற்றி மாதவியை மறுத்து ஒழிக்கும் அளவிற்குப் போய் விடுகிறது. இது அவனுடைய வாழ்க்கையின் முதல் திருப்பு மையமாக அமைந்து விடுகிறது. அவன் மீண்டும் கண்ண கியை அடைவதும், அப்பால் மதுரைக்குச் சென்று மாய் வதும், கண்ணகி தெய்வமாவதும் ஆகிய நிகழ்ச்சிகள் தோன்றுவதற்கு, அவன் மாதவிமீது கொண்ட இவ் வெறுப்பே வித்தாகிறது. சுருங்கக் கூறின், சிலப்பதிகாரக் காப்பியப் போக்கும் புணர்ப்பும் இவ்வெறுப்பை நிலைக்கள மாகக் கொண்டே அமைந்துள்ளன என்று சொல்லிவிட லாம். எனவே அதிலுள்ள கடலாடு காதை ஏனைய காதை களின் கருவாக விளங்குகிறது எனலாம். உலகப் புகழ் படைத்த ஆங்கிலப் புலவரான செகப்பிரியர் (*Shakespeare*)

தாம் செய்த ஒவ்வொரு நாடகத்திற்கும் அந்நாடகத்தின் முதற்களத்தில் வரும் முதல் அங்கத்திலேயே நாடகத்தின் நோக்கத்தையும் போக்கையும் பொதிந்து வைத்துச் செல்வது போன்று இளங்கோவடிகள் இக்கூடலாடு காதையை அமைத்துளார் எனின் அது மிகையாகாது.

மனிதர்களுடைய உள்ளம் மிகவும் ஆழமானது. அது மாறும் தன்மையதும்கூட. எவ்வாறு ஒரு கையிலிருக்கும் ஐந்து விரல்களும் ஒரே மாதிரி இல்லையோ அவ்வாறே மனமும், ஒரே சமயத்தில்கூட ஒரே நிலையில் நிற்பதில்லை. இந்த உண்மையை நாம் உலகிலேயே காண்கிறோம். இதைத் தான் நாம் கோவலனிடமும் காண்கிறோம்.

இந்திர விழாவின்போது, மாதவி அரங்கேறி ஆடிய திறத்தைக் கண்டுகொண்டிருந்த கோவலன் மனத்தில் ஊடல் தோன்றியதைக் கண்டோம். சிலப்பதிகாரத்தில்இந் நிகழ்ச்சி ஆராய்ச்சியாளர்களைச் சிந்திக்க வைக்கிறது. அரங்கேற்றம் செய்த அந்நாளில், மாதவியின் அரிய ஆடலையும் பாடலையும் அழகையும் கண்டு களித்த கோவலன்தான் இன்று ஊடுகிறான். அன்று, ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பொன்னைக் கொடுத்து, அவளது ஆடல் பாடல்களைப் பாராட்டி மகிழ்ந்த அவன், அரசன் அன்பளிப்பாகத் தந்த மாலையை வாங்கி மாதவியைப் பெற்றான். ஆனால், அவனுக்கு இன்றோ அவளுடைய ஆடலில் ஆர்வம் செல்லவில்லை; பாடலில், பண்ணின்பம் பிறக்கவில்லை. ‘‘நாதம் நாதம், நாதத்தில் ஓர் நலிவு உண்டாயின், சோகம்சோகம்’’ என்றார் பாரதியார். கோவலனின் இதயமாகிய வீணையிலே, நாதமாகக் காட்சி தந்த மாதவி, இப்போது அவனுக்கு வெறுப்புணர்ச்சியையே :தருகின்றாள். இதற்குக் காரணம் என்ன? இக்கேள்விக்கு ஆசிரியர் இளங்கோவடிகள் காப்பியத்துள் எந்த இடத்திலும் விடைகூறி விளக்கவில்லை. இக் கேள்வி நம் சிந்தனையைத் தூண்டி மனநூல் ஆராய்ச்சியில் செலுத்தி விடுகிறது.

முதன் முதலில் கோவலன் தன் மனைவியைப் பிரிந்து மாதவியை அடையக் காரணம் என்ன என்பதும் புதி ராகவே உள்ளது. அவன் மனைவி கண்ணகியைத் திருமா மகள் என்று அடிகள் கூறுகிறார். அழகு, குணம், பண்பாடு அனைத்துமே ஒன்று சேர்ந்த, ஒரு திருஉருவமாக அமைந்த தனால் அவளை ஆசிரியர் ''மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக் காதலாள்'' 'என்று புகழ்ந்து கூறினார். கோவலனும், மணமானவுடன், அவளது பல்வேறு எழில் களையும், நலன்களையும் புனைந்துரைக்கின்றான். இதனால் கண்ணகி, கோவலனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கட்டழகி என்பதில் ஐயமில்லை.

இனி அவனுடைய பிரிவுக்குக் கண்ணகியிடம் இசைக் கலை இல்லை என்பதும், மாதவியிடம் அது அமைந்திருந்த தென்பதுமே காரணம் என்றும், எனவேதான் இசைச் செல்வனான கோவலன் மாதவியை மருவினான் என்றும் சிலர் கூறுவர். இதனை ஆராயும்போது இதுவும் பொருந்துவ தாகத் தெரியவில்லை. இசை நாடகங்களின் நல்லிலக்க ணங்கள் யாவும் சிறப்பாக விளங்கினமையைத் தெளிய அறிந்துதான் கோவலன் மாதவியை அடைந்தான் என்றால், மாதவி ஆடிய நாட்டியத்தைக் கண்டும் கடற்கரையிலே அவள் பாடிய பாட்டைக் கேட்டும் அவன் மனம் மாற வேண்டியதில்லை. ஏனெனில் நடனமாது நுண்கலைப்புலமை நன்கு தோன்றுமாறு பல்வேறு குறிப்புக்களைக் காட்டி ஆடுவதும், அகப்பொருட் பாடலைப் பாடும்போது அதன் வெளிப்படையும் குறிப்புமாகிய பொருள்கள் விளங்கப் பாடுவதும் இயல்பேயாகும். இவற்றையெல்லாம் கோவ லன் அறியாதவன் அல்லன். ஆகவே, கோவலன் மாதவி யின் கலைப்புலமை ஒன்றையே குறிக்கொண்டு அவளை விரும்பி ஒழுகினான் என்பது தக்க காரணமாகாதொழி கிறது.

இனிக் கோவலன் கொண்டிருந்த கழிகாமமே கண்ணகி யைப் பிரிந்து வேறு மகளிர்பால் செல்லத் தூண்டியதென்

பதற்கும் காப்பியத்தில் சான்று இல்லை. கோவலன் நல்லவன், தூய்மையானவன் என்பதை ஆசிரியர் கோவலன் வாயிலாகவே கூறுவிக்கிறார். ''இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன் சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையும் செய்தேன்'' என்று பின்னர்க் கோவலன் தன் குற்றத்தை உணர்ந்து கூறுகிறான். தான் செய்தது தவறு என்று உணருகின்ற ஒருவன் நேர்மையானவன் என்பதே பொருத்தம். இனி மாதவியின் வஞ்சமேகோவலனை கண்ணகியிடமிருந்து பிரித்துவிட்டது என்பதும் ஏற்கத்தக்கதன்று. மாதவி கோவலனிடம் எத்துணை உள்ளன்பு கொண்டிருந்தாள் என்பதும், அவள் அவனை அடைந்து விட்டோம் என்று எவ்வாறு பெருமை கொண்டிருந்தாள் என்பதும், அவள் கோவலனுக்கு எழுதிய கடிதத்திலிருந்து தெரியவரும். எனவே கண்ணகி, கோவலன், மாதவி ஆகிய மூவரும் தத்தம் நிலையில் இயல்பாகத் தவறுடையவர்கள் அல்லர் என்பது நன்கு விளங்கும். அவ்வாறிருந்தும், கோவலன் கண்ணகியைப் பிரிந்து மாதவியை அடைந்ததற்கும், சிலவாண்டுகளில் மாதவியிடம் மாறுபட்டுக் கண்ணகியை மீண்டும் அடைந்ததற்கும் எத்தகைய காரணத்தையும் சுட்டிக் காட்ட முடியவில்லை. இந்நிகழ்ச்சிகள் அம்மூவர்களின் ஆற்றல்களையும் கடந்து நடைபெற்றிருக்கின்றன. இதனையே ஆன்றோர்கள் ஊழ்வினை என்று கூறி அமைதி அடைந்தனர். 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினும் தான்முந் துறும்' என்று தெய்வத் திருவள்ளுவர் அருளினார். அடிகளும காப்பியத்தின் நோக்கமாக ''ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதும், சூழ்வினைச் சிலம்பு காரணமாக...நாட்டுதும் ஓர் பாட்டுடைச் செய்யுள்'' என்றே கூறியுள்ளார் என்பதும் இக்காப்பியத்தின் பதிகத்தால் விளங்குகின்றது.

ஊழ்வலியால் தன்பால் வெறுப்புற்று நோக்கிய கோவலனைத் தேற்றி மகிழ்ச்சியூட்ட நினைத்தாள் மாதவி. அதற்காக அவள் என்றும் இல்லாத ஆரவாரத்துடன் தன் உச்சி

முதல் உள்ளங்கால்வரை அழகுபடுத்தி அவனேடு சேர்ந்து கடலாடச் சென்ருள். இந்தவிடத்தில் ஆசிரியர் இக்காலத்தில் கூடக் கிடைக்குமோ என்று ஐயுறும்படியான அழகுப் பொருள்களை வரிசையாகக் கூறுகிருர். மாதவி தன் கூந்தலை ஒப்பனை செய்யும் வகையைப் பாருங்கள்:

''பத்துத் துவரினும் ஐந்து விரையினும்
முப்பத் திருவகை ஓமா லிகையினும்
ஊறின நன்னீர் உரைத்தநெய் வாசம்
நாறிருங் கூந்தல் நலம்பெற ஆட்டி''

என்று ஆசிரியர் அறிவித்துள்ளார்.

மாதவியின் ஒப்பணை, அலங்காரம், ஆடை அணிகள் முதலானவற்றை நாம் நோக்கும்போது, அக்காலத்துச் செல்வர் மனையில் இருந்த வளமும் இன்பப் பொருள்களும் எத்தகைய என்பது தெரியும். இவ்வாறு மாதவி, தன்னை அலங்கரித்துக்கொண்டு கோவலனுடன் கடலாட்டு விழாவில் கடற்கரைச் சோலையில், வெண்மணற் பரப்பில் புன்னை மர நிழலில் இடப்பட்டிருந்த மஞ்சத்தில் அமர்ந்து தோழியின் கையிலிருந்த வீணையை வாங்கிக் கோவலனுடன் முறைப்படி இருந்தனள். இதனை,

''விதானித்துப் படுத்த வெண்கால் அமளிமிசை
வருந்துபு நின்ற வசந்த மாலிகைத்
திருந்துகோல் நல்லியாழ் செவ்வனம் வாங்கிக்
கோவலன் தன்னேடும் கொள்கையின் இருந்தனள்
மாமலர் நெடுங்கண் மாதவி தானென்''

என்று ஆசிரியர் அழகுற அமைத்துள்ளார்.

# 10. கானல்வரி

மாதவியும் கோவலனும் இந்திரவிழா முடிந்தவுடன் கடலாடச் சென்றனரன்ஞே? அங்கே நகர மக்கள் பகற் போதில் கடலாடி இன்புற்றனர். மாலை நெருங்கவும், கோவலனும் மாதவியும் வெண்மணல் பரந்த கடற்கரைச் சோலையில், புன்னைமர நிழலில் மஞ்சத்தில் அமர்ந்தனர். மன்றல் மணக்கும் தென்றல் காற்று மெல்லென வீசியது. ஆனால் கோவலன் மனதிலே இன்னதெனத் தெரியாத துனி (வெறுப்புணர்ச்சி) அவனை அறியாமலே உட்புகுந்துவிட்டது. அவன் மனதிலே ஏற்பட்ட புயலை, மாதவியும் அறிந்தாளில்லை. பக்கத்தில் நின்று கொண்டிருந்த தன் தோழியாகிய வயந்தமாலையின் கையிலே இருந்த யாழை மாதவி வாங்கினுள். மணப்பெண் போல மலர் சூட்டப் பெற்று அழகுடன் விளங்கிய யாழில் பண்ணல் முதலிய எட்டு வகையாலும் இசையெழுப்பித் தன் மெல்லிய விரல்களால், யாழின் நரம்புகளைச் சோதித்தறிந்து அதனைக் கோவலன் கையில் கொடுத்தாள். யாழை வாங்கிய கோவலன் மாதவியின் மனம் மகிழுமாறு காவிரியைப் பற்றியும், கடற் கானலைப் பற்றியும் வரிப்பாட்டுகள் பாடத் தொடங்கினன்.

அழிவில்லாத இன்பத்தை அடைய வேண்டுமென்பதே எல்லாப் பிறவிகளுடைய நோக்கமுமாகும். ஆனல் இது உலகியல்களில் காணுத ஒன்று. ஒரு ஆங்கிலக் கவிஞன் "முழுமையும், குற்றமற்றதுமான ஒன்றைக் காண எண்ணுதே; அப்படி ஒன்று வருமாயினும் அது தேய்ந்து அழிந்து போகும்"*

*When a thing attains perfection, it must decay.

என்ருன். என்றுமுள்ளவனுகிய பரமன் வைகுந்தத்திலிருந்து மண்ணுலகுக்கு வந்தபோது தன்னுடைய முழுமையும் காட்டவில்லை. இந்த உண்மையை அறிந்துதான், உலக இன்பங்களைச் சிற்றின்பமென்றும், கடவுளிடத்தில் பெறும் இன்பத்தைப் பேரின்பம் என்றும் பண்டையோர் கூறினுர்கள்.

பிறரடைந்த இன்பத்தைத் தான் அடைய வேண்டும் என்ற ஆவல் மக்களுக்கு எழும். ஆனுல், பயனடைந்தவர்கள் கண்ட வழியைப் பின்பற்ற ஊக்கம் இருக்காது. கோவலன் இடையீடற்ற இன்பத்தை அனுபவிக்க எண்ணினுன்.

குடும்பத் தலைவியாகிய மனைவி மாண்புமிக்கவள். அவள், கேவலம், சிற்றின்பம் ஒன்றிற்காகவே வாழ்பவளல்லள். அவளுடைய கற்பின் திறமும், பொறுமையின் எல்லையும், பிறர் நலம் பேணலும், தளரா மன உறுதியும் அவளை மனித நிலையிலிருந்து தெய்வநிலைக்கு உயர்த்தி விடுகின்றன. இலக்குமியைப்போல விளங்குகிற தன் மனைவி கண்ணகியிடத்திலே காணுத பேரின்பத்தை மாதவியிடம் காணலாம் என்று கோவலன் சென்ருன். அந்த இடையீடற்ற இன்பத்தை அங்கும் அவன் கண்டானில்லை. கோவலன் மன நிலையிலே ஒரு கலக்கம். அந்தக் கலக்கம் மனமாற்றத்திற்கு ஒரு வழியாக அமைந்துவிடுகிறது.

இந்த நிலையிலே, கோவலன் யாழை இசைக்கத் தொடங்குகிருன். இங்குக் கோவலன் பாடியிருக்கும் ஆற்று வரிப்பாடல்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்வனவாகும். பதினுறு கலைகளும் நிரம்பப் பெற்ற முழுமதியை ஒத்த குடையையும், ஆத்திமாலையையும் உடைய சோழ மன்னன் தன் வழுவாத செங்கோலைச் செலுத்திக் கங்கை நாடு சேர்ந்தாலும் காவிரி நாடு அவன்மேல் வெறுப்புக் கொள்வதில்லை. இக் கருத்தை உள்ளுறுத்து, காவிரியை ஒரு கற்புடைய பெண்ணுக்கி, வேந்தனுன சோழனை அவட்குக் கணவனுக்கி, அவளுடைய புலவி நீங்குமாறு கூறும் கூற்றில் வைத்து, கோவலன் பாடிய அகப்பொருள் பாடல் பின் வருவதாம்:

"திங்கள் மாலே வெண்குடையான்
சென்னி செங்கோல் அதுவோச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரி
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவா தொழிதல், கயற்கண்ணாய்!
மங்கை மாதர் பெருங்கற்பென்று
அறிந்தேன் வாழி காவேரி"

என்பது பாட்டு

தலைவன் ஒருவன், தலைவி தன்னுடன் இருப்பவும், அவளை விடுத்து வேறு ஒருத்திமேல் தன் மனத்தைச் செல்லவிட்டான். அவனது புறவொழுக்கத்தைப் பொருட்படுத்தாது, கற்புக் கடன்காத்துத் தன் கணவன் பெருமையையே கருதியொழுகினாள் அப்பெண். பிறன் ஒருவனை மனத்தினாலும் நினைக்காது வாழ்ந்துவந்த பெண்ணருங் கலத்திற்கு ஒப்பிட்டான் காவிரியை. இரு பொருள் படும்படி பாடிய பாட்டால், மாதவி, கோவலன் தன் மனைவியாகிய கண்ணகியை நினைந்து பாராட்டுகின்றான் என்று நினையாது ஒரு பெண் மேல் அவன் காதல் தொடர்பு கொண்டான் என்று எண்ணத் தொடங்கினாள். தன்னையல்லாது பிறபெண்ணை காதலிப்பதைக் கண்டு எந்தப் பெண்ணின் உள்ளம் தான் பொறுத்திருக்கும்? இந்த எண்ண மேலிட்டால் கேட்டிருந்த மாதவியின் காது, திரும்பவும், காவிரியின் புகழ்ப் பாட்டைக் கேட்கிறது. வெண்கொற்றக் குடையையுடைய சோழப் பெருமன்னன் தன் ஆணையைத் தென்பால் செலுத்திக் குமரி நாட்டை வென்றாலும், காவிரியே, நீ சிறிதும் வெறுப்படைய மாட்டாய். ஏனெனில் கயல்களாகிய கண்களையுடைய காவிரி, நீ பெரும் கற்பினையுடைய; நீ வாழி என்ற இப்பொருள் அமைந்த பாடலைக் கவனியுங்கள்:

மன்னுமாலை வெண்குடையான்
வளையாச் செங்கோல் அதுஓச்சிக்

கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி, காவேரி!
கன்னிதன்னைப் புணர்ந்தாலும்
புலவாதொழிதல், கயற்கண்ணாய்!
மன்னு மாதர் பெருங் கற்பென்று
அறிந்தேன வாழி காவேரி

கரிகாற் பெருவளத்தான் தன் ஆட்சி காலத்தில் தன் தலை நகரமாகிய காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்தும் நீங்கி வடக்கே படையெடுத்துச் சென்று கங்கையைக் கடந்து வட நாட்டைத் தன் ஆணைக்கு உட்படுத்தினான். இமயமலைக்குப் போய்த் தன் புலிக்கொடியைப் பொறித்தான். இந்த வெற்றித் திறனைக் குறிக்கவே ''செங்கோல் அதுவோச்சிக் கங்கை தன்னைப் புணர்ந்தாலும்'' என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். கங்கை ஆறு சோழ மன்னர்க்கு உட்பட்டது போல, காவிரி ஆறு வேறு நாட்டு மன்னர்க்கு ஒருகாலும் அடிமைப் படாது என்பதைக் குறிப்பிடவே ''கங்கைதன்னைப் புணர்ந் தாலும் புலவாய் வாழி காவேரி'' என்று இப்பாட்டின்கண் ஆசிரியர் பாடுகின்றார். இளங்கோவடிகள் காலத்திற்கு முன்னர், தமிழ் நாட்டு மன்னர்கள் வடநாடு சென்ற கதையை வரலாற்று ஏடுகளில் படிக்கிறோமேயன்றி, வடவர்கள் தென்னாட்டை வெற்றி கொண்டதை யாண்டும் கண்டிலோம். இவைகள் கோவலன் பாடிய இப்பாட்டில் அமைந்து தோன்றும் திரண்ட பொருளாகும்.

இவ்வாறு கடல்கானற் சோலையில் மாதவியுடன் கடலாடச் சென்ற கோவலன் அவள் கையிலிருந்த யாழினை வாங்கிக் காவிரியாற்றின் சிறப்பையும் சோழ மன்னன் பெருமையையும் வரிப்பாட்டில் வைத்து யாழிலிட்டு இசைத்தான். அதனைக் கேட்ட மாதவி அவன் பாடிய பாடல்களில் குறிப்பு வேறு இருப்பதாகக் கருதித் தானும் ஒரு குறிப்பை யாழிலிட்டு இசைத்தனள்.

கருங்குவளை போன்ற அஞ்சனம் தீட்டப்பட்ட கண்களை உடைய ஒரு நங்கையின் முன்னர் ஆடவன் ஒருவன் தோன்

றினன். அவர்கள் ஒருவரை ஒருவர் சந்தித்த இடம் கடற் கரைச் சோலை. அவள்பால் காதலன்பு கொண்ட அவன் அவளை மணந்து கொள்வதாகக் கூறினன். அவனது கூற் றினை ஏலாது அவள் உள்ளம் அலைந்தது. அதனைக் குறிப்பால் உணர்ந்து கொண்ட அவன் அவளுக்குக் கடல்தெய்வமாகிய வருணனைக் காட்டி ஆணையிட்டுத் தனது மாருத அன்பை வலியுறுத்திச் சென்ருன்.

ஆனல், அவள் நினைத்தபடி விரைவில் மணம் நிகழ வில்லை; காலம் நீடித்தது. அதனல் அவட்கு ஆற்ருமை மிகுந்தது. அவளது ஆற்ருமையுணர்வு ஒரு பாட்டாக வடி வெடுத்தது. "ஐயனே, அன்று வருணனைக் காட்டி வரைந்து கொள்வதாக நீவிர் சொன்ன சொல் பொய்த்ததோ? அறி விலிகளாகிய நாங்கள் உமது உள்ளத்தை எவ்வாறு அறிய முடியும்? கடற்கரை மணலில் கிடக்கும் வளைந்த சங்கினை யும் வெண்முத்தையும் கண்ட ஆம்பல் அவற்றை முறையே சந்திரனுகவும் விண்மீன்களாகவும் கருதி மலரும்தன்மையை யுடைய காவிரிப்பூம்பட்டினமன்ருே நாங்கள் வாழும் ஊர்" என்ற கருத்துத் தோன்றப் பாடினுள். இக்கருத்தமைந்த பாடல்

"கரிய மலர் நெடுங்கண் காரிகைமுன்
கடல் தெய்வம் காட்டிக் காட்டி
அரிய சூள் பொய்த்தார் அறனிலர் என்(று)
ஏழையம் யாங்கு அறிகோம் ஐய
விரிகதிர் வெண்மதியும் மீன்கணமும்
ஆம் என்றே விளங்கும் வெள்ளைப்
புரிவளையும் முத்தும் கண்டு ஆம்பல்
பொதியவிழக்கும் புகாரே எம்மூர்"

எனவரும்.

இப்பாடலைப் படித்தால் வெண்ணிறமுடைய சங்கும் அதனைச் சுற்றிலும் சிதறி வெள்ளை வெளேரென மிளிரும் முத்துக்களும் தூரத்திலிருந்து பார்க்கும்பொழுது வட்ட

மாகத் தோன்றும் சந்திரனையும் அச்சந்திரனைச் சூழ்ந்து ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் நட்சத்திரங்களையும் ஒத்து விளங்குகின்றன என்ற பொருள் விளங்குகிறது. ஆம்பல் மலர் சந்திரனைக் கண்டால் மலரும் தன்மை உடையது. இங்கே சங்கும், முத்தும் ஆகியவற்றைச் சந்திரனாக ஆம்பல் கருதியது மயக்கம். அதுபோல அந்நங்கை தன்னை மணந்து கொள்வதாகச் சொன்ன அந்த ஆடவன் சொன்ன சொல் பொய்யாதவன் என்று நம்பி மகிழ்ச்சி அடைந்தாள். அதாவது தலைவியினுடைய உள்ளம் கள்ளமற்ற வெளுத்ததெல்லாம் பால் என்று நினைக்கும் தன்மையுடையதாம் என்பது. இப்பாடலில் ஆசிரியர் இளங்கோவடிகள் சங்கச் சான்றோர் மரபுக்கு ஏற்ப உலகியல் பொருள்களையே தன் அகப்பொருள் பாடல்களில் உவமையாக எடுத்துக்காட்டியிருக்கும் திறம் மிகவும் பாராட்டத் தக்கது. மேலும் ஆம்பல், நெய்தல், நீலமலர் ஆகியவற்றுக் கேற்பக் கடல் சார்ந்த இடமாகிய கானலில் காணப்படும் சங்கையும் முத்தையும் சந்திரனாகவும் நட்சத்திரமாகவும் உவமித்துள்ளார். இத்தகைய பாடல்களைப் படிக்கும்பொழுது நமக்கு அகப்பொருள் நூலைப் படித்து இன்புறுவது போன்ற உணர்ச்சியுண்டாகிறதேயன்றி வரலாற்றுக் காப்பியத்தைப் படிப்பது போன்ற உணர்ச்சி உண்டாவதில்லை. இவ்வாறு இசையின்பத்தைப் புகுத்திக் கற்போர் மனத்தைக் கொள்ளை கொள்ளும் சீரிய செந்தமிழ்க் காப்பியத்தை உருவாக்கிக் கொடுத்த இளங்கோவடிகளுக்கு ஒப்பான புலவரைக் காண்பது அரிது என்றால் அது மிகையாகாது. மற்றொரு இசைப் பாட்டு.

“காதல ராகிக் கழிக்கானல் கையுறை கொண்டு
எம்பின் வந்தார்
ஏதிலர் தாமாகி யாமிரப்ப நிற்பதை யாங்கு
அறிகோம் ஐய
மாதரார் கண்ணும் மதி நிழல்நீர் இணைகொண்டு
மலர்ந்த நீலப்

போதும் அறியாது வண்டு ஊசலாடும்
புகாரே எம்மூர்''

எனவரும்.

''கடற்கரைச் சோலையில் அன்றொரு நாள் இனிய பொருள்களைக் கையுறையாக ஏந்திக்கொண்டு எங்கள் பின்னே வந்தார் தலைவர். அப்பொழுது அவர் தோற்றம் எங்களை இறைஞ்சி நிற்பதுபோல் இருந்தது. ஆனால் இன்றோ நாங்கள் அவரை இறைஞ்சி நிற்கும் நிலையை அடைந்து விட்டோம் ஐயனே! ஏழைகளாகிய எங்கள் நிலை இப்படி மாறும் என்று நாங்கள் எப்படி அறிவோம்? பெண் களின் மலர்ந்த முகத்தை அழகுபடுத்தும் கண்களையும் நீரிலே மலர்ந்த நீலமலரையும் ஒன்றாகக் கருதி வண்டுகள் மயங்கி ஊசலாடும் தன்மையுடையது எங்கள் காவிரிப்பூம் பட்டினம் என்ற ஊர்'' என்பது இப்பாட்டின் பொருள். தேனை உண்டு களிக்கப் புறப்பட்டு வந்த வண்டு நீலமலருக் கும் கண்ணுக்கும் வேறுபாடு காணாமல் மயங்கும் என்றது, எங்கள் உள்ளம் உன்னுடைய சொல்லும் செயலும் வேறு அறியாமல் மயங்கிவிட்டது என்ற குறிப்பைக் காட்டுகிறது. இவ்விரண்டு பாடல்களின் பொருளையும் ஆராயும்போது மாதவி பிறிதொரு கருத்தை மனத்தில் நினைத்துப் பாடு வதுபோல் தோன்றுகிறது அல்லவா? அவள் அதனைக் கரு தாமல் போனாலும் அவளுடைய பாட்டுக் கேட்பவரை அப்படித்தானே நினைக்கச் செய்கிறது!

கோவலனுக்கும் மாதவிக்கும் இடையே இசைப்பாட்டு வழியாகத் தோன்றிய மனவேறுபாடு சிறிது சிறிதாக வளர்ந்து இறுதியில் அவ்விருவருக்கும் பிரிந்து செல்லும் நிலைக்கு முற்றுகின்ற திறத்தை ஆசிரியர் இளங்கோவடிகள் மிகவும் திறம்படச் சித்திரித்துள்ளார். கோவலன், மாதவி ஆகிய இருவரையும் அவர் மாறி மாறி யாழிசைக்கச் செய் யும் திறன் வியப்புக்குரியதாகும். இரண்டாம் தடவையாகக் கோவலன் அவ்யாழைக் கையில் வாங்கிக் கானல் வரிப்

பாடலைப் பாடுகிறான். அப்பாடல்கள் இன்பச்சுவை பயப் பவையாகும். "நவில்தொறும் நூல் நயம் தரும்" என்று திருவள்ளுவர் கூறும் உண்மைக்கு ஓர் அரிய இலக்கியப் பகுதியாக அமைந்துள்ளது இக் கானல்வரி.

கடற்கரைச் சோலை; வெண்மணல் பரப்பு; ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்து மேலெழுந்து வரும் அலைகள் சூல் கொண்ட வலம்புரிச் சங்குகளை மணற்பரப்பில் ஒதுக்கு கின்றன. அச்சங்குகளின் இயக்கம் மணலை உழுவதுபோல உளது. அதனால் மணலில் சுவடுகள் ஏற்படுகின்றன; அங்கு ஓங்கி வளர்ந்திருக்கும் புன்னை மரக்கிளைகளிலிருந்து பூக்கள் உதிர்ந்து மணலில் ஏற்பட்ட சுவடுகளை மறைக்கின்றன. அங்கே முழு நிலவு போன்ற முகம்; துள்ளிக் குதிக்கும் கயல் மீன்போன்ற கண்கள்; அவை தரும் நோய் எவ்வித மருந் தாலும் போக்கமுடியாதது என்று வியப்பும் நயப்பும் தோன்ற உரைத்து நிற்கின்றான் ஒரு கட்டிளங்காளை; அவன்,

துறைமேய் வலம்புரி தோய்ந்து
மணல்உழுத தோற்றம் மாய்வான்
பொறைமலி பூம்புன்னைப் பூவுதிர்ந்து
நுண்தாது போர்க்கும் கானல்
நிறைமதி வாண்முகத்து நேர்கயற்கண் செய்த
உறைமலி உய்யாநோய் ஊர்சுணங்கு
மென்முலையே தீர்க்கும் போலும்

என்று பாடுகின்றான்.

இவ்வாறு கானல்வரி பாடிய கோவலன், ஒரு பாட்டில் நங்கை ஒருத்தியின் உறுப்பு நலன்களை வியந்து பாடுகிறான். ஓவியம் வரைதலில் வல்லவன் ஒருவன், ஒருத்தியின் கண், புருவம், கூந்தல் முதலியவற்றை வரைய முற்படுகின்றான். அவன் முன்னே அவள் நின்று கொண்டிருக்கவில்லை. மனத் தில் கற்பனை செய்துகொண்டுதான் அவளது உருவைவரைய வேண்டும் அந்நிலையில் அவன் உலகில், தான் நன்கு பார்த்து

மகிழ்ந்த சில பொருள்களை நினைத்துப் பார்க்கின்றான். அப்பொருள்களின் தோற்றமும் வடிவமும் தான் தீட்ட நினைக்கும் நங்கையின் அவயவங்களுக்குப் பொருத்தமாக இருப்பதைக் காண்கின்றான். உடனே சித்திரம் உருவாகின்றது. பாருங்கள்! நீர்நிலைகளில் நாள்தோறும் துள்ளிக் குதித்து விளையாடும் ஒளி பொருந்திய கயல்மீனைத் தலைவியின் கண்களாகப் பாவித்து வரைகிறான்; வீரர்கள் வளைத்து மகிழும் வில்லை அவளது புருவங்களாகச் சமைக்கின்றான்; கார்காலத்தில் ஆகாயத்தில் சூல்கொண்டு திரண்டு எழும் கரிய மேகங்களின் தொகுதியை அவளது நீண்ட கூந்தலாக அமைக்கின்றான். இவ்வாறு கண், புருவம், கூந்தல் ஆகியவற்றை வரைந்ததும் ஓர் அழகிய திருமுகம் காட்சியளிக்கின்றது: உயிருள்ள நங்கையின் முகம் பிறரை வருத்தி ஈர்க்கும் தன்மையோடு கூடியது: இத்தன்மையையும் சித்திரக்காரன் தனது ஓவியத்திற்கு ஊட்டுகின்றான். என்னே அவனது கை வன்மை! இப்பொழுது அச்சித்திரம் தூய்மையான வானத்தில் குளிர்ந்த ஒளி வீசித்திகழும் முழுச்சந்திரனே என்னும்படி இருக்கிறது. ஆனால் இயற்கைச் சந்திரன் விண்ணில் காட்சியளிக்கிறது. இவனது செயற்கைச்சந்திரனாகிய நங்கை முகமோ மண்ணில் நின்று காண்போர் மனதைக் கவர்கின்றது. ஓவியப் புலவனுடைய தொழில் இங்கே முடிந்து விடுகின்றது. தவறு யாதும் அவனால் அதன்கண் செய்யமுடியாது.. ஆனால் இவ்வோவியத்தைக் காவியப் புலவன் கையாளும்போது இன்னும் சிறந்த மகிழ்ச்சி பிறக்கின்றது. ஆசிரியர் இளங்கோவடிகள்.கோவலன் கடற்கரைச் சோலையில் இருந்து தனதுமனத்திரையில் தீட்டிய இந்த ஓவியத்தைத் தனது காவியத்தில் படம் பிடித்துக் காட்டுகின்றார். ஆகாயத்தில் உள்ள சந்திரனே இப்பூமியில் இடம் பெயர்ந்து வந்து சிறிதுகாலம் வாழ நினைத்தது என்கிறான் காதலன்; அதற்கு அடிகள் கற்பிக்கும் காரணம் பாராட்டத்தக்கது. சந்திரனை, இராகு கேதுக்கள் என்ற பாம்புகள் விழுங்குகின்றன என்பது நமது நாட்டில் இன்றும் இருந்துவரும் நம்பிக்கை. தனக்கு ஆதரவும் பாதுகாப்பும் தரும் ஆண்மையாளர் வானத்தில் எவரும் இல்லை

என்று நினைத்துக் கோவலனாகிய குலமகன் இங்கு இருக்கிற படியால் அவன் தன்னைக் காத்து அருளுவான் என்று நினைத்து அச்சந்திரன் பூமியில் வந்து தங்கியது என்று அடிகள் கூறுகின்றார். எவ்வளவு நயமும் சுவையும் இதில் அமைந்திருக்கின்றன. இக்கருத்தமைந்த பாடல்:

"கயல் எழுதி வில் எழுதிக் கார் எழுதிக் காமன்
செயல் எழுதித் தீர்ந்த முகம் திங்களோ காணீர்!
திங்களோ காணீர்! திமில் வாழ்நர் சீறூர்க்கே
அங்கண் ஏர் வானத்து அரவு அஞ்சி வாழ்வதுவே"

என வருகிறது.

சிலப்பதிகாரத்தின் மூன்றாவது குறிக்கோள், ஊழ்வினையைப் பற்றியதாகும். ஊழ்வினை வந்து தள்ளுவதால் ஏற்பட்ட பல நிமைகளால் உலக மக்கள் அல்லற்பட்டு ஆற்றாது அழுதனர். வேறு வைத்து, வீறு பெறவேண்டுமென்ற எண்ணத்தால் கோவலனுடைய பெற்றோர்கள் அவனைத் தனியே வசிக்கச் செய்தனர். அவர்கள் மனவொருமையோடு அங்கிருந்து அந்தணர் ஓம்பல், அகவோர்க்களித்தல், துறவோர்க்கெதிர்தல் முதலியவற்றைச் செய்து இல்லறத்தை ஒழுங்காக நடத்தி வந்தனர். இல்லறம் நடத்தும்போது கோவலன் கண்ணகியை வானளாவப் புகழ்கின்றான். ஆனால் அவளோ ஒரு சொல்லைக்கூடப் பேசியதாக அடிகள் கூறவில்லை. தொலையாத இன்பத்தைக் காணவேண்டுமென்று கோவலன் கண்ணகியோடு வாழ்ந்தான். சில ஆண்டுகள் கழிந்தபின் மாதவியின் நடனத்தைக் கண்டான். பண்பட்ட உள்ளத்தைப் பெற்ற கோவலன், ஏன் அவள்பால் காதல் எண்ணம் கொண்டான்? என்று பலரும் எண்ணும்படி அவன் செய்கை யிருக்கிறது.

மாதவியின் மையலிலே அவன் மயங்கிவிடவில்லை. மாதவி, "இம்மாலையை வாங்கும் பெருங்குடி வணிகர் இந் நகரில் உளரோ" என்று கேட்டாள். வணிகக் குலத்திற்கே

இழுக்கு ஏற்படுமோ என அஞ்சி அவன் அம்மாலையை வாங்கி அவளிடம் சென்றான். சென்ற அவன் தன் மனத்தைப் பறிகொடுத்தான்; மனையறத்தையும் மறந்தான். மாதவியிடத்தே இடையீடற்ற இன்பத்தைக் காணலாம் என எண்ணினான். ஆனால் அவனுடைய நெஞ்சினில் ஏதோ ஒரு வெறுப்பு ஏற்படத் தொடங்கியது. அவன் மனத்தில் அது தன் கொடுமையைக் கனிவிக்கும் காலையில் அவன் வரிப்பாடல்களைப் பாடத் தொடங்கினான்.

தன் நினைப்பைத் தவிர வேறு ஒன்றையுமே அறியாதவன் கோவலன் என்று எண்ணி இறுமாந்திருந்த மாதவிக்கு இது வியப்பைத் தந்தது. தாய்மைப் பேற்றை அடைந்து, மணிமேகலை என்ற செல்வத் திருமகளையும் பெற்ற தன்னை முன்னையிலும் மிகுதியாகக் காதலிப்பான் என்று எண்ணிய அவளுடைய உள்ளத்தைக் கோவலன் பாடிய வரிப்பாடல்கள் மாறுபடும்படிச் செய்தன. வேறு ஒரு பெண்ணின் மேல் வைத்த தீராத காதலால் அவன் தன்னை வெறுக்கிறான் என்றொரு நினைப்பு எழுந்து வெந்த புண்ணிலே வேலை விட்டது போன்ற வேதனையை அவளுக்கு உண்டாக்கிற்று. கோவலன் மஞ்சத்தில் அமர்ந்திருந்த இடம் ஒரு மலர்ச் சோலை; கடற்கரைக் கானல், மணற்பரப்பு. ஆனால் அவன் பாடிய பாட்டில் மலர்ச் சோலையும் கானலும் மணற்பரப்பும் புதுநலம் பெற்றதாகக் கூறப்படுகின்றன.

ஓர் இளைஞன் சோலையின் வழியே பலகாலம் சென்று கொண்டிருக்கிறான். பொழிலின் நறுமலர்களிலும், வெண் மணற் பரப்பிலும் அவன் என்றுமே காணாத இன்பத்தை அன்று காண்கிறான். ஒரு கணம் நின்று எண்ணுகிறான். "எப்பொழுதும் உள்ள மணம்தான் இப்பொழுதும் உளது. மணற்பரப்பிலும் வித்தியாசமில்லை. ஆனால் ஏன் இன்று மட்டும் உள்ளத்திலே உவகை பொங்கி எழுகிறது? இதற்கு என்ன காரணம்? ஆம். காரணம் உண்டு. நேற்று வரையில் சோலைவனம் பாலைவனமாக எனக்குக் காட்சி தந்தது. ஆனால், முழுமதி போன்ற பெண் ஒருத்தியின் கண் விழி

யிலே மதி மயங்கிவிட்டேன். அதுதான் எனக்கு இடர் செய்துவிட்டது'' என்று கூறுகிறன். அன்று தமிழைப் போலத் தனிமையாக வந்து இனிமை தந்த தலைவியை நோக்கித் தலைமகன் கூறுவது போலக் கோவலனுடைய வரிப்பாடல் அமைகின்றது. அவன் பாடிய பாட்டில் மலர்ச் சோலையும் கானலும் மணற்பரப்பும் புதுமணம் கொண்டு தோன்றுகின்றன. ''இப்பொழிலில் புதுமணம் கமழும் பூவே, புதிய நறுமணம் தோய்ந்த மணற்பரப்பே, குற்றமற்ற இன்மொழியே, முழுமதி போன்ற முகமே, வில்லை ஒத்த புருவமே இவையல்லவோ என்னை வருத்திவிட்டன'' என்ற இக்கருத்தை,

''பொழில்தரு நறுமலரே புதுமணம் விரிமலரே
பழுதறு திருமொழியே, பணைஇள வனமுலையே
முழுமதி புரைமுகமே முரிபுரு வில்லிணையே
எழுதரு மின்னிடையே எனையிடர் செய்தவையே''

எனவரும் பாட்டுக் குறிக்கிறது.

தன் பக்கத்திலே மாதவி இருக்கவும் கோவலன் இவ்வாறு பாடினன் என்றால் அவளுக்கு முன்னரே ஏற்பட்டிருந்த ஊடல் மிகுதிப்படும் அல்லவா? இந்த எண்ணம் பிறிட்டு எழுந்தவுடன் பெண்மை பேசத் தொடங்கியது.

காவிரியாற்று இருகரைகளிலும் பன்னிற மலர்ச் செடிகள் தேன் பிலிற்றி மணம் கமழ்ந்து விளங்குகின்றன. அம்மலர்களில் மிகுதியாகத் தோன்றி வெளிப்படும் தேனை உண்ண வருகின்றன அழகிய வண்டினங்கள். நாற்புறமும் இதழ்கள் விரிந்து இருக்கும் மலர்களின் நடுவே, தேனை உண்டு களித்து மயங்கி இசைபாடுகின்றன வண்டுகள். அது காவிரியின் புது நீர்ப்பெருக்கில் கரிய குவளை மலர்கள் நிறம் மாறாது மிதந்து வருகின்றன. அவற்றைப் பார்க்கும்போது ''புனல்யாறு அன்று; இது பூம்புனல் யாறு'' என்பது போலக் காவிரியாறாகிய நங்கை குவளை மலர்களாகிய கண்களைப் பெற்றுப் பிற பூக்களாகிய அழகிய ஆடையை உடுத்தி

நடந்து வருவதுபோல் இருந்தது. இக்காட்சியை மனதிற் கொண்ட இளங்கோவடிகள் மாதவியின் கூற்றில் வைத்து.

மருங்கு வண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூ ஆடை அது போர்த்துக்
கருங்கயற்கண் விழித்து ஒல்கி
நடந்தாய் வாழி காவேரி
கருங்கயற்கண் விழித்து ஒல்கி
நடந்தவெல்லாம் நின் கணவன்
திருந்து செங்கோல் வளையாமை
அறிந்தேன் வாழி காவேரி

என்று பாடுகின்றார்.

கானற்சோலையில் அமர்ந்து, கோவலனும் மாதவியும் இன்னிசை பாடி இன்பமாகப் பொழுது போக்கலாம் என்று தான் எண்ணினார்கள், "நாதம், நாதம் நாதத்திலோர் நலி வுண்டானால், சோகம், சோகம்" என்று பாரதி பாடினார். கோவலன் பாடிய அகப்பொருள் நிறைந்த ஆற்று வரிப் பாடல் மாதவிக்குநாதத்தின்இனிமையை நல்காது சோகத் தையே தந்தது என்பதை நாம் முன்பே கண்டோம். அவ் வரிப் பாடலுக்கு எதிராக, யாழினை வாங்கிப் பிறர் ஒருவன் மேல் நாட்டம் கொண்டுள்ளாகத் தோன்றுமாறு ஆற்று வரிப் பாடல்களை மாதவியும் பாடத் தொடங்கினாள். அவள் பாடிய பாடல்களை ஆசிரியர் இளங்கோவடிகள் சொல்லின்ப மும் பொருள் நயமும் பொதுளப் பாடியிருக்கிறார். அவற்றை இயல் தமிழில் சுத்தாங்கமாகப் படித்துப் பார்க்கும்போதே அவற்றிலிருந்து இடையறாத இன்சுவை தோன்றிப் பீறிட்டு எழுந்து, நமது இதய கமலம் மலர்ச்சியும் குளிர்ச்சியும் பெறச் செய்கின்றது. இனி அவற்றை மாதவி போன்ற கலை மகளிர், கலைத்திறன் எல்லாம் விளங்க, இனிய இசை தழு விய குரலால் யாழோடு சேர்த்துப் பாடினால், கேட்போர் அனைவரும், துன்பமே யில்லாத இன்பவுலகத்து எழில் மணி மாடத்தே இருப்பது போன்ற உணர்வு பிறக்கும் என்பதில்

ஐயம் உண்டோ? அவள் பாடிய மற்ருெரு பாடலின் பொருள் நயத்தைப் பார்ப்போம்.

மழை பெய்தலால் நுரையும் திரையும் மலரும் தாங்கி இருகரைகளையும் அலைத்துக் கொண்டு செல்கின்றது பொன்னி என்று புலவர் புகழும் காவிரிப் பெரியாறு. உரைந்த கரைகளின் இருபுறமும், மணம் கமழும் பன்மலர் மரங்களும் நறும் பூஞ்செடிகளும் நன்மலர்க் கொடிகளும், பந்தரிட்டாற் போன்று விரிந்து சிறந்து விளங்குகின்றன. மருதநிலப் பகுதி யாகையால் காவிரிக் கரையிலிருந்து கண்ணுக்கெட்டிய தூரம் பச்சைப் பாம்பு சூல்கொண்டது போலச் செந்நெற் பயிரும் தீங்கரும்பும் நிற்கும் கழனிகள் காட்சியளிக்கின்றன. ஆற்றுப் படுகையில் குயில்கள் பாடச் சோலையில் மயில்கள் ஆடிக்களிக்கின்றன; ஒரு புறம் புள்ளினம், மரக்கொம்புகளில் உட்கார்ந்து இசை பாடித் திரிகின்றன. மயிலின் ஆட்டத்தைக் கண்டும், குயிலின் பாட்டைக் கேட்டும், மைந்தரும் மகளிரும் ஆற்றுநீரில் குதித்து விளையாடி மகிழ்கின்றனர். அவர்கள் மார்பில் அணிந்திருந்த மலர்மாலைகள் கட்டவிழ்ந்தும் சிதைந்தும் நீரோட்டத்தில் மிதந்து செல்லுகின்றன. இவ்வாறு ஆடிப் பாடிச் செல்லுகின்ருள் காவிரியாறு என்னும் காரிகை. இக் காவிரிக் காரிகையைக் கண்ணிமை கொட்டாது கண்டு, இசை தொடுத்து நிற்கின்ருள் மாதவி என்னும் மடந்தை. அவள் மனதில் ஒரு குறிப்புப் புலப்படுகின்றது இக்காவிரி நங்கை ஆடலும் பாடலும் அழகும் சிறப்ப அசைநடையிட்டுச் செல்லும் இச்சிறப்பு இவளுக்கு எவ்வாறு ஏற்பட்டது? சிந்திக்கின்ருள் மாதவி. அவளுக்கு உண்மை புலப்பட்டது. சோழப் பேரரசனுகிய இவள் கணவன், இவளைப் போற்றிப் பாதுகாக்கும் பெருந்தகையாக இருப்பதால் அல்லவா, காவிரி நங்கை இவ்வாறு காட்சியளிக்கிருள் என்று ஏங்குகிருள். ஏக்கம் அகப்பொருள் தழுவிய பாட்டாக வெளிவருகின்றது. அது,

பூவர் சோலை மயில்ஆலப் புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர் மாலை அருகசைய நடந்தாய் வாழி காவேரி

காமர் மாலை அருகசைய நடந்த எல்லாம் நின் கணவன்
நாம வேலின் திறங்கண்டே அறிந்தேன் வாழி காவேரி

எனவரும்.

இனி மற்றொரு காட்சி: பருவம் நிறைந்த காரிகை, உருவம் சிறந்த காளை. ஆம். அவர்கள் தாம் அன்று அப் பூங்காவில் சந்தித்து மகிழ்ந்தவர்கள். தென்றல் தவழும் மாலை நேரம். தேன் மொழியும் மான்விழியும் கொண்டு தன்னை மருட்டிய அவளை மாலையிட்டு மணந்து கொள்வதாக அவன் கடல் தெய்வத்தைக் காட்டிச் சூளுரைத்துச் சென்றான். ஆனால் பல மாலைப் பொழுதுகள் கழிந்தனவேயன்றிக் காதலன் உரைத்த மணமாலை வரவில்லை. காலம் கழிந்து கொண்டே சென்றது; காளைவரும் குறிப்போ காணவில்லை. காரிகையின் அகமும் முகமும் வாடின. தோழி எவ்வளவோ தேற்றியும் காதலால் கலங்கிய அவள் உள்ளம் தெளியவே யில்லை

இவ்வாறு இருக்குங்கால் ஒருநாள் அவன் ஒரு மறைவிடத்திலே வந்து நின்று கொண்டிருக்கிறான். தலைவியைப் பார்த்துப் பேசுதற்குச் சமயம் வாய்க்க வேண்டுமல்லவா? அந்த நேரத்தில் அவள் தோழியிடம் பேசுகிறாள். அவள் பேச்சில் அவன்மேல் உள்ள வெறுப்புத் தென்படவில்லை; இரக்கமே தோன்றுகிறது. எவ்வளவு நயமுடைய பேச்சு அது. குளிர்ச்சி தரும் மாலைப்பொழுது என்றும்போல வந்தது; ஆனால் அன்றுமட்டும் அவளுக்கு அம்மாலை பொறுக்க முடியாத வெப்பத்தைத் தந்தது இன்று நம்மை வாட்டி வருத்துகின்ற இம்மாலைப் பொழுது அன்று வருத்தும் என்று துணியாத அளவு நம்மிடம் அவன் இன்மொழி கூறினான். நாமும் நம்பி மகிழ்ந்தோம். அவனுடைய சூளும் பொய்த்து விட்டது. கடல் தெய்வமே! தான் கூறியபடி வந்து மாலையிடத் தவறினும், அம்மாயக் கள்வனை நீ மன்னிப்பாயாக; உனது மலரடி வணங்குகிறோம்'' என்று தோழியையும் உடன்படுத்திப் பேசினாள் தலைவி. இப்பேச்சு இளங்கோவடிகளின் சதுரப் பாட்டால்,

தீத்துழைஇ வந்த இச் செல்லல் மருள்மாலை
தூக்காது துணிந்த இத் துயரெஞ்சு கிளவியால்
பூக்கமழ் கானலில் பொய்ச்சூள் பொறுக்க என்று
மாக்கடல் தெய்வம்! நின் மலரடி வணங்குதும

என்ற பாட்டாக அமைகிறது.

இவ்வழகிய பாடலைப் பாடியவள் மாதவி அல்லவா? தான் ஈட்டியபொருள்களையெல்லாம் இவள் பொருட்டுச் செலவழித்த கோவலன் பக்கத்தில் அமர்ந்திருக்கின்றான் என்று அவள் நினைத்தாளா? அல்லது மறந்துவிட்டாளா? நாம், இந்த நிலையை மனதிற் கொள்ள வேண்டும்; மறந்து விடக்கூடாது. எத்தகைய உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதை எண்ணவேண்டும். பிறர் மனம் புகாத கற்பு வழியில் செல்லும் மாதர்குல மாணிக்கமான மாதவியா இவ்வாறு பாடினாள்? என்று கோவலன் கருதியதில் தவறுண்டோ? எனவே, கூடலை எய்துவிக்கும் தன்மையுடைய ஊடல் இப்பொழுது முற்றி முறிந்து சின்னாபின்னப் பட்டது.

"ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்"

என்ற பொய்யா மொழியும் இவர்களிடத்தில் பொய்த்தது போலும்! என்னே ஊழ்வலி!

இவ்வாறு மாதவி பாடக்கேட்ட கோவலன், தான் கானல்வரிப் பாடவும், இவள் தன்னை ஒழிந்து பிறன்பால் மனம் வைத்தாளே எனக்கருதி, அவளிடம் விடைபெறாது ஏவலாளர் பின்வர அவளைத் துறந்து சென்றான். இதனை ஆசிரியர் இளங்கோவடிகள்,

யாழிசைமேல் வைத்துத்தன்
ஊழ்வினை வந்து உருத்ததாகலின்
உவவுற்ற திங்கள் முகத்தாளைக்
கவவுக்கை நெகிழ்ந்தனனாய்ப்

பொழுது ஈங்குக் கழிந்தது ஆகலின்
எழுதும் என்று உடன் எழாது
ஏவலாளர் உடன் சூழ்தரக்
கோவலன் தான் போன பின்னர்த்
தாதவிழ் மலர்ச் சோலே ஒதையாயத்து ஒலியவித்துக்
கையற்ற நெஞ்சினளாய் வையத்தின் உள்புக்குக்
காதலுடன் அன்றியே மாதவி தன் மனைபுக்காள்

என்று கூறியுள்ளார். எதிர்பாராத இந்நிகழ்ச்சியைக் கண்ட மாதவியும் ஏக்கத்தோடு தன் வீட்டிற்குச் சென்றாள்.

மாதவியும் கோவலனும் மனம் ஒன்றுபட்டு மகிழ்ந் திருந்த நாட்கள் மாண்டு போயின. கோவலன் மாதவியிட மிருந்து பிரிந்து சென்றுவிட்டான். கோவலன் பிரியவே தன் மனைக்குத் தனியே திரும்பிய மாதவி அவனது பிரிவு ஆற்று மல் பெருங்கவலை அடைகிறாள். இளங்காதலர் மனத்துக்கு இளவேனில் பருவம்போல இன்பம் தருவது வேறு இல்லை. மாலைத் தென்றலும் சோலை விளையாட்டும், மணந்த வாலி பருக்கு மகிழ்ச்சி தரும் இனிய பொருளும் செயலுமாகும். இவற்றிற்குரிய இளவேனிற்காலம் காதலருக்குக் களிப்பைத் தரும் இன்பக்காலம் என்பதைத் தமிழர் நன்கறிவர். வேனிற் காலத்தில் தமிழ் நாட்டில் எங்கும் விழா எடுத்து மகிழ்த லும், விருந்து செய்தலும் இயற்கையாக நிகழும். இந்நிலை யில் வேனிலில் வரவைக் கூறும் இளங்கோவடிகள் புலமை யுள்ளம் தமிழ்நாடு முற்றும் தாவிப் படர்கிறது. தமிழ்நாட் டின் எல்லையளவும் அது சென்று காணுகிறது.

'தமிழ்நாடு' என்று ஒரு நாடு என்றுமே இருந்ததில்லை என்று இன்று சிலர் மொழிகின்றார்கள் அல்லவா? அவர் களுக்கு நல்லறிவு கொடுத்தும் மறுமொழி அளிக்கும் வகை யில் மூவேந்தர் நாடுதான் தமிழ்நாடு என்று இளங்கோவடி கள் வரையறுத்துக் கூறுகின்றார். தமிழ்நாட்டின் வடஎல்லை யைப் பனம்பாரனார் "வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்" என்றார். அம்முறையே இளங்

கோவடிகள் "நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும் தமிழ் வரம்பறுத்த தண்புனல் நன்னாடு" என்று கூறுகிறார்.

கோவலன் பிரிவால் மாதவி வருந்தும் வருத்தம் கூற வந்த இளங்கோவடிகள் வேனிற் பருவத்தைக் கூறுவது பொருத்தமாயினும் இங்கே அவர் தமிழ்நாடு முற்றும் அதன் எல்லை முழுவதையும் நினைத்துக் கொள்வானேன்? என்றுஒரு கேள்வி நம் மனத்தில் எழுகிறது. இன்று தமிழ்நாட்டு அரசியல் கட்சியினர் சிலர் தமிழை மறந்தனர். தமிழ்நாடு என ஒருநாடு இருந்ததுண்டோ என்று கூடச் சந்தேகப்படும் அளவுக்கு அவர் மன நிலை இழிந்துவிட்டது. இந்தச் சூழ்நிலையில் தமிழ் உணர்வு பெற்றவர்களின் கண்கள் தமிழ்நாட்டின் எல்லையை நோக்குகின்றன. இதுபோலவே கோவலனுடைய கலையுள்ளம் மாதவியை மறந்தது. இன்று தோன்றும் மறுமலர்ச்சியுணர்வைப் போல வேனிற்பருவம் வந்து நிற்கிறது. அதனைக் கூறும் அடிகள் தமிழ்நாட்டின் எல்லையளவும் நோக்குகின்றார்.

வேனில் பருவத்திற்குச் சிறப்புத் தருவது மாலையில் வீசும் "மணவாய்த் தென்றல்." அது தோன்றுமிடம் குமரி நாடு; அது சென்று ஒடுங்குமிடம் வடவேங்கடம். அதற்கு அப்பால் உள்ளவர்க்குத் தென்றலின் இனிமை தெரியாது. அதற்குக் காரணம் இந்திய நாட்டின் இயற்கையமைப்பு.

ஒரு காலத்தில் மதுரை நகரம் வரையிலும் கடல் வந்தது என்பதை மச்சபுராணத்தின் மூலம் அறிகிறோம். முன்காலத்தில் தமிழ்நாடு குமரிமுனைக்கும் தெற்கே விரிந்திருந்தது என்று சங்க நூல்களும் தென்னிந்து சமுத்திர ஆராய்ச்சிகளும் கூறுகின்றன. இப்போது மேல்நாட்டு அறிஞரும் இதனை ஒப்புக் கொள்கின்றனர். குமரிமுனை இருக்குமிடத்தில் கடலுக்கு மாறாகக் குமரி என்ற ஒரு மலையிருந்தது. அதன் அடியில் பகறுளியாறு ஓடிக்கொண்டிருந்தது. ஆனால் அப்பகுதியைக் கடல்கொண்டது காரணமாக அது நீர்ப் பரப்பாகி விட்டது. இதற்குக் காரணம் கூறுவோர் ஒரு புதிய கற்பனையையும் கட்டி விட்டார்கள். தென்னாட்டில்

ஆட்சி புரிந்து வந்தவர்கள் பாண்டியர்கள்; அவர்களுக்கும் கடலில் வாழ்ந்தோர் சிலருக்கும் போர் எழவே பாண்டியன் அவர்களை தன் வேற்படையால் வென்றான்; தன்னிடத்தே வாழ்ந்த மக்களை வேலால் வென்ற பகைமையால் கடலானது பாண்டியர் நாட்டைக் கவர்ந்தது என்ற கருத்துப்பட,

''வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள''

என்று கூறுவாராயினர். அது முதற்கொண்டு தமிழ்நாட்டின் எல்லை குறித்தோர் பலரும் ''வேங்கடம் குமரி தீம்புனற் பௌவம் என்று இந்நான்கெல்லை தமிழரது வழக்கு'' என்றும், ''வடதிசை மருங்கில் வடுகு வரம்பாக'' என்றும் கூறலுற்றனர்.

இன்பபுரிக்கே ஓர் எல்லையைக் கூறுவதைப் போலத் தமிழகத்தின் எல்லையை அடிகள் எடுத்துக் காட்டுகிறார். ஆனால் அந்த எல்லை இன்று நமக்கு இல்லை. ''நெடியோன் குன்றம்'' நம் வடக்கு எல்லையாக அமையவில்லை. 'தொடியோள் பௌவம்' என்ற நமது குமரிநாடு பன்னாள் வரையில் பிரிந்திருந்து தென்னெல்லையாக அண்மையில்தான் அமைந்தது. அமரகவி பாரதியார் நம் காலத்தில் வாழ்ந்தவர்; அவர் வடக்கெல்லை நமக்கு முதலில் கிடைக்காது என்பது எப்படிக் கண்டாரோ தெரியவில்லை. எல்லோரும் வடக்கெல்லையைக் கூறி, பின்னர்த் தெற்கெல்லையைக் கூறுவதைப் போலக் கூறாமல் குமரிஎல்லையை முன்பும் மாலவன் குன்றத்தைப் பின்பும் வைத்து,

''நீலத் திரைக் கடலோரத்திலே—நின்று
நித்தம் தவம்செய் குமரிஎல்லை,
வடமாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு''

என்று கூறியுள்ளார்.

இந்த எல்லைக்கிடையே உள்ள மக்கள் எல்லாம் இன்பமாகவே வாழப்பிறந்தவர்கள் என்பது தமிழர் கொள்கை. வருத்தம் வந்தபோதெல்லாம் வாழப்பிறந்த நாம் இதற்கு மனம் தளரக்கூடாது என்பதற்காகத் தமிழ் மூதாட்டியான ஔவையார்,

> ''வாழ்தல் வேண்டும் இவண் வரைந்த வைகல்:
> வாழச் செய்த நல்வினை யல்லது
> ஆழுங் காலைப் புணை பிறிது இல்லை''

என்று கூறுகின்றார். இக்கருத்தால், மதுரை, உறையூர், வஞ்சி, காவிரிப்பூம்பட்டினம் முதலிய தமிழ்நாட்டுத் தலை நகரங்களில் காதல் தெய்வமான மாரனுக்கு ஆண்டு தோறும் சிறப்பு நிகழ்ந்தது. அவன் வரவு தெரிவிக்கும் தூதாக விளங்குவது இளவேனில்.

இளவேனில் காலத்துக்கு ஏற்றமும் இனிமையும் தருவது சித்திரா பூர்ணிமை. அன்று தமிழ்நாட்டில் விழாக்கள் நடைபெறும். அந்தப் பழைய வழக்கத்தை நமது மதுரை நகர் இன்றும் கைவிடவில்லை; இங்கே சோலைமலை அழகரை வையையாற்றில் எழுந்தருள்வித்து வேனில்விழாக் கொண்டாடி இன்பம் பெறுகின்றது. வருக வேனில்.

வேனில் விழாவில் கானற் சோலையினின்றும் ஏவலர் சூழ்ந்து வரக் கோவலன் தன் வீட்டிற்கே சென்று விடுகின்றான். அவனது உள்ளம், ''கானல் வரி நான் பாடத்தான் ஒன்றின் மேல் மனம் வைத்து மாயப்பொய் பல கூட்டும் மாயத்தாள் பாடினாள்'' மாதவி என்று தவறாக எண்ணியது. அந்த எண்ணம் மேலிட மேலிட, மாதவியின்பால் அவனுக்கு வெறுப்பு மிகுந்தது. கோவலனையன்றிப் பிற ஆடவரைக் கனவிலும் கருதாத பெருங் கற்புக்கொண்டு விளங்கும் மாதவியின்பால் கோவலன் ஐயம் கொண்டதற்குக் காரணம் யாது? இதற்குக் காரணம் ஊழ்வினை என்கிறார் இளங்கோவடிகள். 'விதியின் பிழை! ஆம். இது விதியின் பிழைதான்!'' என்பதை இக்கால நாடக மன்றத்தின

ரும், திரைப்பட நடிகர்களும், மாதவியின் மாண்பை அறியாமல் அவளை, வன்கண்மையும் பொருள் வேட்கையும் பொய்யன்பும் கொண்ட விலை மாதாக்கி, "மாதகி" என்று பெயரிட்டு நடிப்பதிலிருந்து தெரியவில்லையா? பத்து லட்சம் பொன் கேட்டாளாம்; கோவலனிடம் சத்தியமும் வாங்கிக் கொண்டாளாம். அன்பும், பண்பும், துறவும் கொண்ட பத்தரை மாற்றுப் பசும் பொன் மாதவி! அவளுக்குப் பொருளா தேவை?

கோவலனைப் பிரிந்த மாதவி மனம் கலங்கினாள். தன் காதலனான கோவலனுக்கு ஒரு கடிதம் எழுதுகிறாள் அந்தத் திருமுகம் அவன் கண்படாமலே திரும்பி வந்துவிடுகிறது. அந்தத் திருமுகத்தைச் சிறிது படித்திருப்பானானால், மாதவியின் மதி முகத்தை ஒருபோதும் காணத் தவறியிருக்கமாட்டான் கோவலன்; முகத்தைக் காண முயலாவிட்டாலும், மாதவி மடந்தையின் மாண்பையாவது உணர்ந்திருப்பான். இங்கே வடமொழியில் உள்ள சாகுந்தல நாடகத்தில் சகுந்தலை எழுதிய கடிதம் காளிதாசனால் சிறப்பிக்கப்பட்டிருக்கிறது. துஷ்யந்தன் விதி வசத்தால் சகுந்தலையை மறந்தவன் திரும்பி வரவில்லை. அப்பொழுது அவள் கடிதமெழுதுகிறாள். அது இரவிவர்மாவின் ஓவியத்தால் மங்காத புகழ் பெற்றுவிட்டது. அதனால் அது பொய்படவில்லை. பன்னெடு நாட்களுக்கு முன்பே தமிழ் ஓவியம் செத்துவிட்டது. அதனால் மாதவியின் கடிதம் மங்கி மறைந்து போயிற்று. வடமொழி, ஆங்கிலம் முதலிய வேற்று மொழிகளில் உள்ள காதல் நிகழ்ச்சிகளைக் கண்ட தமிழர் கண்கள் தமிழில் உள்ளவைகளைக் காண விரும்பாமல் குருடாய்விட்டன. விதியின் சதிகளில் இதுவும் ஒன்று.

மாதவியும் மனம் வாடி எழுதுகிறாள். தாழைப் பூவினது வெள்ளிய தோட்டிலே, பூவின் அரும்பு ஒன்றை எழுத்தாணியாகக் கொண்டு செம்பஞ்சுக் குழம்பில் தோய்த்து எழுதுகின்றாள்.

"உயிர்களை எல்லாம் உணர்ச்சி வேகத்திலே செலுத்தக் கூடியவன் இளவேனில் என்னும் இளவரசன். எல்லோரையும் மகிழ்ச்சியுடன் தத்தம் துணையோடு புணர்விக்கும் அவன் இளையனுதலால், அதனை அவன் நெறிப்படச் செய்யான்; அவனன்றியும், மாலையிலே அந்திவானில் தோன்றுகின்ற சந்திரனும் என்னை வருத்துகின்றான்; ஆதலால் நின் பிரிவைத் தாங்காது வருந்துகின்றேன்; விரைவில் வந்து என்னை மகிழ்விக்க வேண்டும்" என்ற கருத்துப்பட,

"மன்னுயி ரெல்லாம் மகிழ்துணை புணர்க்கும்
இன்னிள வேனில் இளவர சாளன்
அந்திப் போதகத்து அரும்பிடர்த் தோன்றிய
திங்கட் செல்வனும் செவ்வியன் அல்லன்;
புணர்ந்த மாக்கள் பொழுதிடைப் படுப்பினும்
தணந்த மாக்கள் தம்துணை மறப்பினும்
நறும்பூ வாளியின் நல்லுயிர் கோடல்
இறும்பூதன்று இஃது அறிந்தீமின் என"
... ... ... ...

அமைகின்றது மாதவியின் காதற் கடிதம்.

வயந்த மாலை கையிலே இந்தத் திருமுகத்தை அனுப்பினுள் மாதவி. ஆனல், கோவலன் அதனை ஏறிட்டும் பார்க்கவில்லை. கணிகையர் குலத்திலே பிறந்தவளுக்கு மாண்பு எப்படி ஏற்படும்? என்று எண்ணுகிறான் போலும்.

ஏன் இந்த எண்ணம் அவன் மனத்தில் எழுகிறது? அவள்பால் அவன் கண்ட மாயங்கள் யாவை?

நாடகத்தில் மெய்யடியார்போல நடித்துவிட்டுச் சுவர்க்கத்தில் சிறந்த ஓர் இடத்தைப் பெறவேண்டுமென்று ஒருவன் நினைத்தால் அஃது எத்துணை மடமை? அது போலவே. மாதவியும், எட்டுவகைக் கூத்துக்களை ஆடிவிட்டுக் கோவலன் நெஞ்சத்திலே இடம்பெற நினைக்கும் மடமையுடையவளா? அத்துணை இழிமனம் படைத்தவளா மாதவி? ஒருகாலும் இல்லை. அவள் மணிமேகலையின் தாய்; மறந்தும் பிறரை நினையாத மாண்பு மிக்க மனைமடந்தை;

சிறிது ஊடல் கொள்ளவே அவள் நினைத்தாள்; ஆனால் மனம் மாறுபட்ட கோவலன், அவள் தன்னுடன் ஆடிய ஆட்டமும் பாடிய பாட்டும் வீண் வேடம் என்றும் நாடக மென்றும் நினைத்தான். இதனை அடிகள்,

'ஆடல் மகளே ஆதலின் ஆயிழை
பாடு பெற்றன அப்பைங்தொடி தனக்கு'

எனக் கூறியிருப்பது சிந்திக்கத் தகுவதாகும்.

ஈசனோடு என்றாலும், ஆசைக்கு ஒரு அளவு வேண்டும். ஆசாபாசங்கள் மிகும்போதுதான், அவற்றால் உண்டாகும் இன்பத்துக்கே ஓர் எல்லையைக் காண்கிறோம். இதனாலன்றோ பாரதியாரும் இன்பம், இன்பம், இன்பம்—இன்பத்திற்கோர் எல்லை காணில்—துன்பம், துன்பம், துன்பம் என்கிறார்.

கலையிலே மூழ்கிய கோவலன், கண்ணகியிடம் தன் கலைத் திறமையாவும் காட்டுகிறான். ஆனால், அவள் ஒரு பதிலும் கூறவில்லை. கலைச்சுவையில் ஆழ்ந்த கோவலன் கண்ணகியோடு கூடிய வாழ்வில் ஏதோ ஒன்றை இழந் தவன்போல் காட்சி தருகிறான். மாதவியின் ஆடலும் பாட லும் அவனை மயக்கின; தன் நிலையை மறந்து மாதவியின் பாற் சென்று விடுகிறான். கலையரசியான அவள், கோவலன் விழைத்த கலை நுகர்ச்சிக் குறையை நிறைவு செய்கிறாள்: ஆயினும், இன்ப மயமான வாழ்க்கைப் பாதையிலே பல கற்கள் கிடக்கின்றன. கோவலன் தன் வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கிறான்; ஒரு திருப்பம் தோன்றுகிறது.

"நாடக மகளாதலின் பலவகையாலும், நடித்தல் அவ ளுக்கு இயற்கையாகவே அமைந்தது" என்று கூறி அவள் விடுத்த ஓலையை மறுத்துவிடுமளவிற்கு அவன் மனதிலே வன்மை புகுந்து விடுகிறது; கலையுள்ளம் கலந்து விடுகிறது.

அதுகண்ட வயந்தமாலை வருத்தம் மிகவே, மாதவி யிடம் சென்று கோவலன் சொன்னதைச் சொல்லுகிறாள்.

அதனை,

'அணிந்தோட்டுத் திருமுகத்து ஆயிழை எழுதிய
மணித்தோட்டுத் திருமுகம் மறுத்ததற்கு இரங்கி
வாடிய உள்ளத்து வசந்தமாலை'

எனச் சிலப்பதிகாரம் சித்திரித்துள்ளது.

மாதவியோ, மனம் மாறுமல், "மாலை வரமாட்டார் என்ருலும், நாளை அவர் என்னைக் காண வருவார்" என்று சொல்லிக் கையற்ற நெஞ்சமுடன் கண் துயிலாது மலர்ப் படுக்கையில் கிடந்தாள்.

இதனை ஆசிரியர் இளங்கோவடிகள்,

'மாலை வாரார் ஆயினும் மாணிழை
காலை காண்குவம் கையறு நெஞ்சமொடு
பூமலர் அமளிமிசைப் பொருந்தாது வதிந்தனள்
மாமலர் நெடுங்கண் மாதவி"

என்று கூறியிருப்பது காண்க.

மாலைப்போது வந்தது; மன்றல் மணக்கும் தென்றலும் உடன் வந்தது. செந்தாமரைப் பூ விரியவும், தேமா தன் கொழுந்தில் விளங்கும் அழகு ஒழுகிவிடுமோ என்று நினைக்கும்படி தளிர்க்கவும், வனப்புப் பொருந்திய அசோகம் கொத்துக் கொத்தாகப் பூத்து நிறையவும் இளவேனிற் காலம் எய்த வந்தது. ஆனல், மலர் போன்ற் மாதவியின் நெடுங் கண்ணிலே கண்ணிர் மிகுந்தது. கூடினவர்கட்கு இன்பம் தரும் இளவேனில் கூடாதவர்க்குத் துன்பத்தைத் தானே நல்கும்! இவ்விளவேனிற் சிறப்பை,

"செந்தா மரைவிரியத் தேமாங் கொழுந்து ஒழுக
மைந்தார் அசோகம் மடல் அவிழக்—கொந்தார்
இளவேனல் வந்தால் என்னுங்கொல் இன்று
வளவேல் நல் கண்ணி மனம"

எனவரும் அடிகளின் வெண்பாவிலே படிந்து இன்புறுவோமாக.

இதுகாறும் கூறியவற்ருல் கோவலன் வாழ்க்கையில் ஒரு திருப்பு மையம் தோன்றி, மாதவியிடத்துப் பிரிவும் கண்ணகியினிடத்துக் கூட்டமும் உண்டாகும் நிலையை உண்டுபண்ணிவிட்டதென்பது விளங்கும்.

தோழி வயந்த மாலையின் வாயிலாக மாதவி கோவ னுக்கு விடுத்த ஓலையை மறுத்தகோவலனது உள்ளம் சும்மா இல்லை; மாதவியுடன் நிகழ்த்திய வாழ்விலே நடந்த பல நிகழ்ச்சிகளைச் சிந்திக்கத் தொடங்கியது. தான் மாதவி யுடன் தொடர்பு கொண்டது முதல், பிரிந்த அன்று வரை நடைபெற்ற பல நிகழ்ச்சிகளையும் இப்பொழுது தன் மனத் தில் படம் பிடித்துப் பார்க்கிருன் கோவலன். அவன் மனத் திரையில் தன் வாழ்க்கையாகிய நாடகத்தில் மாதவி நடித்த எட்டு வகைக் காட்சிகள் ஒன்றன்பின் ஒன்ருகத் தோன்றி மறைகின்றன; பெருமலைபோல இருநிதியைப் படைத்தோன் குன்றிமணி யளவாகக் குறுகியபொழுது, அவனுடைய கடந்தகால வாழ்க்கை கட்டம் கட்டமாகக் காட்சி தருகிறது. எத்தகைய உணர்ச்சி வெள்ளத்தைத் தன் மனமாகிய அணையால் தடுத்து மதியாகிய மதகின் வழியே சிறிது சிறிதாக வடியுமாறு செய்து ஆழமாகச் சிந்திக்க லாஞன் கோவலன்! முன்னர்க் "கூடலும் ஊடலும் கோவ லற்கு அளித்துப் பாடமை சேக்கைப் பள்ளியுள் இருந்தவ ளாகிய மாதவி, இந்திரவிழாவின் இறுதி நாளன்று கடற் கானலில் ஏற்பட்ட பிரிவு காரணமாகக் கோவலன் மனதை விட்டு அகன்றுவிட்டாள். கோவலன் உள்ளக் கோயிலில் கலையரசியாகவும், காமக்கனற் கொழுந்தாகவும் இருந்து களிப்பூட்டி வந்த காரிகை இப்பொழுது கணிகை மகளா கவே அவனுக்குக் காட்சி தரும்படியான நிலை ஏற்பட்டு விட்டது. இதற்கு ஊழ்வலியே காரணம் என்று அடிகள் குறித்திருப்பதையே நாமும் ஏற்று அமைதி கொள்ள வேண்டியுள்ளது.

மாதவியின் முடங்கலை மறுத்த கோவலன் அவளது செய்கைகளை எல்லாம் நாடக உறுப்புக்களாகிய எண்வன -

வரிக்கூத்தாகக் கொண்டு வெறுத்துரைக்கும் தன்மையை உள்ளம் உருகும் வகையில் சுவையும் உணர்ச்சித் துடிப்பும் பொருந்த அடிகள் விளக்கிச் சொல்லும் திறம் படித்து இன்புறத்தக்கதாகும். வரிக்கூத்து என்பது "அவரவர் பிறந்த நிலத்தன்மையும் பிறப்பிற்கேற்ற தொழில் தன்மையும் தோன்ற நடித்தல்" என்பர். இனி இவ்வெட்டுவகை வரிக்கூத்துக்களுள் ஒன்ருன கண்கூடு வரியில் (அதாவது: எதிர்முகமாக நின்று நடித்தல் என்னும் கூத்து வகையில்) மாதவியின் கொள்கையோடு பொருந்துமாறு அதனைக் கூறும் திறத்தைப் பார்ப்போம். "மண்மகளோ வானவர் மகளோ கலைமகளோ திருமகளோ என்று வியக்கத்தக்க உருவிற் சிறந்த மாதவி முதன் முதல் அரங்கேறி ஆடல் பாடல் நிகழ்த்திய காலத்தில், கோவலனுக்கு எதிர்முகமாக நின்று தன் காதல் குறிப்புடையவள்போல நடித்தாள் என்பதை முன்பே கண்டுள்ளோம்? அதனை மனம் கொண்ட கோவலன்,

"திலகமும் அளகமும் சிறுகரும் சிலையும்
குவளையும் குமிழும் கொவ்வையும் கொண்ட
மாதர்வாள் முகத்து மதைஇய நோக்கமொடு
காதலின தோன்றிய கண்கூடு வரியும்"

என்று மாதவிக்கும் தனக்கும் ஏற்பட்ட முதற் சந்திப்பே நாடகம் ஆயிற்றே என்று வருந்துகிருன். அதுமட்டுமா? மாதவி, பின்னர், தேன்பாகு சொரிந்த தன் பவள வாய் திறந்து சிறுநகை செய்து, வருக என வந்து, போக எனப் போகிய புதுமைக் காட்சியும் "கானல் வரி" என்னும் நாடகமாக முடிந்ததே என ஏங்குகிருன். அதனைப்

"பாகுபொதி பவளம் திறந்து நிலா உதவிய
நாகிளம் முத்தின் நகை நலம் காட்ட
வருகென வந்து போகெனப் போகிய
கருநெடுங் கண்ணி கானல் வரிக்கோலமும்"

என்கிறது சிலம்புச் சித்திரம்.

கோவலன் பிரிந்து சென்ற பின்னர் அவன் உள்ளம் நோவுமே என்று தான் இரங்காமல் சினத்தால் சிவந்து போன கணிகைகளோடு சிலதியரைத் துணையாகக்கொண்டு தன் வழியே நடந்து தன் வீடு சென்ற மாதவியின் செய்கை நாடகத்தின் மற்ருெரு உறுப்பாகிய, ''உள்வரிக் கோலம்'' (வேற்றுருக் கொள்ளல்) என்பதைக் கோவலனுக்கு நினைப் பூட்டியது. இதனை ஆசிரியர்,

''கிளிபுரை கிளவியும் மடஅன் நடையும்
களிமயில் சாயலும் கரந்தனள் ஆகிச்
செருவேல் நெடுங்கண் சிலதியர் கோலத்து
ஒரு தனிவந்த உள்வரி ஆடலும்''

என்று பாடுவாராயினர். அதனை அடுத்து ஆசிரியர், நமக்கு ஒரு சிறந்த உண்மையை வெளிப்படுத்துகின்ருர். வயந்த மாலை கொண்டு வந்த மாதவியின் முடங்கலைக் கோவலன் மறுத்ததாகக் கூறும் இவ்வாசிரியர், அவனது மறுப்பிற்குக் காரணம், மாதவியின்மேல் அவனுக்குத் தோன்றிய காதல் வெறுப்பன்று; மீண்டும் அவளை அடையவேண்டும் என்ற விருப்பத்தின் அறிகுறியே என்கிருர். ஆனல் மதியும் நிதியும் ஒருங்கே படைத்த மாதவி விதி சதி செய்துவிட்டதாகவே மதியிழந்து கருதிக்கொண்டு விட்டாள். இதிலிருந்து மாதவியாகிய மடந்தை தன் கலையால் கோவலனைக் கட்டுப்படுத்திளுளேயன்றி, அவனது களங்கமற்ற உள்ளத்தை முற்றும் உணர்ந்து கொண்டாள் அல்லள் என்பது வெளிப்படுகிறது. இதனை, ஆசிரியர், கோவலன் கூற்றில் வைத்து

புணர்ச்சியுள் பொதிந்த கலாம்தரு கிளவியின்
இருபுற மொழிப் பொருள் கேட்டனள் ஆகித்
தளர்ந்த சாயல் தனது மென்கூந்தல்
கிளர்ந்து வேருகிய கிளர்வரிக் கோலமும்

என்று கூறுகின்ருர். மேலும், கோவலன், தன் மனைவி, பெற்ருேர், உற்ருர் முதலிய யாவரையும் பிரிந்து மாதவியுடன்

உறைந்த காலத்தில் அவனுடைய சுற்றத்தார்க்கு இரங்கிக் கூறியவருத்த மொழிகளும் நடிப்பின்பாற் பட்டனவேயாகும் என்பதையும் கோவலன் உணர்கின்றான். இதனை ஆசிரியர் "பிரிந்துறை காலத்துப் பிரிந்தனளாகி என்னுறு கிளைகட்கும் தன்னுறு துயரம், தேர்ந்து தேர்ந்து உரைத்த தேர்ச்சி வரி" என்று கூறியுள்ளார். அன்றியும், மாதவி கோவலன் பிரிவால் வருந்திக் கண்ணிற் பட்ட யாவரிடத்தும் தன் துன்பத்தை எடுத்து உரைத்தாள். இச்செய்கை "காட்டு வரி" என்னும் நாடக உறுப்பையே கோவலனுக்கு நினைப்பூட்டியது.

> வண்டலர் கோதை மாலையுள் மயங்கிக்
> கண்டவர்க்கு உரைத்த காட்சி வரி

என்பது இதுவே. இவ்வாறு மாதவியின் செய்கைகள் யாவையும் நாடக நிகழ்ச்சிகளாகவே உள்ளன என்று கோவலன் எண்ணி மனம்நொந்து தனது ஊடலைக் கூடலாகிய மருதத் தொழிலாக அமைத்துக் கொள்ளாமல் பாலைநிகழ்ச்சியாக மாற்றிக் கொண்டான். மாதவியின்பால் ஏற்பட்ட பாலைத் திணையின் கொடுமை கண்ணகிக்குக் குறிஞ்சிச் சோலையாக மாறிக் குளிர்ச்சி தரப்போகிறது. பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ?

## 11. கனவுக் காட்சி

அந்திமாலை; சூரியன் பகல் முழுதும் இடையறாது உழைத்ததன் காரணமாகத் தன் களைப்பைப் போக்கிக் கொள்ள எண்ணி மேற்குக் கடலில் மூழ்கினான். காவிரிப்பூம் பட்டினத்துக் காரிகையர் தங்கள் வளமனைகள் தோறும் மணிவிளக்கு ஏற்றினர். அலர்ந்த முல்லை மலர்களை நெல்லோடு சேர்த்துத் தூவித் தத்தம் குலதெய்வங்களை வணங்கினர். பின்னர் இருள் சூழவே, அம்மகளிர் தாம் பகற் காலத்தில் உடுத்திருந்த உடைகளை மாற்றி இரவிற்கேற்ற மெல்லிய பூந்துகில்களை உடுத்துத் தங்களை அழகுபடுத்திக் கொண்டு தத்தம் கணவன்மார்களுடன் மகிழ்ந்திருந்தனர், கூடலுக்கு உரிய இந்த மாலைக் காலத்திலேதான், கோவலன் மாதவிபால் ஊடல்கொண்டு கண்ணகியின் வீட்டிற்கு வந்துகொண்டிருந்தான். இந்நிலையில் கோவலன் கண்ணகியைக் கண்டு தன் அவல நிலையை எடுத்துரைத்தான். இந்த ஒரே செய்திதான் ''கனாத்திறம் உரைத்த காதை''யில் கூறப்படுகிறது. ஆனால் காப்பியம் எழுத முற்பட்ட ஆசிரியர் இளங்கோவடிகள் இவ்வளவுச் சுருக்கமாகச் செய்தியைக் கூறிவிடுவாரா? இந்த இடத்தில் மற்றொரு பாத்திரத்தை *(Character)* நமக்கு அறிமுகப்படுத்துகிறார். சிறந்த நாடக ஆசிரியர்கள் தாம் எழுதும் வரலாற்று நாடகத்தில் *(Historical play)* தாம் படைத்துக் காட்டும் ஒவ்வொரு பாத்திரத்திற்கும், ஒரு சிறந்த கடமையை வரையறுப்பது வழக்கம். அதுபோலவே இளங்கோவடிகளும், இதுவரை அறிமுகப்படுத்தாத ஒரு பாத்திரத்தைச் சந்திக்கும்படி செய்கி

ளூர். அதுதான் கண்ணகியின் தோழியாக வரும் தேவந்தி என்ற பாத்திரம். காவிரிப்பூம்பட்டினத்தில் மாலதி என்ற பார்ப்பனி ஒருத்தி வாழ்ந்து வந்தாள். அவள் ஒரு நாள் தன் மாற்ருளின் மகவு பால் நினைந்து அழவே அதன் அழுகையைப் போக்கத் தன் மார்போடு அணைத்துப் பாலூட்டினுள். அக்குழந்தை எதிர்பாராத விதமாகப் பால் விக்கி மாண்டது. தன் கணவனும் மாற்ருளும் அச்செய்தியை உணர்ந்து வருவார்களே என்று நினைந்து மாண்ட குழந்தையை மடியில் மறைத்து அம்மாநகரில் இருந்த பல்வேறு கோயில்களுக்குச் சென்று இறந்த குழந்தை மீண்டும் உயிர் பெற்று எழுமாறு தெய்வங்களை வேண்டிஞள். இதனை ஆசிரியர்,

"மாலதி மாற்ருள் மகவுக்குப் பாலளிக்கப்
பால்விக்கிப் பாலகன் தான்சோர மாலதியும்
பார்ப்பாஞெடு மனையாள் என்மேற் படாதன விட்டு
ஏற்பன கூறூர் என்று ஏங்கி"

என்று கூறுகின்ருர். இவ்வாறு சென்று தொழுத பல கோயில்களை அடிகள் தொகுத்துரைக்கின்ருர். கற்பகக் கோயில், வெள்யானைக் கோயில். பலதேவன் கோயில், சூரியன் கோயில், சந்திரன் கோயில். முருகன் கோயில், அருகன் கோயில் முதலிய பல கோயில்கள் காவிரிப் பூம் பட்டினத்தில் விளங்கின! அவற்றைச் சிலப்பதிகாரம்.

அமரர் தருக் கோட்டம் வெள்யானைக் கோட்டம்
புகர் வெள்ளை நாகர்தம் கோட்டம், பகல் வாயில்
உச்சிக்கிழாள் கோட்டம் ஊர்க்கோட்டம் வேற்கோட்டம்
வச்சிரக் கோட்டம், புறம்பணையான் வாழ்கோட்டம்
நிக்கந்தக் கோட்டம் நிலாக் கோட்டம்

என்று கூறுகிறது. இக்கோயில்களுக்குச் சென்று பிள்ளையை மீட்டுத் தரவேண்டும் என்று மாலதி பலமுறை வேண்டியும் ஒன்றும் பலிக்கவில்லை. இறுதியில் சாத்தன் கோயிலுக்குச் சென்று அங்கேயே வரங்கிடந்தாள், அவள் அங்கே கிடந்த

போது இடாகினி என்ற பேய் அவள் முன்தோன்றி "முற்பிறப்பில் நல்ல தவம் செய்யாதவர்கட்குத் தேவர்கள் வரம் கொடுக்க மாட்டார்கள்" என்று சொல்லிப் பிணத்தைப் பிடுங்கிக்கொண்டு சுடுகாட்டுக் கோட்டத்திற்குச் சென்றது. உடனே மாலதி இடியுண்ட மயில்போல் மயங்கி அழுது புலம்பினுள். அப்பொழுது சாத்தன் தோன்றி, "பெண்ணே நீ திரும்பிச் செல்; செல்லும் வழியில் ஒரு சோலையைக் காண்பாய்; அவ்விடத்தில் ஒரு குழந்தை இருக்கும்; அக் குழந்தையை எடுத்துச் செல்" என்று கூறினுன். மாலதியும் அவ்வாறே சென்று பார்க்க உயிருள்ள குழந்தையொன்று கிடப்பது கண்டு எடுத்து மடியில் இட்டு மனைக்குச் சென்று மாற்ருளிடம் அதனைக் கொடுத்து மகிழ்ந்தாள்.

"அஞ்ஞை நீ ஏங்கி அழல் என்று முன்னை
உயிர்க்குழவி காணுய் என்று அக்குழவி யாய்ஓர்
குயிற்பொதும்பர் நீழல் குறுக அயிர்ப்பின்றி
மாயக் குழவி எடுத்து மடித்திரைத்துத்
தாய் கைக்கொடுத்தாள் அத்தையல்"

என்று சிலப்பதிகாரம் செப்புகின்றது. இந்த மாயக் குழந்தையே சாத்தன் என்ற தெய்வமாகும்.

சாத்தனுகிய குழந்தை தன் பார்ப்பனப் பெற்ருேர்களால் நன்கு வளர்க்கப்பட்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கல்வி கேள்விகளிலே சிறந்து விளங்கினுன். பன்னுட்குப் பின்னர்த் தாய் தந்தையர் இறக்கவே, சாத்தன், அவர்கட்கு ஆற்றவேண்டிய சடங்குகளைத் தானே செவ்வனே செய்து உரிய காலத்தில் தேவந்தி என்ற பார்ப்பனப் பெண்ணை மணந்து மகிழ்ந்திருந்தான்.

இவரது மனை வாழ்வில் தேவந்தி பிரிவென்னும் துயருக்கு ஆளானுள். சாத்தன் அவளுக்குத் தன்னுடைய—என்றும் மூவாத—இளமையைக் காட்டித் திடீரென மறைந்தான். மறைந்தபொழுது தேவந்தியை நோக்கி "நீ எனது

கோயிலுக்கு வருக'' என்று கூறிவிட்டு நீங்கினன். இதனை இளங்கோவடிகள்,

''தேவந்தி என்பாள் மணிவி அவளுக்குப்
பூவந்த உண்கண் பொறுக்க என்று மேவித்தன்
மூவா இளநலம் காட்டிஎம் கோட்டத்து
நீவா எனவுரைத்து நீங்குதலும்''

என்பாராயினர். அன்று முதல் தேவந்தி நாள்தோறும் சாத்தன் கோயிலுக்குச் சென்று முறைப்படிவணங்கித்தான் தன் கணவனைப் பெறவேண்டும் என்று நோன்பு மேற் கொண்டு வாழ்ந்து வருவாளாயினள். இந்நிகழ்ச்சிக்குப் பின்னரே தேவந்தி கண்ணகிக்குத் தோழியாகி உடன் உறைந்து வந்தாள். கண்ணகியும் தன்னைப்போலவே கண வனைப் பிரிந்து வருந்துகிருள் என்று அறிந்து, தேவந்தி,தான் கோயிலுக்குப் போகும்போதெல்லாம், கண்ணகியும் தன் கணவனைப் பெற்று மகிழ வேண்டுமென்று வேண்டிவந்தாள்

''கண்ணகி நல்லாளுக்கு உற்ற குறையுண்டென்று
எண்ணிய நெஞ்சத்து இனையளாய் நண்ணி
அறுகு சிறுபூளை நெல்லொடு தூய்ச் சென்று
பெறுக கணவனோடு என்ருள்''

என்பது சிலப்பதிகாரம்.

சாத்தன் கோயிலில் வழிபாடு செய்து திரும்பிய தேவந்தி கண்ணகியிடம் வந்து ''அம்மா, உன் கணவனைப் பெற்று நீ இனிது வாழ்வாய்'' என்று வாழ்த்தினுள். தேவந்தியின் களங்கமற்ற வாழ்த்தினைக் கேட்ட கண்ணகி, தோழியை நோக்கி, ''நீ இவ்வாறு வாழ்த்துவதால் நான் என் கணவனை மீண்டும் பெற்று வாழ்வேன்; ஆனுல், என் மனத்தில் ஓர் ஐயம் தோன்றி வருத்துகின்றது'' என்று கூறித் தான் அன் றிரவு கண்ட தீய கனு ஒன்றை விரித்துரைக்கலானுள்.

''என்னைக் காதலித்துக் கைப்பிடித்த கணவன் முன்னே செல்ல நான் பின்தொடர்ந்து சென்றேன். சென்ற நாங்கள்

இருவரும் ஒரு பெரிய நகரினுள் நுழைந்தோம். அந்த நக ரத்தில் தங்கியிருந்தபொழுது அந்நகர மக்கள் எங்கள் பரம் பரைக்கே இழுக்கைத் தரும் ஒரு பெரும்பழியை எங்கள் மீது சுமத்தினர் என்பாளாய்,

''கடுக்கும என்நெஞ்சம் கனவினால், என்கைப்
பிடித்தனன் போய் ஓர் பெரும்பதியுள் பட்டேம்
பட்ட பதியில் படாதது ஓர் வார்த்தை
இட்டனர் ஊரார் இடுதேளிட்டு என்றனன் மேல்''

என்று வருத்தத்துடன் சொன்னாள். மேலும் ''அந்நகரத் தார் சுமத்திய பழியால் என் கணவருக்கு ஆபத்து ஏற்பட்டு விட்டது என்று என்னிடம் சிலர் வந்து சொன்னார்கள்; அதனால் நான் உடனே அரசன்முன் நின்று வழக்காடினேன்; அதன் காரணமாக அவ்வரசனுக்கும், அந்நகரத்திற்கும் ஒரு தீங்கு ஏற்பட்டது; இது தீய கனவாகையால் விளக்கிச் சொல்ல விரும்பவில்லை'' என்று கண்ணகி தொடர்ந்து கூறினாள். இதனை ஆசிரியர் இளங்கோவடிகள்,

''கோவலற்கு உற்றதோர் தீங்கென்று அதுகேட்டுக்
காவலன் முன்னர்யான் கட்டுரைத்தேன் காவலனோடு
ஊர்க்குற்ற தீங்கும் ஒன்றுண்டால் உரையாடேன்
தீக்குற்றம் போலும், செறிதொடிஇ!''

என்று கூறுகின்றார். இவ்வாறு கண்ணகி கண்ட கனவின் முடிவில் கோவலனும் கண்ணகியும் துக்கம் அடைந்த நிகழ்ச்சியும் கனாத் திறமுரைத்த காட்சியில் குறிப்பிட் டுள்ளது.

''உற்றேனொடு உற்றே ஊறுவனொடு யானுற்ற
நற்றிறம கேட்கின் நகையாகும்''

என்பது கண்ணகியின் கூற்றாக வரும் சிலப்பதிகாரப் பகுதி

சிலப்பதிகாரத்தில் வரும் இப்பகுதி மிகவும் முக்கிய மானது. பின்வரும் மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டம்

ஆகிய இருபெருங் காண்டங்களின் நிகழ்ச்சிகளையும் ஆசிரியர் இளங்கோவடிகள் மிகச் சுருக்கமாகவும், தெளிவாகவும் கண்ணகியின் கனவில் வைத்துக் காப்பியப் போக்கை ஒழுங்குபடுத்துகின்ற திறம் எதிரது போற்றல் எனத் தமிழ் நூல்களில் கூறப்படும். மேனாட்டு நாடக நூல்களில் சிறந்த ஷேக்ஸ்பியர் நாடகங்களில் "எதிரது போற்றல்"* என்ற இவ்வுத்தி வருகிறது. ஆனால் சிலப்பதிகாரத்தில் வரும் இப் பகுதி போன்று, காப்பிய நிகழ்ச்சியின் சுருக்கமாகப் பெரும் பகுதிச் செய்திகளை இவ்வளவு உள்ளடக்கி வருவது போலும் சிறப்பு அந்நாடகங்களில் இல்லையென்றே கூறிவிடலாம். இஃது இவ்வாசிரியரின் தனிச் சிறப்பு.

இக்கால ஆராய்ச்சியாளர்களிடையே மூன்று வகையான கருத்துக்கள் உள்ளன. முதற் கருத்து: வஞ்சிக் காண்டம் இளங்கோவடிகளால் எழுதப்படவில்லை; அது பிற் சேர்க்கை என்பது. இரண்டாவது கருத்து: வஞ்சிக் காண்டம் இளங்கோவடிகளால் எழுதப்பட்டது; ஆனால் முதலில் அதனை அவர் எழுதவில்லை; மதுரைக் காண்டம் கொலையில் முடிகின்றதே. அது அமங்கலம்† ஆயிற்றே, என்று மீண்டும் சிந்தித்தபின்தான்§ அவர் வஞ்சிக் காண்டம் எழுதினார் என்பது. மூன்றாவது கருத்து: கனத் திறமுறைத்த பகுதியைக் காணும்போது, இரு கருத்துக்களும் பொருந்துவதாக இல்லை என்பது. ஆசிரியர் இளங்கோவடிகள் தாம் எழுத முற்பட்ட வரலாற்று நிகழ்ச்சிகளை எல்லாவற்றையும் முதலில் சிந்தித்து வரன்முறை செய்துகொண்டு எழுதுவதே இதற்குப் போதிய சான்று. புகார்க் காண்ட இறுதியிலே, இறுதிக் காண்டமான வஞ்சிக் காண்ட நிகழ்ச்சியினைத் தெளிவாகக் காட்டியுள்ள முறை மிகவும் நோக்கத் தக்கது. "பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டும்" என்று வஞ்சிக் காண்டத்திலே வரும் நிகழ்ச்சியின் உண்மை,

---

**Foreshadowing Element.*

†*Ignoble Ending*

§*After-thought*

''யானுற்ற நற்றிறம் கேட்கின் நகையாகும்'' என்று புகார்க் காண்டத்திலே கண்ணகி தேவந்திக்குக் கூறும் முகமாக விளக்கப்பட்டிருப்பது இக்காப்பியத்தில் பிரிக்க முடியாத இணைப்பாகும் என்பது. இவைகளைப் பின்னர் ஆராய்வோம்.

இனிக் கதையைத் தொடர்வோம். தேவந்தி, கண்ணகியிடம் கடலோடு காவிரி கூடுமிடத்தில் மடல் அவிழ்ந்திருக்கும் நெய்தல் கானல் உள்ளது; அங்கு சோமகுண்டம், சூரிய குண்டம் என்ற நீர்நிலைகள் உண்டு; அவற்றில் மூழ்கிக் காமவேளின் கோயிலை வணங்கினவர் தங்கள் கணவரோடு இந்த உலகத்தில் இன்புறுவர்; மறுபிறப்பிலும் இன்ப நலம் பெறுவர். நாமும் அங்கே சென்று புனித நீராடுவோம் என்று கூறுவாள்.

''கடலொடு காவிரி சென்றலைக்கு முன்றில்
மடலவிழ் நெய்தலங் கானல் தடமுள,
சோமகுண்டம் சூரியகுண்டம் துறைமூழ்கிக்
காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடு,
தாமின் புறுவர் உலகத்துத் தையலார்
போகஞ்செய் பூமியினும் போய்ப் பிறப்பர்
யாமொரு நாள் ஆடுதும்''

என்றாள்.

இதைக் கேட்டவுடன் கண்ணகி திடுக்கிட்டவளாய், ''இது என் போன்ற குலப் பெண்களுக்குப் பெருமை தரும் செயல் அன்று'' என்று கூறினாள். இளங்கோவடிகள், தமிழ் நாட்டுப் பண்பாட்டைச் சிறப்பிக்க வேண்டி

''யாம் ஒருநாள் ஆடுதும் என்ற அணி இழைக்கு அவ்
ஆயிழையாள் பீடன்று என இருந்தாள்...''

என்று கூறுகின்றார்.

இவ்வாறு கண்ணகி கூறிக்கொண்டிருக்கும்போது கோவலன் மாதவி வீட்டினின்று கண்ணகிபால் வந்து கொண்டிருந்தான். தேவந்தி அவள் கணவன் வருவான் என்று மனமார வாழ்த்தியது பொய்க்கவில்லை.

கணவனைத் தவிர வேறு ஒரு தெய்வம் இல்லையென்று நினைப்பவர்கள் தமிழ்ப் பெண்மணிகள். இதனால்தான் வள்ளுவப் பெருந்தகையும்,

> ''தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் மழை''

என்று கூறினர்.

இதன்கண் தெய்வத்தைத் தொழமாட்டாள் என்று கூறுவதால் திருவள்ளுவர் கடவுளைத் தொழக்கூடாது என்று கூறுகிறார் என்றும் இளங்கோவடிகளும் அவரைப் பின்பற்றிக் கடவுளைத் தொழக் கூடாது என்று கூறுவதாகவும் கொள்ளக் கூடாது. தெய்வம் என்ற சொல்லிற்கு இரு வகையான பொருள் கூறப்படுகிறது. ஒன்று சிறுபான்மைக் கடவுளைக் குறிக்கும்; பிரிதொன்று பெரும்பாலும் சிறு தேவதைகளைக் குறிக்கும். சிறு தேவதைகளெல்லாம் வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து வானிறையும் தெய்வமானவர்கள். அவர்கள் வீர வணக்கத்திற்கே உரியவர்கள். அவர்களைக் கடவுளென்றே கருதி வழிபடக்கூடாது என்பதுதான் தமிழ்நாட்டுச் சமயத் தலைவர்கள் காட்டிய வழி. ''சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோமல்லோம்'' என்று திருநாவுக்கரசர் கூறுவது இங்கே நினைக்கத் தகுவது.

சிறு தெய்வங்களை ஆண்களே வழிபடக்கூடாது என்பது தமிழ்ச் சமயப் பண்பாடாயின், அவர்களைத் தெய்வமாகக் கருதிப் பெண்கள் எங்ஙனம் வழிபடல் கூடும். கணவன் ஒருவனையே தமிழ் நாட்டுப் பெண்மணி தெய்வமாக வரித்துக் கொள்ளும் கடமையுடையவள். அவள் கணவனைத் தவிர வீர வணக்கத்திற்குரியவர்களாய் வாழ்வாங்கு வாழ்ந்த காரணத்தால் தெய்வ வரிசையில் இடம் பெற்றவர்களான மக்களை வணங்கக்கூடாது. ஆனால் கடவுளைப் பெண்களும் தொழவேண்டும் என்றே,''கற்றதனால் ஆய பயன் என்கொல் வாலறிவன் நற்றாள் தொழார் எனின்'' என்று வள்ளுவப் பெருந்தகை கூறுகிறார். பெண்களும் கல்வி கற்றவர்களாத

லால், இது பெண்களுக்கும் பொருந்தும். பிறந்து இறக்காதவன் தான் கடவுள். பிறந்து இறப்பவர்கள் சிறு தெய்வங்கள்; இதனையே, ''செத்துச் செத்துப் பிறப்பதே வென்று பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ'' என்று நாவுக்கரசப் பெருந்தகையார் மற்ருேரிடத்திற் குறிப்பிடுகிருர். செத்துப் பிறப்பவர்கள் கடவுள் ஆகமாட்டார்கள். இராமன், கிருஷ்ணன், இயேசு, புத்தர் எல்லாம் தெய்வமாகவே கருதப்படவேண்டும். இதனுல் கண்ணகியின் உட்கோள் குலமகளுக்கு உரிய சிறந்த அறம் என்பது தெளிவாம்.

கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும்
கொண்டானை அல்லால் அறியாக் குலமகள் போல்

என்ற ஆன்ருேர் வாக்கிற்கு அரணுக விளங்கும் கண்ணகி கோவலனை வரவேற்ருள். அப்பொழுது கோவலன் அவளுடைய வருத்தத்தையும் வாட்டத்தையும் கண்டு வஞ்சிப்பதையே தனது வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்ட மாதவியுடன் கூடியதால் என்னுடைய முன்னேர்கள் வழி வழியாகத் தேடிச்சேர்த்த பெரிய நிதிக்குவைகளை எல்லாம் சிறுகச் சிறுகக் கரைத்துவிட்டேன். இந்தச் சிறு செய்கை எனக்குப் பெரும் நாணத்தைக் கொடுக்கின்றது'' என்ருன். இவ்வாறு கோவலன் தன் கேட்டுக்கு உரிய காரணத்தை ஆராய்ந்து வருந்தலானுன். இதனை இளங்கோவடிகள்

''சலம்புணர் கொள்கைச் சலதியோடு ஆடிக்
குலந்தரு வான்பொருள் குன்றம் தொலைந்த
இலம்பாடு நாணுத்தரும் எனக்கு''

என்பாராயினர்.

இவ்வாறு கோவலன் தான் செய்த தவற்றுக்கு இரங்கி வருந்தினுன். கோவலன் வருத்தத்தை உணர்ந்த கண்ணகி, தன் கணவன் வறுமையினின்றும் தன்னைக் காக்க வருந்துகிருனே என எண்ணி மீண்டும் பொருளைப் பெறத் தன் காற்சிலம்புகளைக் கொள்ளுமாறு வேண்டினுள்.

"நலங்கேழ் முறுவல் நகை முகம் காட்டிச்
சிலம்புள கொண்ம்"

என்பது சிலம்புச் சித்திரம். இங்கே கண்ணகியைக் கண்ணிய மும் கடமையுணர்வுமுடைய மாபெரும் பத்தினி ஆக்கிவிடுகிறார் இளங்கோவடிகள். வாணிகம் செய்யப் பொருள் வேண்டுமென்று கோவலன் கேட்கவில்லை. நிறைந்த செல்வத்தையெல்லாம் தொலைத்து விட்டேனே என்பது நோக்க அது மிகவும் நாணமாயிருக்கிறது என்றுதான் கூறுகிறான். உன்னிடத்திலே ஏதேனும் உதவுதற்கு இருக்கிறதா என்றும் அவன் கேட்கவில்லை. கணவன் பொருள் இல்லையெனக் கவல்வதைக் கண்டாள் கண்ணகி. அமைச்சர்போலத் தக்க தருணத்தில் வழிகாட்டுபவள் அல்லவா மனைவி! சட்டெனத் தன்னால் என்ன செய்ய முடியுமென நினைத்தாளா? நினைக்கவில்லை, நினையுமுன்பே "இதோ என் காற்சிலம்பு இருக்கிறது, கொள்ளுங்கள்" எனக் கூறுகிறாள். என்னே கண்ணகியின் கற்பு மாண்பு!

## 12. காவிரி நாடு

கண்ணகியின் வரலாறு தமிழ் வரலாற்று ஏடுகளிலே மறக்க முடியாத ஒரு சம்பவம். கோவலன் மாதவியினின்று பிரிந்து வந்தவன் கண்ணகியை "எழு" எனக் கூறினன்; எழுந்தாள். கற்புக்கடம் பூண்டு காதலன் பின் சென்ற கண்ணகி நலம் பெற்ருளா? அதுதான் இல்லை; விதி சதி செய்யக் காத்திருக்கும்போது அவள் எவ்வாறு மதி பெற முடியும்? கோவலன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து மதுரைக்குச் சென்று விடுகிருன் என்று கூறிக் கதையை முடிக்க விரும்பவில்லை, நம் இளங்கோ. மிகவும் சாதாரணமான கதையை, நிகழ்ச்சிகளே இல்லாத ஒரு குடும்பச் சித்திரத்தை அவர் நெஞ்சை அள்ளும் ஒரு தீஞ்சுவைக் காப்பியமாக்கித் தந்துள்ளார். காலஞ் சென்ற பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை போன்ற சில்லோர் "இது கட்டுக் கதை" என்று கூறும் அளவுக்குப் புனைந்து விடுகிருர்.

கனத்திறமுரைத்த காதையில் தேவந்தியை நமக்கு அறிமுகப்படுத்தி வைதிகராகக் காட்சி அளிக்கும் இளங்கோ, நாடுகாண் காதையில், கவுந்தி அடிகளை நமக்கு அறிமுகப் படுத்திச் சமணராகத் தோற்றமளிக்கிருர். அதுமட்டு மன்றிக் காவிரிப்பூம்பட்டினத்தைவிட்டு மதுரை செல்லும் போது இயற்கை அறிவுக்கு ஏலாத சில நிகழ்ச்சிகள் காணப் பெறுகின்றன. இவற்றை ஆங்கிலத்தில் இயற்கைக்குப் புறம்பான* நிகழ்ச்சிகள் என்று கூறுவர். இயற்கைக்குப் புறம்

*Supernatural Elements*

பான நிகழ்ச்சிகளை ஆங்கிலக் கவிஞனான ஷேக்ஸ்பியரின் நாடகங்களிலே காணலாம். ''மேக்பத்தில்'' சூனியக்காரி களின் வருகையும் செயலும் இயற்கைக்கு அப்பாற்பட்டவை கள். அதுபோலவே, ''ஹாம்லெட்'' என்ற நாடகத்தில் பேய் வருவது இயற்கைக்கு அப்பாற்பட்டதாகவே கருதப் படுகிறது. இந்த இயற்கைக்கு மாறான நிகழ்ச்சிகள் இல்லை யானால் அந்நாடகங்களுக்கு உயிரோட்டமே இருந்திருக் காது. நாடுகாண் காதையில் தொடங்கும் இயற்கை இகந்த நிகழ்ச்சிகள் கடைசியிலுள்ள வரந்தரு காதையில் கண்ணகி யைக் கண்டவர்களெல்லாம் கைகூப்பி வணங்கும் தெய்வ மாக்குகின்றன. இதுவரை மந்த கதியில் ஓடிய கதை இப் பொழுது தீவிரம் மேற்கொண்டு நம்மைத் திகைக்க வைத் துச் செல்லுகிறது.

இந்நிகழ்ச்சிகளால் இளங்கோவடிகள் என்ன சமயத்த வர் என்ற வாதமும் சிலருடைய நினைவில் எழுந்துள்ளது இவ்வொரு நிகழச்சியைக் கொண்டே இந்நூலாசிரியர் சம ணர் என்று திரு. வையாபுரிபிள்ளை போன்றவர்கள் கூறுகின் றார்கள். கண்ணகியின் கதையைச் சாதாரணமான ஒருவன் கூறியிருப்பானானால் அது ''இராமக்கோனார் பெண்டாட் டியை இராவணக்கோனார் தூக்கிச் சென்றார்; அனுமந்தக் கோனார் அடித்துப் பறித்து அவளை மீட்டு வரச்செய்தார்'' என்ற கதையைப் போலத்தான் அமைந்திருக்கும். கதை யின்மேல் சட்டமும் இம்முறையில்தான் அமைந்திருக்கிறது. ஆனால் கவிஞன் நாம் காணாதவற்றைக் காணும் திறம் படைத்தவன்; அவனுடைய கண்கள், பூவுலகுக்கும் வானுல குக்கும் மாறி மாறிச் செல்லும்; அதன் காரணமாக ஒன்று மில்லாத பொருள் அமரத்துவம் அடைந்து விடும்; இந்த அற்புதத்தைத்தான் இங்கு நாம் காணுகிறோம்.

சாதாரணப் பெண்ணான கண்ணகியைக் காளியின் அவ தாரமாக்கி, பாண்டியன் மகளாகச் சிறந்து அவனைப் பழி தீர்க்குமளவிற்கு மக்கள் கற்பனை செய்யுமாறு அவருடைய நூல் இடம் தந்துவிட்டது. இதற்கெல்லாம் காரணம்,

இளங்கோவடிகள் கையாண்ட இயற்கைக்குப் புறம்பான காட்சிகள்தாம். ஆனால், ஷேக்ஸ்பியரைக் காட்டிலும் அடிகள் அவைகளை மிகவும் அழகு பெறச் செய்திருக்கிறார். அதனைப் பின்னர்க் காண்போம்.

இனி, செல்வமும் சீரும் இழந்து சிதைந்த உள்ளத்தோடு வந்த கோவலனை நோக்கிக் கண்ணகி தனது காற்சிலம்புகளைப் பெற்றுக் கைப்பொருளாக வைத்துக் கொள்ளுமாறு சொன்னாள். அவ்வாறே சிலம்புகளைப் பெற்ற கோவலன் கண்ணகியையும் அழைத்துச்கொண்டு காவிரிப்பூம்பட்டினத்தை நீங்கி மதுரைக்குச் செல்ல முடிவுசெய்தான். 'குடைநிழல் இருந்து குஞ்சரம் ஊர்ந்த' கோவலன் இப்பொழுது 'நடைமெலிந்து ஒரூர்' நண்ணினான். குடிப்பெருமையும், குன்றாச் செல்வமும் படைத்துக் கோலாகல வாழ்க்கை நடத்திய தன் சொந்த நகரத்திலேயே தன் கண்ணினும் சிறந்த கண்ணகியின் காற்சிலம்புகளை விற்று வாழ மனம் வருமா? உற்றார் உறவினர் நண்பர் யாவரும் அறியாதவாறு பல காவதங்கள் கடந்து சென்று பாண்டியன் தலைநகரமாகிய மதுரை நகர் நோக்கித் தன் மனைவியுடன் நடந்தான்.

கோவலனும் கண்ணகியும் காவிரிப்பூம்பட்டினத்தை விட்டுப் புறப்பட்ட நேரம் வைகறைப் பொழுதாகும். வானத்தில் ஒளிவிட்டுத் திகழ்ந்த முழுமதி மறைந்து பகலவன் தோன்றுதற்கு முன் உள்ள இருள் மயங்கிய காலம். இதனைச் சிலப்பதிகாரம்,

''வான்கண் விழியா வைகறை யாமத்து
மீன்திகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
காரிருள் நின்ற கடைநாள் கங்குல்
ஊழ்வினை கடைஇ உள்ளம் துரப்ப''

எனச் சித்திரித்துள்ளது. இவ்வாறு முகம் தெரியாத இருள் மயங்கிய நேரத்தில் புறப்பட்ட கோவலனும் கண்ணகியும் வரும் வழியில் பல்வேறு கோயில்களையும் கடந்து வருகிறார்கள். இங்கு ஒன்று சிந்திக்கவேண்டும். இளங்கோவடிகள்

தன் காப்பியத்துள் எங்கெங்கு வாய்ப்புக் கிடைக்குமோ அங்கங்கு எல்லாம் விடாது இறைவன் கோயிலேயும் வேறு கடவுளர்களின் ஆலயங்களேயும் வரிசையாகச் சொல்லிச் செல்வதில் மிகுந்த ஆவல் உள்ளவராகக் காணப்படுகிருர். இது அடிகளின் மனநிலேயைத் தெளிவாகக் காட்டுகிறது. நிறைந்த கடவுட்பற்று உள்ளவர் அவர் என்பதற்கு இது தக்க சான்ருகும். மணிவண்ணன் கோட்டம், இந்திர விகாரம், சமணப்பள்ளி முதலிய இடங்களேக் கடந்து, காவிரி யாற்றின் வடகரை வழியே மேற்கு நோக்கி நடந்து வருகிருர்கள் கோவலனும் கண்ணகியும். இதனேக்,

> ''காவிரி வாயிற் கடைமுகம் கழிந்து
> குடதிசைக் கொண்டு கொழும்புனற் காவிரி
> வடம்பெரும் கோட்டு மலர்ப்பொழில் நுழைந்து
> காவதம் கடந்து''

என அடிகள் அறிவிக்கின்ருர். இவ்வாறு வந்து கொண்டிருந்த காவிரிப்பூம்பட்டினத்துத் தம்பதிகள் வழியில் இருந்த தவச்சாலே ஒன்றை அடைந்தனர். அது கவுந்தி அடிகளின் உறைவிடம். பயணம் மேற்கொண்ட இவர்கள் முதன்முதல் கவிந்தியடிகளேச் சந்தித்தனர்.

நம் நாட்டில் பல காலத்தில் பல சமயங்கள் தோன்றித் தத்தம் கொள்கைகளேப் பரப்பின. அன்பும் அறமும் மறந்த காலத்தில் மக்களே மதிமயங்கச் செய்தன பல சமயவிதிகள். நல்லார் அனேவரும் துன்பப்படுவதும், கெட்டவர்களெல்லாம் நன்மை பெறுவதும் நாளும் நிகழத் தொடங்கின. இதனேக் கண்டு மெய்யன்பர்கள் வருந்தினர். சிந்தனேயாளர்களின் எண்ணத்திலே ஒரு திருப்பம்—மறுமலர்ச்சி—பிறந்தது. உலகில் புரட்சி தொடங்கியது. சிந்தனே உலகத்தில் அந்நாள் எழுந்த புயலின் காரணமாகத் தோன்றியவைகள் தாம் சைன புத்த சமயங்கள். ''ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்'' என்பதைக் கண்ட மகான்கள் துறவு மேற்கொள்ளச் சொன்னுர்கள். இவ்வாறு நிலவிய சமயங்களி

டையே வைதிக சமயத்திலோ, சைவ சமயத்திலோ பெண்கள் துறவு மேற்கொள்ள இடமில்லை. புத்த சைன சமயங்களில் தான் துறவு நெறியுரிமை பெண்மக்களுக்கும் வழங்கப்பட்டிருந்தது. இதுபோலவே பின்னர் வந்த சமயமான கிறிஸ்துவமும் பெண்களின் துறவைத் துணைக்கொண்டன. இதனுல் சைனப் பெண் துறவிகள் அந்நாளில் தமிழ் நாட்டில் இருந்து வந்தனர்.

கோவலனும் கண்ணகியும், வைகறைப் பொழுதிலே பிறர் அறியாவாறு மதுரை நோக்கிப் போகிருர்கள். அவர்கள் மதுரை சென்று அடையக் குறைந்தது இருபது நாட்களாவது வேண்டும். இந்நிலையில், செல்வக் குடியில், பலர் சூழ இருந்த அவர்கள் இருவரும் தனிமையாகச் செல்கின்ருர்கள் எனின், பல இன்னல்களுக்கு உள்ளாகக்கூடும்.பெண்கள், பெண் துணையின்றி இருப்பதும் பொருத்தமல்ல. ஆகையால் கதையோட்டத்தை மிகைப்படுத்தி உச்சநிலைக்குக் கொண்டுவர எண்ணிய இளங்கோ சைனத் துறவியாகிய கவுந்தியடிகளை நம்முன் கொணர்ந்து நிறுத்துகிருர். இளங்கோவடிகள், பற்றற்ற மனம் படைத்தவர். அவருக்குச் சமய வெறி கிடையாது. ஆயினும் ஒரு சைன சமயத் துறவியைக் கண்ணகிக்குரிய பெண் துணையாக அமைக்கின்ருராதலால், அதற்கேற்ப அப்போது நிலவிய சைன சமயக் கோட்பாடுகளை நாம் அறிய விரித்துரைக்கின்ருர். இங்கே, ஒரு புத்த பிக்குணியைக் காட்டலாமே எனின், அந்நாளில் புத்தம் தொண்டை நாட்டிலும் அதற்கு வடக்கிலுமே பரவியிருந்தது. அதனுல்தான் அடிகள் சைனத் துறவியாகிய கவுந்தியடிகளைக் கொணர்ந்து காட்டுகின்ருர்.

கவுந்தி அடிகளைக் கண்டு கோவலனும் கண்ணகியும் அடிவணங்கி நின்றனர். அவர்களுடைய நிலையையும் தோற்றத்தையும் கண்ட கவுந்தி அடிகளுக்கு மிகுந்த ஐயமும் திகைப்பும் ஏற்பட்டன. அழகும், உயர்குடிப் பிறப்பும், ஒழுக்கமும் நன்கு அமையப் பெற்றவளாய்க் காணப்படும் இவர்களுக்கு இந்நிலைமை வரக் காரணம் என்ன? தீவினை

யாளர்களன்றோ செல்வமிழந்து ஏக்கமுற்று நிலை தடுமாறி வருந்துவர் என எண்ணமிடலானார்.

கவுந்தி அடிகளுக்கு இவ்வெண்ணங்கள் மேலிடவே அவர்களையே கேட்டுவிடுகிறார். "மகனே! மாநகரம் விட்டுக் காடுகளிலும் மலைகளிலும் மனைவியுடன் செல்லும் துணிவு எவ்வாறு வந்தது? உன் வரலாறு முழுதும் கூறுக" எனக் கேட்டார் கவுந்தி அடிகள். கோவலன் தன் வரலாறு முழுதும் கூற மிகவும் நாணினான். ஆயினும் சுருக்கமாகப் பொருளீட்டும் நோக்கத்தோடு மதுரை மூதூருக்குப் புறப்பட்டேன் என்று மட்டும் கூறினான். கோவலன்,

"காவுந்தி யையையைக் கண்டடி தொழலும்
உருவும் குலனும் உயர்பே ரொழுக்கமும்
பெருமகன் திருமொழி பிறழா நோன்பும்
உடையீ ரென்னோ உறுக ணாளரின்
கடைகழிந்து இங்ஙனம் கருதியவாறு, என;
உரையாட்டில்லை, உறுதவத்தீர் யான்
மதுரை மூதூர் வரைபொருள் வேட்கையேன்"

எனக் கோவலன் கூறுகின்றான். பொருள் ஈட்டச் செல்லும் தலைவன் தன் மனைவியை உடன்கொண்டு செல்லுதல் தமிழர் வழக்கமல்ல; செல்வ மகளான கண்ணகியின் செம்பஞ்சு போன்ற அடிகள், பருக்கைக் கற்கள் அடர்ந்த காட்டு வழியில் நடக்கவிடுவது தகுதியுமல்ல. ஆனால் ஊழ் வினையால் உருத்தப்பட்ட மக்கள் இவர்கள் என்பதைத் தான் நாம் எண்ணவேண்டும். ஆகையால், 'உரியதன்று; ஈங்கு ஒழிக என ஒழியீர்; ஊழ் என்ன செய்யுமோ; அதனை அறிவார் யார்"—என்று கூறிக் கவுந்தியடிகள் அமைகிறார்.

கோவலன் கண்ணகியாகிய இருவரிடத்தும் அடிகளுக்கு எல்லையில்லாத இரக்கம் உண்டாயிற்று. கவுந்தியும் அவர்களைக் காணும் முன்பே அருக தேவனை ஏத்துதற்கு மதுரை செல்ல வேண்டுமென்றிருந்தாள். இத்தருணத்தில் புறப்பட்

டால் கோவலன் கண்ணகிக்குத் துணையாயிருக்கக் கூடு மென்று கருதி உடனடியாகத் தானும் புறப்படுவதாகத் தெரிவித்தாள். பெண்துணை இல்லாமல் இதுகாறும் வருத்தம் அடைந்த கண்ணகிக்கு இது மிக்க ஆறுதலைத் தந்தது. கவுந்தியடிகளின் துணை ஒரு பெரும் பேருக வாய்த்தது எனக் கோவலன் மகிழ்ந்தான்.

''பாடகச் சீரடி பரற்பகை யுழவா;
காடிடை யிட்ட நாடுநீர் கழிதற்கு
அரிது இவள் செவ்வி; அறிகுநர் யாரே,
உரியதன்று ஈங்கு ஒழிக என ஒழியீர்,
மறவுரை நீத்த மாசறு கேள்வியர்
அறவுரை கேட்டு ஆங்கு அறிவனை யேத்தத்
தென்றமிழ் நாட்டுத் தீதுதீர் மதுரைக்கு
ஒன்றிய உள்ளம் உடையேன்; ஆதலின்
போதுவல் யானும், போதுமின்''

என்று கவுந்தியடிகள் உரைக்கின்ருர்.

கோவலன், கவுந்தி அடிகளைக் கைதொழுது ஏத்தி, ''அடிகளே! நீங்கள் எங்களுடன் வரும்போது நாங்கள் ஒரு துன்பமுமில்லாமல் மதுரை சென்று சேர்வோம். இளையவளான இக்கண்ணகியின் துன்பமெல்லாம் மறைந்துவிடும்'' என்ருன். கவுந்தி அடிகள் இதற்குப் பதிலாகக் ''கோவலனே, நீ இதனை அறியாய்! இந்த வழியிலே செல்லும்போது பல விதமான துன்பங்கள் வரும். அதனைக் கேட்பாயாக'' என்று தொடங்கி, மதுரைக்குச் செல்லுகின்ற காட்டுப் பாதையிலே உள்ள பலவகைத் துன்பங்களையெல்லாம் கோவலனுக்கு விரித்துரைக்கின்ருர்.

பெண்கள் மிகவும் மெல்லிய இயல்புடையவர்கள். அவர்கள் இல்லத்திற்கே உரியவர்கள் என்ற காரணத்தால் இல்லாள் எனப் பெயர் கொண்டார்கள். பலவிதமான துன்பங்களையும் தாங்கும் இயல்புடையவன் ஆண்மகன். இன்னல்களை எல்லாம் புன்முறுவலுடன் பொறுத்துக் கொண்டு

செம்மையாக வாழ்ந்த காரணத்தால் செம்மல் எனவும் பெயர் பெற்ருன். கரடு முரடான காட்டுப் பாதையிலே, கோவலனுகிய செம்மல் நடந்து செல்வது தகுதிதான். ஆனல் பூங்கொடி போன்ற செல்வியான கண்ணகி, வழித் துணையின்றி நடந்து செல்வது தகுதியும் முறையும் அன்று. காடுகளிலே செல்ல வேண்டுமானுல் மிகவும் பாதுகாவ லுடன்தான் செல்ல வேண்டும். அங்கு வள்ளிக்கிழங்கு தோண்டிய குழிகளை மண் போட்டு நிரப்பாமல் விட்டுவிடு வார்கள். குழிகள் தெரியாதபடி அதில் சண்பகப் பூக்கள் உதிர்ந்து மூடி நிற்கும். தவறி அங்கே கால் வைத்தால் கால் உள்ளே சென்றுவிடும். குழிகளை விட்டு ஒதுங்கிச் செல்வோமென்ருல் ஒரு பக்கம் பலாப்பழம் முட்டும். வயல் வழியிலேனும் செல்வோமென்ருல் வயலின் குறுக்கே வாளைமீன் பாயும் வேகத்தைக் கண்டு அஞ்சும் நிலைமை ஏற்படும்.

வயல் வாய்க்கால் கரைகளின்மேல் நடந்தால் அங்கே தேனுண்டு மயங்கிக் கிடக்கும் வண்டுகளின் மீதோ நண்டு நத்தை ஆகிய சிற்றுயிர்களின் மீதோ அடிமிதித்து நடக்க நேரும். அதனுல் பாவம் ஏற்படும். இவ்வாறு, வழி நடப்ப தால் ஏற்படும் கொடுமைகளைக் கவுந்தி அடிகள் விரிவாக எடுத்து உரைக்கலுற்று,

வெயினிறம் பொருஅ மெல்லியல் கொண்டு
பயில்பூந் தண்டலைப் படர்குவம் எனினே
மண்பக வீழ்ந்த கிழங்கு அகழ் குழியைச்
சண்பகம் நிறைத்த தாதுசோர் பொங்கர்
பொய்யறைப் படுத்துப் போற்ரு மாக்கட்குக்
கையறு துன்பம் காட்டினும் காட்டும்;
உதிர்பூஞ் செம்மலின் ஒதுங்கினர் கழிவோர்
முதிர்தேம் பழம்பகை முட்டினும் முட்டும்,
மஞ்சளும் இஞ்சியும் மயங்கரில் வலயத்துச்
செஞ்சுளைப் பலவின் பாற்பகை யுறுக்கும்

என்று கூறினுர்.

காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து மதுரைக்குச் செல்லும் வழியின் தன்மையைக் கூற முற்பட்ட கவுந்தியடிகள் முதலில் சோலைகளின் சிறப்பை விரிவாக எடுத்துரைத்துப் பின்னர் வயல்களைப் பற்றிக் கூறுகின்றார். காப்பிய ஆசிரியராகிய இளங்கோவடிகள், கோவலன் கண்ணகி ஆகியோருக்கு வழி கூறும் வாயிலாகச் சோழ நாட்டின் மருதநில வளப்பத்தையும் அங்கே நிலவிய சமண சமயக் கொள்கையையும் கண்ணகியின் மென்மைத் தன்மையையும் ஒருங்கே சித்திரித்துக் காட்டும் புலமைச் செய்கையை மேற்கொள்ளுகின்றார். சிலப்பதிகாரத்தில் இப்பகுதியைப் படித்துப் பார்க்கும் போது ஆசிரியர் இளங்கோவடிகளின் இயற்கை நூல் புலமையையும் அவரது பரந்த மண்ணியற் கலை அறிவையும் *Geo-physical study)* நாம். பாராட்டாமல் இருக்க முடியாது. மேல்நாட்டு இயற்கை நூற் புலவராகிய (*Nature Poet* வேர்ட்ஸ் வொர்த் முதலியவர்களைப் போலவே நம் இளங்கோவடிகளும் தமிழகத்தின் பல்வேறு இடங்களையும் நேரில் கண்டு அறிந்து கூறியுள்ளார் என்பது இப்பகுதியைப் படிக்கும்பொழுது நன்கு புலனாகும்.

இனிக் கவுந்தியடிகள் சோழ நாட்டின் வயல் வளத்தைக் காண்போம். மதுரைக்குச் செல்லும் நெடுஞ்சாலை (*Trunk Road*) காவிரியின் கால்கள் பாயும் கழனிகளின் ஊடே செல்கின்றது. அவ்வழியில் பல குளங்களும் நீர் நிலைகளும் காணப்படுகின்றன. அவற்றில் நீர்ப் பூக்கள் மணம் வீசி நிற்கின்றன. கயல் வாளை மலங்கு முதலிய மீன்கள் கலந்து வளர்கின்றன. நீர்நாய்கள் பல அங்கு வாழ்கின்றன. கயல் மீன்கள் ஒன்றோடு ஒன்று மோதி விளையாடுகின்றன. வாளை மீன்கள் நீர் நாய்களின் பிடிக்குச் சிக்காமல் வேகமாகத் தாவி நெடுஞ்சாலையின் மறுபுறமுள்ள வயல்களில் பாய்கின்றன. இச்செயல் வழிச் செல்வோரைத் தடுத்து நிறுத்தும் தன்மையுடையதாக உள்ளது. இதனைச் சிலப்பதிகாரம்

'பூநாறு இலஞ்சி பொருகயல் ஓட்டி
நீர்நாய கௌவிய நெடும்புற வாளை

மலங்குமிளிர் செறுவின் விலங்கப் பாயின்
கலங்கலும் உண்டு'

எனச் சித்திரிக்கின்றது. இவ்வடிகளால் ஆசிரியர் வழி அச்சம் கூறுகின்றார்.

இப்பகுதியைக் கடந்து சென்றால் இடையறாது ஓங்கி வளர்ந்த கரும்புச்சோலைகளைக் காணலாம். அக்கரும்புகளில் பொருந்தியிருக்கும் தேன்கூடுகள் அழிந்து கீழே வடிகின்றன. இவ்வாறு வடிந்து வரும் தேன் பக்கத்தில் உள்ள தூய்மையான குடிதண்ணீரில் கலக்கின்றது. வழியில் நடந்து செல்வோர் நீர் வேட்கையால் தேன்கலந்த நீரினை உண்ணக் கூடும். இதனை,

''கரும்பில் தொடுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்புசூழ் பொய்கைத் தூநீர் கலக்கும்
அடங்கா வேட்கையின் அறிவனர் எய்திக்
குடங்கையின் நொண்டு கொள்ளவும் கூடும்''

என்று புகழ்கிறது சிலப்பதிகாரம். சமணத்துறவியாகிய கவுந்தி அடிகள் கோவலனையும் கண்ணகியையும் பார்த்துத் தேன் கலந்த நீரினை உண்ணுதல் தகாது எனக் கூறுவது கவனிக்கத்தக்கது. தேன் அருந்தலாகாது என்பது சமணக் கொள்கைகளில் ஒன்றாகும். இக்கொள்கையை வழிநடைக் காட்சியில் வைத்துக் கவுந்தியடிகள் கூறும் முறை மிகவும் நயமாக உள்ளது.

இதனையும் கடந்து செல்லும்பொழுது வயல்களில் உழத்தியர் களைபறிக்கும் காட்சி எதிரே தோன்றுகிறது. அவர்கள் வயல்களின் நடுவே முளைத்துள்ள குவளை முதலிய பூக்களைப் பறித்து வரப்புக்களில் போடுகிறார்கள். புள்ளிகளோடு கூடிய வண்டினங்கள் அக்குவளையில் கசிந்துள்ள தேனுடன் மயங்கிக் கிடக்கின்றன. அவ்வழியே நடந்து செல்வோர் களைப்பினால் அறியாது அவ்வண்டினத்தின் மீது கால்வைத்து

நடப்பர். அப்பொழுது அவை இறந்துபடுவதால் பெரும் வேதனையைத் தரவல்ல கொலைப்பாவம் சூழ்ந்துவிடும்.

''குறுநர் இட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினனம் பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞர் எய்தி
அறியாது அடியாங்கு இடுதலும் கூடும்''

என்பது சிலப்பதிகாரம். இவ்வடிகள் கொல்லாமையை வற்புறுத்துகின்றன. திருவள்ளுவனாரும்

''நல்லாறு எனப்படுவது யாதுஎனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி''

என்று அருளினர். இவ்விடத்தை நீங்கிச் சென்றால் சிறிது தூரம் வாய்க்கால்களின் கரை வழியே செல்ல வேண்டும். புது நீர் வழிந்து ஓடும் அவ்வாய்க்கால்களின் கரைகளில் நண்டுகளும் நத்தைகளும் இயங்கும். வழியில் நடந்து செல்வோர் அவற்றின் மீது நடந்தே செல்ல வேண்டும். அப்படிச் செல்வதால் அவை பொறுக்க முடியாத பெருந்துன்பத்தை அடையும்; அதனால் மக்களின் மனமும் வேதனை அடையும். இதனை,

''எறிநீர் அடைகரை இயக்கம் தன்னில்
பொறிமாண் அலவனும் நந்தும் போற்றாது
ஊழடி ஒதுக்கத்து உறுநோய் காணில்
தாழ்தரு துன்பம் தாங்கவும் ஒண்ணா''

என ஆசிரியர் அறிவுறுத்தியுள்ளார். இவ்வாறு கவுந்தி அடிகள் தனது சமயக் கோட்டுபாடுகளைக் கோவலனுக்கும் கண்ணகிக்கும் உணர்த்தினர். இதுவரை கூறப்பட்ட பகுதியால் கண்ணகி நடந்து செல்ல வேண்டிய வழியின் அருமைப்பாடும் சோழநாட்டு மருதநிலச் சிறப்பும் நன்கு விளங்கும்.

மதுரைக்குப் புறப்பட்ட கோவலனும் கண்ணகியும் அவர்கள் செல்லும் வழியின் அருமையை அறிந்தவர்கள்

அல்லர். கவுந்தி அடிகள், மதுரைக்குச் செல்லும் வழியில் ஏற்படும் துன்பங்களை யெல்லாம் எடுத்துக் கூறி அதனை நீக்கு வதற்காகத் தானும் உடன் புறப்பட்டனர். இராமனுடன் காட்டிற்குச் சென்ற சீதைபோல், கண்ணகியும் கோவல னுடன் சென்றாள். சீதை அரண்மனையில் பிறந்தவள்; கண்ணகி அரசர்க்கு ஒப்பான செல்வப் பெருங் குடியில் பிறந்தவள். ஆண்டிலும் இளையவள். தான் வாழும் செல்வ மனையையும் நீங்கி வெளியே சென்று பழகியவளல்லள். அவளது "வண்ணச்சீறடி மண்மகள் அறிந்திலள்" என இளங்கோ கூறுகின்றார். கோவலனோ, பல்வேறு ஊர்களுக்கு வாகனமேறிச் சென்றவனேயன்றி வழிநடையாகச் சென்ற வனல்லன். கவுந்தி அடிகளோ முதுமையாலும் கடுந்தவத் தாலும் இளைத்தவர். இத்தகைய மூவரும், காவிரிப் பூம்பட் டினத்தைநீங்கி மதுரை வரையுள்ள தொலைவழியைநடந்தே செல்லவேண்டும். செல்லவேண்டிய தூரமோ முப்பது காவதம்; ஏறக்குறைய நூற்றி எண்பது மைல். இந்நிலையை மனதில் எண்ணும்போதே நமக்கு வருத்தமும் பரிவும் உண் டாகின்றன. இதனைக் காப்பியத்தில் தீட்ட முனைந்த இளங் கோவடிகள் அவர்களது வழிநடை வருத்தத்தைப் போக்க, ஓர் அழகிய சித்திரத்தை வரைந்துள்ளார். மலைகளும் காடு களும் பொருந்திய மதுரையின் எல்லையை அவர்கள் மிதிப் பதற்கு முன் சோழநாட்டின் எல்லைவரை உள்ள வயல் முத லியவற்றின் வளங்களை வரிசையாக எடுத்துரைக்கின்றார். சோழ நாட்டின் உயிர்நாடி காவிரிதான். இதனை அவர் மறுக்கவில்லை. ஆதலின் காவிரி ஆற்றின் சிறப்பு முதலில் கூறப்படுகிறது.

மறைந்திருக்க வேண்டிய சனியாகிய கோள் இடம் பெயர்ந்து பகை வீட்டில் நுழைந்தாலும், தூமகேது தோன்றினாலும், வெள்ளியாகிய கோள் தான் நிற்பதற்குரிய வடதிசையின் நீங்கித் தென்முகமாகப் பயணம் செய்தாலும் இத்தகைய உற்பாதங்கள் வேறு என்ன நிகழ்ந்தாலும் பருவக் காற்றின் உதவியால் மேகங்கள் தொடர்ச்சியாகப்

பரந்து சென்று குடமலையில் வெள்ளப் பெருக்கை உண்டாக்குகின்றன. அதனால் காவிரியாற்றில் இடையறாது புதுநீர் ஓடிய வண்ணம் இருக்கும். அந் நீர்ப் பெருக்குக் கரையோரங்களில் அமைந்திருக்கும் வீடுகளின் கதவுகளில் மோதுவதால் உண்டாகும் ஒலிப்பெருக்கைத் தவிர பிற ஒலிகள் அங்கு எழுவதில்லை. இதனை,

குடமலைப் பிறந்த கொழும்பல் தாரமொடு
கடல்வளன் எதிரக் கயவாய் நெரிக்கும்
காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை
ஒவிறந்து ஒலிக்கும் ஒலியே அல்லது
ஆம்பியும் கிழாரும் வீங்கிசை ஏத்தமும
ஓங்குநீர்ப் பிழாவும் ஒலித்தல் செல்லாக்
கழனிச் செந்நெற் கரும்புசூழ் மருங்கு

என்று சிலப்பதிகாரம் கூறும். இப்பகுதியால் நம் தமிழ் முன்னோர் வானத்துக்கோள்களின் நிலையிலிருந்து மழை முதலியவற்றை அறியும் வான நூல் புலவர்களாய் இருந்தனர் என்பது அறியத்தக்கதாகும். இடைக்காலத்தில் நம்நாடு தன்னாட்சி இழந்துவிட்ட காரணத்தால் மக்கள் தத்தம் கலைகளைப் போற்றாது ஒழிந்தனர். அதனால்தான் மேலைநாட்டு மெருகுடன் வரும் கலைகளை எல்லாம் புதியன என நினைந்து மருள்வராயினர்.

இதுவரை நீர்வளம் கூறிய அடிகள் இனிப் பல்வேறு பறவைகளின் இயல்புகளையும் எடுத்துரைக்கின்றார். சண்பங் கோழி, கனைகுரல் நாரை, செங்கால் அன்னம், பசுங்கால் கொக்கு. காட்டு கோழி, நீர்க்காக்கை, உள்ளான் பெரு நாரை முதலியவை பகை வேந்தர் இருவர் போர்க்களத்தில் சந்தித்து ஆரவாரிப்பது போலப் பல்வேறுபட்ட ஒலிகளைக் கிளப்பி ஆரவாரித்து நின்றன.

கம்புட் கோழியும் கனைகுரல் நாரையும்,
செங்கால் அன்னமும், பைங்கால் கொக்கும்,
கானக் கோழியும் நீர்நிறக் காக்கையும்
உள்ளும் ஊரலும் புள்ளும் புதாவும்,

வெல்போர் வேந்தர் முனையிடம் போலப்
பல்வேறு குழூஉக்குரல் பரந்த ஓதையும்

என்பது சிலப்பதிகாரம்.

இங்கே கூறப்பட்ட காட்சிகளேயன்றி, கரியபெரிய எருமைகள், உழாமலேயே சேறுபட்டிருந்த இடங்களுக்குச் சென்று அங்கு வேயப்பட்டிருந்த நெற்போரின் கண் அவைகளுடைய முதுகினல் உராய்ந்து கொண்டன. அதனுல் நெல்லரிகளிலிருந்து மணிகள் சிந்திச்சிதறின. இதனையடுத்து மற்றொருபுறம் உழவர் பெண்கள் நறுமணம் வீசும் ஆம்பல் முதலிய நீர்ப்பூக்களைப் பறித்துக் கரையிலே எறிந்தனர். அவ்வாறு பறிக்கப்பட்ட விடங்களில் நெல் நாற்றை முடி முடியாகப் பறித்து வந்து பகிர்ந்து நட்டனர். அப்பொழுது அம்மகளிரது உடல் முழுதும் சேறுபடிந்து ஒருதனி அழகினைத் தந்து கொண்டிருந்தது. இவ்வாறு, நாள் முழுதும் அயராது வேலைசெய்த காரணத்தால் அம்மகளிர் களைப் பெய்திக் கள்ளுண்டு இசைபாடி மகிழ்ந்தனர். அவ்விசை நிகழ்ச்சியின் இடையில் அம்மகளிர் ஒருவருக்கொருவர் சேற்றினை வாரியிறைத்து ஆரவாரம் செய்வாராயினர் இதனைச் சிலப்பதிகாரம்,

"கடிமலர் களைந்து முடிநாறு அழுத்தித்
தொடிவளைத் தோளும் ஆகமும் தோய்ந்து
சேறுடு கோலமொடு வீறுபெறத் தோன்றிச்
செங்கயல் நெடுங்கண் இன்மொழிக் கடைசியர்
வெங்கள் தொலைச்சிய விருந்தின் பாணியும்"

என்று வருணித்துள்ளது.

நாற்று நடும் காட்சி இவ்வாறிருக்க வயலின் மற்றொருபால் உழவர்கள் ஏர்களில் நெற்கதிர் மாலையைத் தொடுத்து ஏரைப்பூட்டி ஏர் மங்கலப்பாட்டுப்பாடி மகிழ்ந்திருந்தனர். இவ்வாறு வயலுழுவோரை வாழ்த்தும் பொருட்டுத் தடாரி என்னும் தோற்கருவியையுடைய பொருநர் முழக்கம்செய்து அவர்களுக்கு ஊக்கமும் ஆக்கமும் ஊட்டினர். இதனை,

விளங்கு கதிர் தொடுத்த விரியல் சூட்டிப்
பாருடைப் பனைர்போல் பழிச்சினர் கைதொழ
ஏரோடு நின்ருர் ஏர்மங் கலமும்
தெண்கிணைப் பொருநர் பெருக்குடன் எகுத்த
மண்கணை முழவின் மகிழிசை ஓதையும்

என்பது சிலப்பதிகாரம்.

மேற்கூறிய பல அழகிய காட்சிகளெல்லாம் காவிரி ஆற்றின்கரை மருங்கே கண்டு வருகின்றனர். கவுந்தியடிகளும் கோவலனும் கண்ணகியும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் இத்தகைய பல்வேறு இயற்கைக் காட்சிகளை இடைவிடாது காண்கின்ருராகையால் அவர்களுக்கு இயல்பாக இருக்க வேண்டிய வருத்தம் களைப்பு முதலியன இல்லாது ஒழிந்தன.

வேள்விச் சாலையின்கண் ஆகுதி வளர்க்கும் அந்தணர் இருப்பிடங்களையும், பரிசிலர்களையும் பாராளும் வேந்தர்களையும் ஒருங்கே காப்பாற்றிவரும் காவிரியின் துணையால் சோழ நாட்டினர் வயலில் முற்றிய கரும்பைக் கண்டமாக்கிக் காய்ச்சுதலால் மேகம்போல் எழும் புகைமண்டலத்தோடு கூடிய பல்வேறு செழிப்புமிக்க ஊர்களையும் பார்த்துக்கொண்டே அவர்கள் பலநாட்கள் மெதுவாக ஒரு காத தூரமே நடந்து ஆங்காங்கே தங்கி மதுரை நோக்கி வந்து கொண்டிருந்தனர்.

இளங்கோவடிகள் சமணர் என்பதற்குப் பலர் பல ஆதாரங்களைக் கூறிவருகின்றனர். நாடுகாண் காதையிலே நாம் சமணக்கொள்கைகளின் விரிவுரைகளைக் கேட்கிருேம். வரலாற்று ஏடுகளை எழுதப்புகுந்த மேலைநாட்டு அறிஞர்கள் சமணம், 'இந்து சமயத்தின் தான்தோன்றிப் பிள்ளை' *(Rebel Child)* என்று கூறுகின்ருர்கள். இந்து சமயத்திலே, பல கட்டுப்பாடுகளும் திட்டங்களும் மக்களை வருத்தின போது தான் சமணம் தோன்றியது. அந்நாளில் மக்களிடையே ஒரு விழிப்புணர்ச்சி தோன்றியது. நாட்டில் மின்

விசையைப் போல் எண்ணச் சுழல்கள் தோன்றத் தொடங்கின. அவைகள் புயலைக் கிளப்பத்தான் செய்தன. அந்தப் புயல்கள் தாம் சமணமும் புத்தமும். சமய எழுச்சியைப் புரிந்துகொண்ட இந்துக்கள், அந்தச் சமயத்தில் உள்ள நல்லனவற்றை எல்லாம் தமதாக்கிக் கொண்டனர். அதனால், நம்நாட்டில் சமணமும் புத்தமும் வெவ்வேறு சமயங்கள் என்று அரசியல்வாதிகள் கருதினும் மக்களிடையே வேறுபாடுகளை ஏற்படுத்தவில்லை. ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்ற பரந்த கொள்கையை உடைய தமிழர்கள், சமய வேறுபாடின்றி வாழும் நற்குணம் படைத்தவர்கள். ஆகையால்தான் இன்றும், இந்துக்கள் முகமதியர்மசூதிகளுக்குப் போய் ஆராதனை செய்வதும், இசுலாமானவர்கள் முருகன் கோயிலுக்குப் போவதும் நாம் நாளும் காண நிகழ்ந்து கொண்டு இருக்கின்றன. அன்னியர் ஆட்சி நிலவிய போது சிலர் இப்பரந்த மனப்பான்மையை வளர விடாது செய்து வந்தார்கள். சமணக்கடவுளான கோமுத்தீசுவரருக்கு மைசூர் மன்னர் பக்தியுடன் சென்று அபிஷேகம் செய்வதை நாம் சரவணபெலகோலா என்னுமிடத்தில் காணுகின்றோம். அநேக சமண ஆலயங்களில் இந்துக்களே பூசை முதலியவைகளைச் செய்வதை நாம் இன்றும் காணலாம். சமணர்கள் இந்துக் கோவிலில் வழிபடுவதும், இந்துக்கள் சமணர்கள் கோவில்களில் சென்று ஆராதனை செய்வதும் தொன்று தொட்ட வழக்கமாகவேயிருக்கின்றன. தன் கை குத்திவிட்டதே என்று யாரும் கையை வெட்டி விடமாட்டார்கள். அது போலத் தன் குழந்தையாகிய சமணம் தன்பால் குற்றம் காட்டியதே என்று இந்துசமயம் அதை விலக்கவில்லை. சமணத்தில் கூறிய கோட்பாடுகளை எடுத்தாண்ட எல்லோரையும் சமணர் என்று கூறுவது வழக்கமாகிவிட்டது. "மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்' என்பது வள்ளுவர் கூறுவது. அதுபோலவே, அடிகளும் "மலர்மிசை நடந்தேன்" என்று கூறுகிறார். எண் குணத்தான் என்று இளங்கோவடிகள் கூறுவதுபோலவே, திருவள்ளுவரும் கூறியுள்ளார். இவ்வாறே சைவ நாயன்மார்களும் கூறியுள்ள

னர். இதனுல், வள்ளுவரையும் இளங்கோவையும் பிறரை யும் சமணர் என்று கூறுவது எவ்வளவு பெரிய குற்றம் என் பதைச் சிந்திக்க வேண்டும். இனிச் சிலப்பதிகாரத்தைத் தொடர்வோம் :—

பன்னுள் தங்கிச் செல்நாள் ஒரு நாள்
ஆற்றுவீ அரங்கத்து வீற்றுவீற்ருகிக்
குரங்கமை யுடுத்த மரம்பயி லடுக்கத்து
வானர் உறையும் பூநாறு ஒரு சிறைப்
பட்டினப் பாக்கம் விட்டனள் நீங்காப்
பெரும்பெயர் ஐயர் ஒருங்குடன் இட்ட
இலங்கொளிச் சிலாதலம் மேலிருந்தருளிப்
பெருமகன் அதிசயம் பிறழா வாய்மைத்
தருமம் சாற்றும் சாரணர் தோன்றப்
பண்டைத் தொல்வினை பாறுக என்றே
கண்டறி கவுந்தியொடு காலுற''

வீழ்ந்தனர்.

இந்த மருதவளக் காட்சிகளைக் கண்டுகொண்டே கோவலனும் கண்ணகியும் கவுந்தியடிகளோடு நடந்துவந்து திரு அரங்கத்தை அடைந்த அவர்கள் அங்கிருந்த சோலை ஒன்றில் தங்கினர். அரங்கம் என்பது ஆற்றின் நடுவில் அமையும் தீவு; வடநூல்கள் இத்தகைய அரங்கங்களை இலங்கை என்று கூறும்.

அப்பொழுது அவ்விடம் வந்த சாரணர்களாகிய சமண முனிவர்களைத் தொழுது அவர்கள் உரைத்த அறவுரை களைக் கவுந்தியடிகள் கேட்டனர். பின்னர் கவுந்தியடிகள் அருகதேவனை நாவார வாழ்த்தினர்.

''ஒருமூன்று அவித்தோன் ஓதிய ஞானத்
திருமொழிக்கு அல்லது என் செவியகம் திறவா:
காமனை வென்றேன் ஆயிரத்து எட்டு
நாமம் அல்லது நவிலாது என் நா;

ஐவரை வென்ருேன் அடியிணை அல்லது
கைவரைக் காணினும் காணு என் கண்''

என்று இவ்வாறு வாழ்த்தியபின் அம்மூவரும் ஓடம் ஏறிக் காவிரியாற்றின் தென்கரையை அடைந்து அங்கு ஒரு பூஞ் சோலையில் தங்கினர். அப்பொழுது பரத்தை ஒருத்தியும், தூர்த்தன் ஒருவனும் அச்சோலைக்கு வந்தனர். வந்தவர்கள் தவமுதாட்டியாகிய கவுந்தியடிகளைப் பார்த்து, 'காமனும் இரதியும் போல் காணப்படும் இவர்கள் யார்?' என்று கேட்டனர். அதற்கு அடிகள் அவ்விருவரும் என் மக்கள் என்று பதில் கூறினுர். உடனே அக்கீழ் மக்கள், 'எல்லாம் அறிந்த தவப் பெருமாட்டி, ஒரு வயிற்றில் பிறந்தவர்கள் கணவனும் மனைவியும் ஆகி வாழ்க்கை நடத்துவதா? அது முறையோ?' என்று கேட்டனர்.

''மக்கள் காணீர் மானிட யாக்கையர்
பக்கம் நீங்குமின் பரிபுலம்பினர்என
உடன் வயிற்ருேர்கள் ஒருங்குடன் வாழ்க்கை
கடவதும் உண்டோ கற்றறிந்தீர்''

என்பது சிலப்பதிகாரம்.

இவ்வாறு தூர்த்தனும் பரத்தையும், கோவலனையும் கண்ணகியையும் இகழ்ந்து பேசியதால், கண்ணகி நடுங்கிக் கோவலனுக்கு முன்னுல் தனது இரு காதுகளையும் கைகளால் பொத்தி நின்றனள். கண்ணகியின் நடுக்கத்தைக் கண்டு பொருத கவுந்தியடிகள் அக்கீழ்மக்கள் இருவரையும் நரி களாகுமாறு சாபம் இட்டனர். அவ்வாறே அவர்கள் நரி களாக மாறி ஊளையிட்டுத் திரிந்தனர். அக்கீழ்மக்களது அறியாமைக்கு இரங்கிய கோவலனும் கண்ணகியும் கவுந்தி யடிகளை நோக்கி அவர்களது சாபத்தைத் தீர்த்து அருளு மாறு வேண்டினர். இதனைச் சிலப்பதிகாரம்,

''நறுமலர்க் கோதையும் நம்பியும் நடுங்கி
நெறியின் நீங்கியோர் நீரல கூறினும்

அறியா மையென்று அறியல் வேண்டும்;
செய்தவத்தீர் நும் திருமுன் பிழைத்தோர்க்கு
உய்திக் காலம் உரையீரோ''

என்று கூறும். அவர்கள் வேண்டுகோளை உளங்கொண்ட கவுந்தியடிகள் பன்னிரண்டு மாதம் கழிந்த பின்னர் அவர்கள் மீண்டும் மானிட உருவம் பெறுவார்கள் என்று சாப நீக்கம் செய்தருளினர். பின்னர்க் கவுந்தியடிகள் கோவலனையும் கண்ணகியையும் அழைத்துக்கொண்டு உறையூரின் உள்ளிடத்தே புகுந்து இருந்தனர்.

''சா விடை செய்து தவப்பெரும் சிறப்பின்
காவுந்தி ஐயையும் தேவியும் கணவனும்
முறஞ்செவி வாரணம் புக்கனர் புரிந்தென்''

எனக் கூறிச் சிலப்பதிகாரம் புகார்க் காண்டத்தை முடிக்கின்றது.

# 13. மதுரைப் பெருவழி

கண்ணகியும் கோவலனும், கவுந்தி அடிகளுடன், நாடு நகரங்களைக் கடந்து, காட்டுவழியாக மதுரைக்குச் செல்லத் தொடங்கினர். மதுரை என்றால், இனிமை என்று பொருள். ஆனால் தென்மதுரையின் தென்றலை அவர்கள் நுகர்ந்தார்களில்லை. இதற்குக் காரணம் விதி என்று கூறுவார்கள். கண்ணகிக்குக் கோவலனே உட்பகைவனாகி அவளுக்குப் பல இடர்களைத் தந்துவிடுகிறான். காடுகாண் காதையில்தான் கோவலன், தன் குற்றங்களை எல்லாம் நினைந்து நினைந்து வருந்துகின்றான். மதுரைக்குச் செல்லுமுன் நாம், கோவலன், கண்ணகி, மாதவி ஆகிய மூவரின் சீரிய பண்பாடுகளை அறியும் வாய்ப்பைத் தந்துவிடுகிறார் அடிகள்.

மதுரைக்கு மற்றொரு பெயர் நான்மாடக்கூடல். அந்தக் கூடல் நகரத்திலே, பல பெரிய வாயில்கள் அமைந்திருந்தன. அதனை வடமொழியாளர்கள் கபாடம் எனக் கூறுவர். ஆகையால்தான் வான்மீகியார் மதுரையைக் கபாடபுரம் என்று அழைக்கின்றார். ஒரு காலத்தில் தென்னாட்டு வேந்தர்களே வடநாடு சென்று தங்கள் ஆட்சியை நிறுவினர் என்று கந்தபுராணம் கூறுகின்றது. சிபி மன்னன் சோழ அரசர்களில் மிகச் சிறந்தவன் என்றும், அவன் மனுவின் வழிவந்தவன் என்றும், இராமனுக்கு முன்னோன் என்றும் பௌராணிகம் கூறுகிறது. மச்ச புராணம் பாண்டிய நாட்டு வையைக் கரையில் மனுச் சோழன் தவம் செய்ததாகவும் கடல் தமிழ் நாட்டைக் கொண்டவுடன் அவனை வடநாட்டிற்குத் திருமால் கொண்டு சென்றதாகவும் சொல்லு

கிறது. இந்த உண்மையை உணர்த்துவது வேண்டி, அடி களும், தென்னாட்டு மன்னவர்களே வடநாடு சென்று ஆண்டார்கள் என்று கூறுகிறார். பல உண்மைகளைக் குறியிருப்பதால் காடுகாண் காதை சிறப்புப் பெற்ற ஒன்றாகும்.

மூன்று சந்திரன்களை ஒன்றாக அடுக்கினாற்போல உள்ள முக்குடையின் கீழ் அறிவாகிய சூரியன் போன்று விளங்கும் உறையூர் சீகோயில்நாதரையும் சிகந்தன் பள்ளியையும் தரிசித்துவிட்டு, பின்னர் அதிகாலையில் மூவரும் செல்லத் தொடங்கினர். இங்கு இளங்கோவடிகள் ஒரு பழங்கதையைக் கூறுகின்றார். முன் காலத்தில் கடல் அரசனுக்கும் பாண்டிய மன்னனுக்கும் பெரும்பகை எழுந்தது. பாண்டிய மன்னன் வேலெறிந்து அந்தக் கடலரசனை வென்றான். அந்தப் பகையின் காரணமாகக் கடல் கொந்தளிக்கத் தொடங்கியது. அப்பொழுது குமரிமுனை இருக்குமிடத்தில் குமரி என்ற ஒரு மலை இருந்தது. அதன் பக்கத்தில் பஃறுளி ஆறு ஓடிக் கொண்டிருந்தது. கடலின் கொந்தளிப்புத் தாங்காது, குமரி மலையும் பஃறுளி ஆறும் கடலில் மூழ்கின. மதுரையம்பதி வரையில் கடல் நிலத்தைக் கொள்ளத் தொடங்கவே பாண்டிய நாட்டையும் இமயமலைச் சாரலையும் வென்று அரசாண்டனர். இதை நம்மால் முதலில் நம்ப முடியவில்லை. மச்ச புராணமும் கந்த புராணமும் பிற புராணங்களும் இவ்வுண்மையைக் கூறினும், நாம் அதைப் புராணம் என்று ஒதுக்கித் தள்ளி விடுவோம். ஆனால் இன்கூ மேலை நாட்டு ஆராய்ச்சியாளரும் இவ்வுண்மையை ஒப்புக்கொள்ளத் தொடங்கி உள்ளனர். ஆகையால்தான், சிபிச் சக்கரவர்த்தியின் பின்னோரான இராமனும் கண்ணனும் தமிழர்கள் என்று புராணங்கள் கூறுகின்றன. இமயங் கண்ட தமிழன், கடாரம் சாவகம் முதலான நாடுகளெல்லாம் சென்று தன் நாகரிகத்தையும் பண்பாட்டையும் பரப்பினான்.

"திங்கள் மூன்றடுக்கிய திருமுக்குடைக் கீழ்ச்
செங்கதிர் ஞாயிற்றுத் திகழொளி சிறந்து

கோதைதாழ் பிண்டிக் கொழு நிழல் இருந்த
ஆதியில் தோற்றத்து அறிவனை வணங்கிக்
கந்தன் பள்ளிக் கடவுளர்க் கெல்லாம்
அந்தில் அரங்கத்து அகன்பொழில் அகவயின்
சாரணர் கூறிய தகைசால் நன்மொழி
மாதவத் தாட்டியும் மாண்புற மொழிந்து ஆங்கு
அங்கவர் உறைவிடத்து அல்கினர் அடங்கித்
தென்றிசை மருங்கில் செலவு விருப்புற்று
வைகறை யாமத்து வாரணம் கழிந்து
வெய்யவன் குணதிசை விளங்கித் தோன்ற.
வளநீர்ப் பண்ணையும் வாவியும் பொலிந்ததோர்
இளமரக் கானத் திருக்கை புக்குழி
வாழ்க எங்கோ மன்னவர் பெருந்தகை

என்று கூறிக்கொண்டே வந்திருந்த மாடலன் என்ற அந்தணன் ஒருவனைக் கோவலனும் கண்ணகியும் கண்டனர். அவன் அழகுடன் விளங்கிய இளமரக்கா ஒன்றினில் தங்கி இருந்தான். அவன் சேர நாட்டிலுள்ள மாங்காடு என்ற ஊரிலிருந்து புறப்பட்டு மதுரையைக் கடந்து பாண்டிய நாட்டின் வளங்களையும், மன்னருடைய சிறப்புக்களையும், கண்டும் கேட்டும் மகிழ்ச்சி மிக்கவனுய்ச் சிறிது இளைப்பாறும் பொருட்டுத் தங்கினுன். அவ்விடத்தே கோவலன் முதலிய மூவரும் தங்கியிருந்தனர். அவன் பாண்டியனை வாயார வாழ்த்தினன்.

"பாண்டியன் பிற மன்னர்களினும் பெருந்தன்மையுடையவன். அவனது முன்னேனுகிய வடிம்பலம்நின்ற பாண்டியன் கடலினது சிற்றத்தைத் தனது வேலாலும் காலாலும் அடக்கி ஆண்டவன். மற்றெரு பாண்டியன் இந்திரனுடைய மார்பில் விளங்கிய ஆரத்தைப் பெற்றுத் தான் பிறந்த பாண்டியர் குலத்தின் மேன்மையை நிலைநாட்டியவன். இன்னெருவன் வருணனை அடக்கி நாடெல்லாம் மழை வளம் மிகும்படிச் செய்தவன். இத்தகைய சிறந்த மரபில் தோன்றிய பாண்டியன் நெடுஞ்செழியன் பல்லாண்டு

வாழ்ந்து பாராள வேண்டுமென்று வாயார வாழ்த்திக் கொண்டிருந்தான் அம் மறையவன்.

''திங்கட் செல்வன் திருக்குலம் விளங்கச்
செங்கண் ஆயிரத்தோன் திறல் விளங்கு ஆரம்
பொங்கொளி மார்பில் பூண்டோன் வாழி
முடிவளை உடைத்தோன் முதல்வன் சென்னியென
இடியுடைப் பெருமழை எய்தாது ஏகப்
பிழையா விளையுள் பெருவளம் சுரப்ப
மழை பிணித்து ஆண்ட மன்னவன் வாழ்க''

என்கின்றான் மாடலன்.

பாண்டியனைப் பாராட்டிப் புகழ்ந்த மாடலனைப் பார்த்துக் கோவலன்'' உங்கள் ஊர் எது? நீர் இங்கு வந்த காரணம் யாது?'' என்று கேட்டான். அதற்கு மறையோன் திருவரங்கத்தில் திருமாலின் ''கிடந்த வண்ணமும், திரு வேடகத்தில் அவனது ''நின்ற வண்ணமும்'' காணவிரும்பி இத்துணைக் காவதம் நடந்துதான் வந்ததாகக் கூறினான். உடனே கோவலன் மதுரைக்குச் செல்லும் வழியையும் அதன் தன்மையையும் கேட்டான். உசாவிய கோவலனுக்கு மறையவன் வழி கூறும் வாயிலாகப் பாண்டியனது காட்டு வளம் முதலியவற்றை விளக்குவானாய்,

''விரிதிரைக் காவிரி வியன்பெரும் துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்
வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை
பொலம்பூ ஆடையின் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்
என்கண் காட்டு என்று என் உளம் கவற்ற வந்தேன்''

என்று கூறினான்.

கோவலன் மாங்காட்டு மறையோனிடத்தில் மதுரைக்குச் செல்லும் வழியின் இயல்பைக் கேட்டான். மறை

யோன்கோவலனைப் பார்த்தான். அவர்கள் பயணம் செய்யும் முறையை ஆலோசித்து அதற்குரிய காலத்தின் தன்மையை விளக்கலுற்றான். அமைச்சர்களுடன் ஆலோசித்து முறை செய்யத் தவறும் அரசனது கொடுங்கோன்மையால் துன்பம் அடையும் நாட்டைப்போல, வேனிற்காலமாகிய அமைச்சருடன் கொடிய கிரணங்களையுடைய சூரியனாகிய அரசன் பொறுக்க முடியாத வெயிலைத் தருதலால் காடும் காடு சார்ந்த முல்லை நிலமும், மலையும் மலைசார்ந்த குறிஞ்சி நிலமும் தத்தம் இயல்புகளை இழந்து தம்மை அடைந்தோரை நடுங்கச் செய்யும் தன்மையோடு கூடிப் பாலை என்னும் வடிவத்தை மேற்கொள்ளும்படியான இக்காலத்தில், மெல்லியளாகிய கண்ணகியும், நல்லாளாகிய கவுந்தியும், கோவலனும் பயணம் மேற்கொண்டார்களே என்று வருந்திக் கூறுகின்றான். இந்நிலையை வருணிக்கும் இளங்கோவடிகள் மிக்க நயம் பொருந்துமாறு,

''கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி
வேத்தியல் இழந்த வியனிலம் போல,
வேனலம் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
தான்நலம் திருகத் தன்மையில் குன்றி
முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து
நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவம் கொள்ளும்
காலை எய்தினிர் காரிகை தன்னுடன்''

என்று பாடியிருப்பது காணத்தக்கது.

இவ்வாறு கோவலனைப் பார்த்து இரக்கம் தோன்றக் கூறிய மறையோன், இனி மதுரை செல்லும் வழி பற்றிய செய்திகளைக் கூறத் தொடங்குகிறான். உறையூரில் இருந்து தெற்கே புறப்பட்டு வந்தால் ஒரு நீண்ட பெரிய சாலை *(Highway)* மதுரையை நோக்கிச் செல்லும். அவ்வழியே சிறிது சென்றதும் கொடும்பாளூர் என்னும் ஊர் குறுக்கிடும். அக்கிராமத்தின் அருகில் பெரிய ஏரி ஒன்று உண்டு. அவ்வேரியின் மருங்கே சென்று கரை ஏறினால் சிவபெருமா

னுடைய சூலப் படைபோல மூன்று வழிகள் பிரிந்து போகும். அம்மூன்று வழிகளுள், வலப்பக்கத்து வழியே நடந்து சென்றால், வெண்கடம்பு ஓமை மூங்கில் முதலிய மரங்கள் பசுமை நீங்கி உலர்ந்து நிற்கும். நீர்நிலைகள் எல்லாம் வறண்டு கிடக்கும்; இவ்விடங்களைக் கடந்து சென்றால் மலைநெல் இலையுதிர்ந்த கணுக்களையுடைய கரும்பு, தினை, வரகு, வாழை, கமுகு, மஞ்சள், காயம், மா, பலா முதலிய மரங்களும் நிறைந்த பாண்டியனது சிறுமலை விளங்கித் தோன்றும். அம்மலையை வலமாகக் கொண்டு மேலும் நடந்து சென்றால், பாண்டியனது தலைநகரமாகிய மதுரை மாநகர் தோன்றும். இது ஒரு வழி. இதனை அடிகள்

அலறுதலை மராமும் உலறுதலை ஓமையும்
பொரியரை உழிஞ்சிலும் புல்முளி மூங்கிலும்
வரிமரல் திரங்கிய கரிபுறக் கிடக்கையும்
நீர்நசைஇ வேட்கையின் மான்நின்று விளிக்கும்
கானமும் எயினர் கடமும் கடந்தால்
ஐவன வெண்ணெலும் அறைக்கண் கரும்பும்
கொய்பூந் தினையும் கொழும்புன வரகும்
காயமும் மஞ்சளும் ஆய்கொடிக் கவலையும்
வாழையும் கமுகும் தாழ்குலைத் தெங்கும்
மாவும் பலாவும் சூழடுத் தோங்கிய
தென்னவன் சிறுமலை திகழ்ந்து தோன்றும்

என வருணித்துள்ளார்.

இவ் வலப்பக்கத்து வழியில் செல்ல விரும்பாவிட்டால் இடப்பக்கமாக மற்றொரு வழி மதுரைக்குச் செல்லுகிறது. அவ்வழியில் வயல்களையும் சோலைகளையும் காடுகளையும் கடந்து சென்றால் எதிரில் திருமால் உறையும் அழகர்மலைத் தோன்றும். அம்மலையில் மக்களின் மயக்கத்தைப் போக்கும் பிலம் ஒன்று உண்டு. அப்பிலத்தில் புண்ணிய சரவணம், பவகாரணி, இட்டசித்தி என்ற பெயர்களையுடைய மூன்று பொய்கைகள் உண்டு. அவற்றில் மூழ்கி எழுந்தால், ஐந்திர

நால், பழம் பிறப்புணர்ச்சி, இட்டசித்தி (விரும்பியதை அடைதல்) ஆகியவற்றை எய்தலாம். இவை அல்லாமல் பிற வியத்தகு நிகழ்ச்சிகளும் அங்கு நிகழும். இவ்வாறு கோவலனுக்கு மாங்காட்டு மறையோன் இடப் பக்கமாகச் செல்லும் வழியை விவரித்தான். இதனை இளங்கோவடிகள்,

செவ்வழிப் பண்ணின் சிறை வண்டு அரற்றும்
தடந்தாழ் வயலொடு தண்பூங் காவொடு
கடம்பல கிடந்த காடுடன் கழிந்து
திருமால் குன்றத்துச் செல்குவிராயின்
பெருமால் கெடுக்கும் பிலமுண்டு: ஆங்கு
விண்ணோர் ஏத்தும் வியத்தகு மரபின்
புண்ணிய சரவணம் பவகாரணியோடு
இட்ட சித்தி யெனும் பெயர் போகி
விட்டு நீங்கா விளங்கிய பொய்கை''

என்று கூறுவர்.

புண்ணிய சரவணமென்ற பொய்கையில் மூழ்கி எழுந்தால், இந்திரன் எழுதிய ஐந்திரம் என்ற நூலின் உட்பொருளை அறிவீர்கள். பவகாரணி என்ற பொய்கையில் நீர் ஆடினால், உங்கள் பழம் பிறவி பற்றிய செய்திகளை அறிவீர்கள். இட்டசித்தி என்னும் நீர்நிலையில் படிவீர்களேயானால், நீங்கள் மனத்தில் எண்ணிய எல்லாவற்றையும் தடையின்றி அடைவீர்கள். இப்பகுதி

புண்ணிய சரவணம் பொருந்துவி ராயின்
விண்ணவர் கோமான் விழு நூல் எய்துவிர்
பவகாரணம் படிந்து ஆடுவிராயின்
பவகாரணத்தின் பழம் பிறப்பு எய்துவீர்
இட்டசித்தி எய்துவி ராயின்,
இட்ட சித்தி எய்துவிர் நீரே''

எனவரும்.

இவற்றைக் கடந்து பிலத்தின் உள்ளே நுழைய விரும்பு வீர்களேயானல், அம்மலையில் வாழும் தெய்வம் ஒன்று தோன்றி, அங்கு அடைபட்டிருக்கும் கதவு ஒன்றினைத் திறக்கும். அங்கிருந்து மாட்சிமைப்பட்ட மதுரைக்குச் செல்லும் நீண்ட சாலை ஒன்று உண்டு; அதில் செல்வீராக. இவ்வழி இரண்டாம் வழி.

மாடலனுகிய மறையவன், கோவலன் முதலியவர் களுக்கு இவ்விரண்டு வழிகளைப் பற்றிச் சொல்லி இவ்வி ரண்டு வழிகளும் அவர்களுக்குப் பிடிக்கவில்லை என்றால், இவற்றைவிடச் சிறந்த மூன்றாவது வழி ஒன்று உண்டு என்று கூறத் தொடங்கினன்.

மாண்புடை மரபின் மதுரைக்கு ஏகுமின்
காண்டகு பிலத்தின் காட்சி யீது; ஆங்கு
அறநெறிப் படரீராயின் இடையது
செந்நெறியாகும்

என்பது அவன் கூற்று.

சோழர் பேரூராகிய உறையூரிலிருந்து, மதுரை நோக் கிப் புறப்பட்ட கோவலன், கண்ணகி, கவுந்தி அடிகள் ஆகி யோர் மாங்காட்டு மறையோன் கூறிய இரண்டு வகைப் பட்ட வழிகளின் அருமைகளை எல்லாம் நன்கு கேட்டுக் கொண்டனர். தான் கூறிய வழியில் செல்ல அவர்கள் விரும்பவில்லை என்பதைக் குறிப்பால் உணர்ந்து கொண்ட மறையவன், இவ்விரண்டு வழிகளுக்கும் இடையிலே உள்ள மூன்றாவதாகிய நேர்வழியைப்பற்றிக் கூறத் தொடங்கி ஞன். அந்த நேர்வழியில் தேன்கசியும் நறுமணமுள்ள மலர்ச் சோலைகள் பல ஒன்றன்பின் ஒன்றாகக் காட்சியளித் தன. அச்சோலைகளைக் கடந்து சென்றால், செந்நெல்லும் கரும்பும் விளையும்படியான வளமான வயல்களும், வரகு முதலிய தானியங்களை வரையாது வழங்கும்படியான காடு களும் காணப்படும். பச்சைப் பாம்பு சூல்கொண்டாற் போன்று, செழித்து வளர்ந்திருக்கும் படியான நெற்பயிர்

களைக் கண்டு இன்பம் அடைந்த இம்மூவரும், முல்லை நில மாகிய காட்டுவழியே செல்லுகின்றபோது, வெயிலின் வெப்ப மிகுதியாலும், தொலை வழியாலும் பெருந்துன் பத்தை அடைந்தார்கள். இப்படிப்பட்ட தன்மையது மது ரைக்குச் செல்லும் பெருவழி: மேலும் அவ்வழியிலே, வழிப் போக்கரைத் தடுத்து நிறுத்தும்படியான தெய்வம் ஒன்று உறைகிறது. தடுத்து நிறுத்தினாலும் வழிப்போக்கர்களுக்கு அது ஒரு தீங்கும் செய்யாது. இவ்வழியை வருணிக்க வந்த இளங்கோவடிகள்,

அந்நெறிப் படரீர் ஆயின் இடையது
செந்நெறியாகும்; தேம்பொழில் உடுத்த
ஊரிடை இட்ட காடுபல கடந்தால்,
ஆரிடை உண்டு ஓர் ஆரஞர்த் தெய்வம்;
நடுக்கம் சாலா நயத்தின் தோன்றி,
இடுக்கண் செய்யாது இயங்குநர்த் தாங்கும்
மடுத்துடன் கிடக்கும் மதுரைப் பெருவழி

என்று கூறுகிறார்.

மாமறையோன், மதுரையின் பலவழிகளையும் கூறக் கேட்ட கவுந்தி அடிகள், அவனை நோக்கி "நன்மை செய்யும் படியான நல்ல கொள்கைகளையுடைய மாங்காட்டு மறை யோனே, நீ கூறிய பிலத்தில் நாங்கள் செல்ல வேண்டும் என்ற தேவையில்லை. அங்கே சென்றால் நாங்கள் அறியக் கூடிய ஐந்திர நூலின் பொருளை எங்கள் சமயத்திலேயே நாங்கள் அறிந்து கொள்ளுகிறோம். பவகாரணி என்ற பொய்கையில் சென்று குளித்தால் பழம் பிறப்பு நிகழ்ச்சி களை அறிந்து கொள்ளலாம் என்றாய். அதுவும் எங்கள் கொள்கைக்கு ஒவ்வாதது. ஏனென்றால் இவ்வுலகத்தில் இப் பிறப்பில் நாம் அனுபவிப்பதை வைத்துக்கொண்டே நம் பழம் பிறப்பு எப்படி இருந்திருக்கும் என்பதை நன்கு ஊகித்துக் கொள்ளலாம். இட்டசித்தி என்ற குளத்தில் மூழ்கினால் நினைத்ததெல்லாம் பெறலாம் என்றாய்; அதுவும்

நகைப்புக்கு உரியதே. பொய் பேசாது பிற உயிர்களைப் பாது காத்து வாழும் பெரியோர்கள் இவ்வுலகத்தில் நினைத்தால் எதைத்தான் பெற முடியாது. பொய்யாமை பொய்யாமை ஆற்றின், அறம பி . செய்யாமை செய்யாமை நன்று'' என்பது தேவர் வாக்கல்லவா? ஆகவே நீ நினைத்துவந்த தெய்வத் தைத் தொழுதற்கு நீ செல்க. நாங்கள் இந்த நெடுவழியில் பயணம் செல்லுகின்றோம்'' என்று கூறினர்.

''நலம்புரி கொள்கை நான்மறை யாள,
பிலம்புக வேண்டும் பெற்றி ஈங்கில்லை,
கப்பத்து இந்திரன் காட்டிய நூலின்
மெய்ப்பாட்டு இயற்கையின் விளங்கக் காணாய்
இறந்த பிறப்பின் எய்திய எல்லாம
பிறந்த பிறப்பில் காணாயோ நீ
வாய்மையின் வழாது மன்னுயிர் ஓம்புநர்க்கு
யாவதும் உண்டோ எய்தா அரும்பொருள்?
காமுறு தெய்வம் கண்டடி பணிய
நீ போ; யாங்களும் நீள்நெறிப் படர்குதும்

என்பது சிலப்பதிகாரம்.

இவ்வாறு கவுந்தி அடிகள் கூறியதிலிருந்து தெய்வத் தன்மை பொருந்திய குளங்களில் நீராடுதல் போன்ற புறக் கோலங்களால் மட்டும் எதனையும் சாதிக்க முடியாது; புறம்போல உள்ளமும் தூய்மைப்பட வேண்டும் என்ற உயரிய கொள்கை விளங்குகின்றது. திருவள்ளுவ நாயனாரும் ''புறம் தூய்மை நீரான் அமையும்; அகம் தூய்மை, வாய்மை யால் காணப்படும்'' என்பர். ஆசிரியர் இளங்கோவடிகள், தம் காப்பியத்துள் சமயம் வாய்க்கும்போதெல்லாம் திருக் குறட் பாக்களுக்கு விரிவுரை சொல்லிப் போவது வழக்கம்.

மறையோன் நீங்கிய பின்னர், அம்மூவரும், அவன் கூறிய பெருவழியில் நடந்து சென்றார்கள். வழிநடை வருத்தத்தால் கண்ணகியும் கவுந்தி அடிகளும், அவ்வழியி லுள்ள மரநிழலில் ஒதுங்கி இருந்தனர். தாகமெடுத்த

கோவலன் ஓர் ஒற்றை அடிப்பாதையின் வழியாகச் சென்று, அங்கிருந்த ஒரு குளத்தை அடைந்தான். அப்பொழுது, கோவலன் அறிந்த வயந்தமாலை உருவத்துடன், அந்த இடத்தில் உறையும் காட்டுத் தெய்வம் தோன்றியது. கோவலனுடைய அடிகளிலே விழுந்து, அத்தெய்வம், ''மாதவி அனுப்பிய ஓலையை நான் தங்களிடம் அப்படியே கொடுத்தேன்; அதனைப் பார்த்து வெறுப்புக் கொண்டு, என்னையும் வெறுங்கையுடன் அனுப்பினீர்; மாதவி மழை போலக் கண்ணீர் சொரிந்து துயர்மிகுந்து என்னையும் வெறுத்துத் துரத்தினள்; அதன் பின்னர் நான் வேறு கதியின்றி அலைந்து திரிந்தேன்; ஒருநாள் வழிப்போக்கர் சிலரால் நீங்கள் கண்ணகியோடு மதுரை செல்லுகின்றீர்கள் என்று கேள்விப்பட்டு உங்களைத் தேடி வந்தேன்; நான் உங்கள் அடைக்கலம்'' என்றது. பிறருக்கு இல்லாத சிறந்த பண்பை உடையவன் என்று அந்தத் தெய்வம், கோவலனைச் சிறப்பித்துக் கூறி மயக்க முயன்றது. ஆனால் கோவலன் காடுறை தெய்வத்தைப்பற்றி அறிந்திருந்தானாதலின், அவன் மனம் கலங்காது ஒரு மந்திரத்தைச் செபிக்க அத்தெய்வம் அவனைவிட்டு அகன்றது. அகலுமுன் கண்ணகிக்கும் கவுந்தி அடிகளுக்கும் தன் செயல் பற்றிச் சொல்லாதிருக்குமாறு வேண்டியது. கற்பின் வலிமை நிறைந்த கண்ணகியும், தவவலிமை பெற்ற கவுந்தி அடிகளும் தன்னைச் சபித்து விடாது இருக்க வேண்டும் என அஃது அஞ்சியதே இதற்குக் காரணம். இதனை அடிகள்,

> நீர் நசைஇ வேட்கையின் நெடுந்துறை நிற்பக்
> கானுறை தெய்வம் காதலின் சென்று
> நயந்த காதலின் நல்குவன் இவனென
> வயந்த மாலை வடிவில் தோன்றி
> கோவலன் செய்தான் கொடுமை என்று என் முன்
> மாதவி மயங்கி வான்துயர் உற்று
> மேலோ ராயினும் நூலோ ராயினும்
> பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும்

பிணியெனக் கொண்டு பிறக்கிட் டொழியும்
கணிகையர் வாழ்க்கை கடையே போன்ம் எனச்
செவ்வரி ஒழுகிய செழுங்கடை மழைக்கண்
வெண்முத்து உதிர்த்து வெண்ணிலாத் திகழும்
தண்முத்து ஒழுகாழ் தன்கையால் பரிந்து
துனியுற்று என்னையும் துறந்தன ளாதலின்

என்று கூறுகின்றார்.

பல அரிய காட்சிகளைக் கண்டபின், மூவரும் நெற்றிக் கண்ணையுடைய குமரியும் விண்ணோர் பரவும் பாவையும் குற்றமற்ற சிறப்பினை உடையவளுமாகிய ஐயை கோட்டத்தைச் சென்று அடைந்தனர். இதனை,

விழிநுதற் குமரி விண்ணோர் பாவை
மையறு சிறப்பின் வான நாடி
ஐயைதன் கோட்டம் அடைந்தனராங்கென்

என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

இளங்கோவடிகள், கோவலனும் கண்ணகியும் சாதாரண மக்கள் அல்லர் என்பதை எடுத்துக் காட்டவும் பின்னர்க் கண்ணகியைத் தெய்வமாக்கும் நோக்கத்தை வலியுறுத்தவும் இங்கும் காடுறை தெய்வத்தைப் புகுத்தியுள்ளார். இஃது இயற்கைக்குப் புறம்பானதாயிருந்தாலும், கதை ஓட்டத்திற்கு ஒரு தடையும் செய்யவில்லை என்பதை மனதிற்கொள்ள வேண்டும். இத்தெய்வம் வராவிட்டாலும் கதையில் ஏதும் மாற்றம் ஏற்படாது. இதனைப் பின்னர் ஆராய்வோம்.

# 14. வேட்டு வரி

ஐயை கோட்டமாகிய கொற்றவையின் கோயிலே அடைந்த கோவலன், கண்ணகி, கவுந்தி அடிகள் ஆகிய மூவரும், அக்கோயிலின் ஒரு பக்கத்திலே பிறர் காணுதவாறு ஒதுங்கி இருந்தனர். அந்நெடுவழியிலே கொடிய வெயிலில் வந்தவளாகையால், கண்ணகியின் செவ்விய அடிகள் சிவந்து போயின. அவள் மேலும் நடக்க முடியாமல் பெருமூச்சு விட்டு நின்றுள். இதனை இளங்கோவடிகள்,

கடுங்கதிர் திருகலின் நடுங்குதுயர் எய்தி
ஆறுசெல் வருத்தத்துச் சீறடி சிவப்ப
நறும்பல் கூந்தல் குறும்பல உயிர்த்தாங்கு
ஐயை கோட்டத்து எய்யா ஒருசிறை

என்று கூறுகின்றுர்.

கண்ணகியின் வாழ்க்கை வரலாறு மிகச் சுருக்கமானது. கோவலன் அவளுடன் நடத்திய வாழ்க்கையை விரித்துக் கூற அடிகளுக்கு அவகாசம் ஏற்படவில்லை. மதுரைக்குச் செல்லும் வழியிலும் அவர்களுடைய வாழ்க்கை மலரவில்லை. ஏறத் தாழ நூற்று அறுபது கற்கள் கல்லிலும் முள்ளிலும் நடந்து மதுரை வந்து சேர்ந்தனர். எனக் கூறிக் கதையை ஒருவாறு முடித்திருக்கலாம். ஆனுல், இளங்கோவடிகள் மிகவும் சாதாரணமான கதையை நெஞ்சைஅள்ளும் கதையாகக் கவி ஓவியமாக வடிக்கும் திறனைத்தான் நாம் வேட்டுவ வரிகளிலே காணுகிறேம்.

அவர்கள் கொற்றவை கோயிலில் தங்கியிருந்தபொழுது அங்கு வாழ்ந்து வந்த வேடர் குலத்தில் தோன்றிய சாலினி ஒருத்தி தெய்வமருள் கொண்டு ஆடத்தொடங்கினாள். தெய்வம் ஏறி ஆடிய அவள் மறக்குடியிலே பிறந்த மடந்தை. வழிப்பறிசெய்தல் சூறையாடுதல் முதலியவற்றைத் தமது வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டவர்கள் மறவர்கள். அவர்கள் ஆண்டுதோறும், தமது வெற்றிக்கு அதி தேவதையாக விளங்கும் கொற்றவையாகிய துர்க்கைக்கு விழா நடத்திப் பரவுக்கடன் முதலிய செய்யும் வழக்கமுடையவர்கள். இத்தகைய குலத்தில் பிறந்த சாலினி தெய்வ ஆவேசம் கொண்டாள். கொண்டவள் உடம்பெல்லாம் சிலிர்க்கத் தனது கைகளைத் தலைமேல் தூக்கி நிறுத்தி வேடர்கள் வியப்புக் கொள்ளும்படி முள்வேலியால் வளைக்கப்பட்ட ஊர்ப் பொது மன்றத்தில் வந்து நின்றாள்.

"நம் பகைவரது ஊர்களில் பல நாட்கள் கொள்ளை முதலியன நடைபெறுமையால் பசுக்கள் நிறைந்து காணப்படுகின்றன. வலிமை பொருந்திய வில்லைக் கையில் ஏந்தி அம்பெய்து வழிப்பறி கொள்ளை கொலை முதலியன செய்து பெரும் பொருளையும் பசு முதலிய விலங்குகளையும் கொண்டு வந்து குவித்துப் பங்கு பிரித்து மகிழ்ந்த நமது ஊர் மன்றம். இப்போது பாழ்பட்டு அழகு இழந்து நிற்கின்றது. நமது மறக்குடிக்கு இயல்பான தொழில் முறை குன்றிவிட்டது. அறக்குடியிலே பிறந்தவர்களைப் போல நாமும் பணிவும் அடக்கமும் கொண்டு கொள்ளை முதலியன மறந்து வாழும் தன்மையை அடைந்துவிட்டோம். அதனால், நமது வளமும் வருவாயும் சுருங்கிவிட்டன. கலை மானை வாகனமாகக் கொண்டுள்ள கொற்றவைக்கு நாம் பரவுக்கடன் செலுத்தினாலன்றி நமக்கு யாதொரு வெற்றியும் விளையாது. எப்பொழுதும் போல, கள் முதலியவற்றை அருந்தி அகமகிழாது இருக்க விரும்பினீர்களானால் நீங்கள் கொற்றவைக்குரிய கடனைச் செலுத்தவேண்டும்" என்று கூறினாள் தெய்வம் ஏறப்பெற்ற சாலினி என்ற வேடர்குலப் பெண். இதனைச் சிலப்பதிகாரம்,

''கல்லென் பேரூர்க் கணநிரை சிறந்தன
வல்வில் எயினர் மன்று பாழ்பட்டன
மறக்குடி தாயத்து வழிவளம் சுரவாது
அறக்குடி போல்அவிந்து அடங்கினர் எயினரும்,

கலையமர் செல்வி கடன் உணின் அல்லது
சிலையமர் வென்றி கொடுப்போள் அல்லள்
மட்டூண் வாழ்க்கை வேண்டுதிர் ஆயின்
கட்டூண் மாக்கள் கடன் தரும்''

எனச் சித்திரித்துள்ளது.

சாலினியின்மேல் தெய்வம் ஏறியபின், அவள் கூறலுற்றதைக் கேட்ட வேடர்கள் அச்சம் கொண்டு உடனே கொற்றவைக்குரிய சிறப்புக்களைச்செய்ய முனைந்தனர். அவ்விடத்தே தங்கள் குலத்தில் பிறந்து வளர்ந்த குமரி ஒருத்தியைக் கொற்றவை போலக் கோலஞ் செய்தனர். அவ்வேடர் குலத்துக் குமரியின் நீண்ட கரிய கூந்தலைச் சடை முடியாகக் கட்டினர். அம்முடியைச் சுற்றிலும் பாம்புக் குட்டியின் தோற்றத்தைப் போலப் பொன்னாலாகிய கயிற்றைக் கட்டினர்; காட்டுப் பன்றியின் வெண்மையான வளைந்த பற்களைப் பிடுங்கி அக்குமரியின் சடைமுடியில் வளைந்த சந்திரனைப் போன்று தோன்றும்படிப் பொருந்தினர்; கொடிய வரிப்புலியின் பற்களை எடுத்துக் கோவைப்படத் தொடுத்து அவளது கழுத்தில் தாலியாகப் பூட்டினர். வரிகளும் புள்ளிகளும் பொருந்திய புலித்தோலை அவளுக்கு உடுத்தினர். கருமை பொருந்திய வலிய வில் ஒன்றினை அவள் கையில் ஏற்றினர். இவ்வாறு கோலம் செய்யப்பட்ட அக்குமரியைக் கலைமான் மேல் ஏற்றிவைத்தனர். இக் கொற்றவைக் கோலத்தை வருணிக்க வந்த இளங்கோவடிகள்,

''சிறு வெள்ளரவின் குருளை நாண் சுற்றிக்
குறுநெறிக் கூந்தல் நெடுமுடி கட்டி
இளை சூழ் படப்பை இழுக்கிய ஏனத்து
வளை வெண்கோடு பறித்து மற்றது

முளை வெண் திங்கள் என்னச் சாத்தி
மறங்கொள் வயப்புலி வாய்பிளந்து பெற்ற
மாலை வெண்பல் தாலிநிரை பூட்டி
வரியும் புள்ளியும் மயங்கு வான்புறத்து
உரிவை மேகலை உடீஇப் பரிவொடு
கருவில் வாங்கிக் கையகத்துக் கொடுத்துத்
திரிதரு கோட்டுக் கலைமேல் ஏற்றி''

என்று கூறியுள்ளார்.

இவ்வாறு அழகுக்கழகு செய்ததுபோல், கோலம் புனையப் பெற்ற குமரியாகிய கொற்றவைக்கு முன்னர் ஒரு மன்றம் அமைத்தனர். அதன் முன்னர் வேடர்கள் பல்வேறு காணிக்கைப் பொருள்களையும் இட்டு நிரப்பினர். மதனப் பாவை, கிளி, மயில் காட்டுக்கோழி, பந்து, கழங்குக்காய் முதலியவற்றைக் கொற்றவைக்குப் படைத்தனர். இன்னும் சில வேடர்கள், வண்ணம், சுண்ணம், சந்தனம், புழுக்கல், எள்ளுருண்டை, இறைச்சிச் சோறு, பூ, புகை முதலியவற்றைக் கைகளில் ஏந்திக் கொண்டு வந்தனர். இன்னும் சில வேடர்கள் வழிப்பறி செய்யும்பொழுது தாம் பயன்படுத்தும் பறையும் கொள்ளையிடும்பொழுது ஊதும் குழலும், மணியும் ஆகிய இவற்றை அக்குமரியின் முன் கொண்டு வந்து வைத்தனர். இவ்வாறு பூசனைப் பொருள்களை எல்லாம் கொற்றவை வேடத்தில் காட்சியளிக்கும் குமரிக்குப் படைத்தனர், இதன் பின்னர், முன்னர்த் தெய்வம் ஏறி ஆடிய சாலினி என்பவள் அக்குமரியையும். அவளது வாகனமான கலைமானையும் முறைப்படி வணங்கினாள். வணங்கிய சாலினி, யார் கண்ணுக்கும் புலப்படாது மறைந்து அக் கோயிலின் ஒருபுறம் தங்கியிருந்த கண்ணகியைத் தனது தொலை ஆற்றலால் உணர்ந்து, "இப்பெண் கொங்கு நாட்டின் செல்வம்; குடமலை நாட்டினை (சேர நாடு) ஆள்பவள்; தென்பாண்டி நாட்டின் திரு; உலகம் செய்த தவத்தின் பேறு; இவ்வுலகிற்குக் கிடைக்கக்கூடாத விலையுயர்ந்த முழுமணி, இக்கண்மணியாகிய பெண்மணி!'' என்று சாலினி

தனது தெய்வத்தன்மை தோன்றுமாறு கண்ணகியின் பெருமையை வியந்து கூறினாள். இதனை இளங்கோவடிகள்

"கணவனோடு இருந்த மணமலி கூந்தலை
இவளோ. கொங்கச் செல்வி குடமலையாட்டி
தென்றமிழ்ப்பாவை செய்ததவக் கொழுந்து
ஒருமாமணியாய் உலகிற்கு ஓங்கிய
திருமாமணியெனத் தெய்வமுற்று உரைப்ப"

எனக் கூறியுள்ளார்.

தொல்காப்பியம் இன்றைக்கு உலகில் உள்ள நூல்களி லெல்லாம் மிகவும் பழமை வாய்ந்தது. தமிழர்களுடைய இலக்கண நூல் என்று கூறப்படும் இந்நூல் ஒரு சிறந்த இலக் கியமாகவும் அமைந்துள்ளது. இப்பேரிலக்கணத்திற்கு முரண்படாதவாறு சிறிய இலக்கியங்களை எழுதிய தமிழ்ப் பேரறிஞர் இருவர் ஆவர். ஒருவர் திருவள்ளுவர்; மற்றொரு வர் இளங்கோவடிகள். வேட்டுவவரிப் பகுதியில், முன்றிலின் சிறப்புக் கூறுமிடத்து ஆசிரியர் இளங்கோவடிகள் தொல் காப்பியத்திலுள்ள பல்வேறு புறத்துறை இலக்கணங்களுக்கு இலக்கியம் கூறிச்செல்லும் முறை மிகவும் நயமுடையதாக அமைந்துள்ளது. கொற்றவை கோயிலின் முற்றத்தில் விளங்கிய காட்சிகளை ஆசிரியர் இளங்கோவடிகள் வருணிக் கும் திறனை இனிக் காண்போம்.

கொற்றவை கோயிலின் முற்றத்தில் பலிபீடம் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அப்பலிபீடத்தைச் சுற்றிலும் காணிக்கை கொண்டுவந்து வழிபட்டுச் செல்லும் மக்கள் தங்கியிருப்பதற்காக நல்ல நிழல் தரும்படியான பல்வேறு மரங்கள் வளர்க்கப்பட்டிருந்தன. நல்ல வாசனையைத் தரத் தக்க சுரபுன்னை மரங்களும், நாரத்தை மரங்களும் வரிசை வரிசையாகக் காட்சி தந்தன. ஆச்சா மரங்களும் சந்தன மரங்களும் மிகவும் உயரமாக வளர்ந்து தோன்றின. சேமரங் களும், மா மரங்களும் செறிந்து விளங்கின. நெற்றிக் கண் ணனுகிய சிவபெருமானது இடப்பாகத்தை ஆளும் கொற்

றவை கோயிலின் பலிபீடத்தின் ஒரு பகுதி இவ்வாறு சிறந்து விளங்கியிருந்தது. இதனை,

நாகம் நாறு நரந்தம் நிரந்தன
ஆவும் ஆரமும் ஓங்கின எங்கணும்
சேவும் மாவும் செறிந்தன கண்ணுதல்
பாகம் ஆளுடையாள் பலி முன்றிலே

என்பர்.

இத்தகைய நறுமணம் கமழும் மரங்களின் பக்கத்தில் வேங்கை மரங்கள் பொன் போன்ற பூக்களைச் சிந்தி நின்றன. இலவமரங்கள் சிறந்த இதழ்களை உதிர்த்து விளங்கின. புங்க மரங்கள் வெண்ணிறமான பூக்களைப் பரப்பின. மரவம், பாதிரி, புன்னை, குரவம், கோங்கம் முதலிய பல்வேறு மரங்களும் தேன்கசியும் இனிய பூக்களை உதிர்த்து நின்றன. இவற்றை

செம்பொன் வேங்கை சொரிந்தன சேயிதழ்
கொம்லர் நல் இலவங்கள் குவிந்தன
பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கினம்
திங்கள் வாழ் சடையாள் திரு முன்றிலே

என்பர்.

இவ்வாறு முன்றிலின் சிறப்புக் கூறிய அடிகள் இனிக் கொற்றவை கோலங்கொண்டு நின்ற வேட்டுவக் குமரி செய்த தவத்தின் பெருமையையும் புகழ்ந்துரைக்கின்றார். “துர்க்கையாகிய தேவதையின் அழகிய கோலத்தைத் தாங்கி இருக்கும் இவ்வழகிய வளையல்களையுடைய இக்குமரி முன்னைப் பிறப்பில் யாது தவம் செய்தாளோ? இத்தவமகள் பிறந்த குலத்தில் தோன்றிய வேடர்கள் மிகவும் பாராட்டு தற்கு உரியவர்கள் என்பாராய்,

“கொற்றவை கொண்ட அணிகொண்டு நின்ற இப்
பொன்தொடி மாதர் தவமென்னை கொல்லோ

பொன்தொடி மாதர் பிறந்த குடிப்பிறந்த
வில்தொழில் வேடர் குலனே குலனும்;
பாய்கலைப் பாவை அணிகொண்டு நின்றஇவ்
ஆய்தொடி நல்லாள் தவம் என்னை கொல்லோ
ஆய்தொடி நல்லாள் பிறந்த குடிப்பிறந்த
வேய்வில் எயினர் குலனே குலனும்''

என்று வருணித்துள்ளார். இக்கருத்துக்கள் அமைந்த பாடற் பகுதி தொல்காப்பியர் கூறும் ''வாடா வள்ளி'' என்ற வள்ளிக் கூத்தின் வகையைச் சார்ந்தது.

இனி முன்னிலைப் பரவலாக ஆசிரியர் இளங்கோவடிகள் பாடும் பாடல்கள் மிக்க நயமுடையவை. ''யானையின் தோலைத் தனது உடம்பின் மீது போர்த்து, புலியினது தோலை இடுப்பிலே ஆடையாக உடுத்துக் காட்டு எருமைக் கடாவின் மேல் அமர்ந்த அம்மையே, ஞானத்தின் உருவே, நீ எப்பொழுதும் நிலைத்து நிற்பாயாக!'' என்று கருத்தமைந்த,

''ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரியுடுத்துக்
கானத்து எருமைக் கருந்தலை மேல் நின்றாயால்
வானோர் வணங்க மறைமேல் மறையாகி
ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றியே நிற்பாய்''

என்ற பாடல் மிகக் சுவையுடையதாகும்.

மறக்குலத்திலே பிறந்த வேடுவர்கள் பகைவர்களை அழித்த பின்னர் வாள்வீரர் ஆடும் வாட் கூத்தினை வருணிக்கும் பாடல் உள்ளத்தைக் கவரவல்லது, பொருள் பொதிந்த பாடல் அது.

அழகிய பொன்மணிகளை உள்ளே வைத்த சிலம்பையும், வளையல்களையும், மேகலையையும் அணிந்து வஞ்ச நெஞ்சம் கொண்ட வாள் தொழில்வல்ல அசுரர்களை அழிக்கத் துர்க்கை யானவள் மரக் காலின்மீது நின்று வாட்கூத்து ஆடினாள். பாம்பு, தேள் முதலிய கொடிய உயிர்ப் பிராணி

களாக உருவெடுத்து வந்த அசுரர்களைத் தனது மரக் கால்களால் நசுக்கிக் கொன்றவள் கொற்றவை. இவ்வாறு வாட்கூத்து ஆடும் பொழுது இவளது கரியமேனியைப் போற்றித் தேவர்கள் மலர்மாரி சொரிந்தனர். இக்கருத்தமைந்த,

''ஆய்பொன் னரிச்சிலம்பும் சூடகமும்
மேகலையும் ஆர்ப்ப ஆர்ப்ப
மாயம்செய் வாளவுணர் வீழநங்கை
மரக்கான் மேல் வாளமலை யாடும் போலும்
மாயம்செய் வாளவுணர் வீழநங்கை
மரக்கான் மேல் வாளமலை ஆடுமாயின்
காயா மலர் மேனி யேத்தி வானோர்
கைபெய் மலர்மாரி காட்டும் போலும்''

என்னும் சிலம்புப் பாடல்கள் ஈண்டு நோக்கத்தக்கன.

இனி இளங்கோவடிகள் கொற்றவை கோயிலில் நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் கண்டவர்கள் கூறிக்கொள்வதாகப் பாடும் பாடல்கள் ஊன்றிக் கவனிக்கத் தக்கன. ''பொய்கையை அழகுபடுத்தும் தாமரை மலர்போலும் கண்களையுடைய பெண்ணே! நீ பார்!! நின் தந்தை தமையன் முதலியோர் பகைவர்கள் வருந்தி ஓலமிடுமாறு அவர்களை வாளால் எறிந்து, கவர்ந்து கொண்டுவந்த பசுக்கூட்டங்கள் நரையும் திரையும் பாய்ந்த முதியவர்களாகிய மறவர்களுடைய முற்றத்தைச் சிறப்பிக்கின்றதை காண்!'' என்ற இப்பகுதியால் கொள்ளையிட்ட பசு முதலிய பொருள்களை மறவர்களாகிய வேட்டுவர் தமக்குள் பகிர்ந்து கொள்ளும் பழக்கத்தை வெளிப்படுத்தியிருப்பது அறியத்தகும்.

இதனைத் தொல்காப்பியர் ''பாதீடு'' எனக் கொள்வர். இக்கருத்தமைந்த பாடல்

கயமலர் உண்கண்ணாய் காணாய் நின்ஐயர்
அயலூர் அலற எறிந்தநல் ஆனிரைகள்

நயனில் மொழியின் நரை முதுதாடி
எயினர் எயிற்றியர் முன்றில் நிறைந்தன''

எனவரும்.

இவ்வாறு ஐயைகோயிலில் நடைபெற்ற களியாட்டத்தின் முடிவில் வேடர்கள் பாண்டிய மன்னனது ஆட்சியை வாழ்த்துவாராய்,

''மறைமுது முதல்வன் பின்னர் மேய
பொறையுயர் பொதியில் பொருப்பன் பிறர்நாட்டுக்
கட்சியும் கரந்தையும் பாழ்பட
வெட்சி சூடுக விறல் வெய்யோனே''

என்று பாடுகின்றனர்.

கோவலன் – கண்ணகியின் வாழ்க்கை வரலாற்றை ''நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரமாக'' மெருகிட்டுச் சித்திரிக்க முயன்ற இளங்கோவடிகள் வேட்டுவ வரியில் காப்பியத்தின் கருவூலம் போன்ற கருத்தொன்றுக்கு முன்னறிவிப்புக் கொடுக்கிறார். கோவலன் சிலம்பு விற்க மதுரைக்குச் செல்கிறான். அவனைக் கள்வன் எனப் பொற்கொல்லன் அரசனிடம் காட்ட முயல்கின்றான். புதிதாக வந்தவன் கள்வன் என்ற கருத்தை மன்னன் ஆராயாமலே ஏற்றுக் ''கள்வனெனில் அவனைக் கொன்று அச்சிலம்பு கொணர்க'' என்று உத்திரவிட்டு விடுகிறான். இவ்விதம் சிலம்பு விற்கச் செல்லும் வணிகன் கள்வனாகக் குற்றம் சாற்றப்பெற்றுக் கொல்லப்பட விருக்கிறான் என்ற குறிப்பை முன்னத்தின் உணர்த்தவே இளங்கோவடிகள் வேட்டுவ வரியை விரித்து எழுதினார் என்று தோன்றுகிறது.

புகார்க் காண்டத்தில் சோழனது பேரூர்களைக் கூறும் போது கள்வர்களைப்பற்றி இளங்கோவடிகள் யாதும் கூறவில்லை. ஆனால் மதுரைக் காண்டத் தொடக்கத்திலேயே கள்வர்களைப் பற்றியும் கள்வர் பயத்தைப் பற்றியும் நமக்கு அறிமுகப்படுத்துகிறார்.

கள்வர்கள் பிறரைத் துடிக்கத் துடிக்கக் கொன்று பசுக் களையும் பொருள்களையும் கவர்ந்து வந்து தங்கள் வழிபடு தெய்வத்துக்கு விழாவெடுத்து மகிழ்விப்பர். அத்தொழிலே அவர்கள் மறந்ததால் பகைவரது ஊர்களிலே பசுக்கூட்டங் கள் மிகுதிப்பட்டு விட்டதாகவும், மறக்குடியிற் பிறந்தோ ரது வழிப்பறி செயல்வளம் சிறக்காமல் மன்றுகள் பாழ் பட்டுப் போய்விட்டதாகவும் வேட்டுவ வரியில் தேவராட்டி கூறுகிருள். புகார்க் காண்டத்தில் கள்வர்களைப் பற்றியே கூருது இங்கு விரிவாக அவர்களை அடிகள் கூறற்குக் காரணம் யாதென ஆராயும்போது தொன்றுதொட்டுப் பாண்டிய நாட்டில் இந்தக் கள்வர் பயம் அதிகம் இருந்திருக்கிறது என்பது உணரக் கிடக்கின்றது. இதனுல்தான் கோவலன் மீது சுமத்தப்பெற்ற பழியைக்கூட அரசன் அதிகம் சிந்தி யாமல் கள்வனெனில் அவனைக் கொன்று விடுக என்று கூறும் நிலைமை ஏற்பட்டது போலும். நிரந்தரமான அச்சம் நில விய மனநிலையில் கள்வர்கள்மீது அவ்வளவு கடுமையாக நட வடிக்கை எடுப்பதற்கு இயல்பாகவே யாருக்கும் நினைவு ஏற் படலாம். பாண்டிய நாட்டின் ஒரு பகுதி இன்னும் பாலை யாகவே காட்சியளிக்கின்றது. பண்டு இராமநாதபுரம் பகுதி பாலைவனமாயிருந்ததென்றும், அப்பகுதி சூரபதும னுடன் போர் தொடுக்கச் சென்ற முருகப் பெருமானின் கால்பட்டதால் சிறிது வளம் பெற்றதென்றும் கந்தபுரா ணம் கூறுகிறது. பாலை நிலத்து மக்களின் இயல்பு சிலப்பதி காரக் காலந் தொட்டுப் பாண்டிய நாட்டில் மாருதிருந்தது என்பது இங்கே தெளிவாய்த் தெரிகிறது. மதுரை வீரன் பாண்டிய நாட்டுக் கள்வர்களை அடக்க வரவழைக்கப் பெற் றனவே என்பதும் இங்கு நினைவூட்டிக் கொள்ளல் தகும்.

கோவலனும் கண்ணகியும் உயர்ந்த செல்வக் குடியில் தோன்றியவர்கள். எல்லா வளங்களும் நிறைந்து உலகத் தின் திலகமாக விளங்கிய காவிரிப்பூம்பட்டினத்திலேயே பிறந்து வளர்ந்தவர்கள்; வேற்றூர் சென்றறியாதவர்கள்; அச்சம் தரத்தக்க நிகழ்ச்சிகளைக் கண்டும் கேட்டும் அறியா

தவர்கள். இத்தகையவர்கள், காலத்தின் கோலத்தால் காவிரிப்பூம்பட்டினம் நீங்கிக் காடுகளும் ஊர்களும் இடையிட்ட பல காவதத் தூரம் வேற்று நாடு நோக்கி நடந்து வருகின்றனர்கள். உறையூர்ப் பகுதியை அடையும்வரை வெயிலின் வெப்பம், பருக்கைக் கற்களின் துன்பம் ஆகிய இவற்றை அனுபவித்த இவ்விளம் தம்பதிகளுக்குப் பாண்டி நாட்டுக்கு அணித்தாயுள்ள உறையூரில்தான் முதன்முதல் அஞ்சத்தகும் நிகழ்ச்சி காணப்பெறுகிறது. தூர்த்தன் ஒருவனும் தூர்த்தையொருத்தியும் செய்த கேலிக்கு அவர்கள் அங்கு ஆளானர்கள். அதனை அடுத்துப் பாண்டி நாட்டின் எல்லையில் ஐயை கோட்டத்தில் நிகழ்ந்த வேட்டுவ நிகழ்ச்சிகள் ஒருவகைப்பட்ட விழாவாக இருந்தாலும் வேதனையை விளைவிக்கத் தக்கனவாகவே இருந்தன. வேட்டுவர்களுடைய உடற் கட்டமைப்பும் முறைகளும் வன்செயல்களும் எவரையும் நடுங்கச் செய்வன. உயிர்ப் பலியிடுதல், அம்பு எய்தல், வழிப்பறி செய்தல், சூறையாடுதல் முதலான தீய தொழில்களையுடைய கொள்ளைக் கூட்டத்தை இதுவரை அவர்கள் கண்டதில்லை. இந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் இளங்கோவடிகள் பாண்டி நாட்டுக் காட்டு வளம் கூறும் முகத்தால் எடுத்துக் கூறுவதனுடைய நோக்கம், கோவலன் உயிர்க்கே இறுதி பயப்பதாகிய ஒரு வஞ்சகச் செயல் நிகழவிருப்பதை முன்னமாகக் குறிப்பதற்கேயாகும் என்று தோன்றுகிறது.

இனி இவ்வேட்டுவ வரிப்பகுதியில் ஆசிரியர் இளங்கோவடிகள் கண்ணகிக்கு எதிரில் நிகழ இருக்கும் தெய்வ நிலைமையைக் கோலங்கொண்ட குமரியின் வாய்மொழி மூலமாக அறிவித்து விடுகின்றார். அவள்,

''இவளோ கொங்கச் செல்வி
குடமலையாட்டி தென்றமிழ்ப் பாவை''

என்ற சிலப்பதிகார அடிகளில் கண்ணகியைக் குடமலையாட்டி எனக் குறிப்பிடுகின்றாள். கோவலனும் கண்ணகியும் மதுரைக்குப் புறப்பட்டதன் காரணம் சிலம்பு விற்றுப்

பொருள் தேடுவதேயாகும். கோவலன் கொலையுண்டு இறவாமல் இருந்திருப்பானுனல் இவர்கள் மதுரையிலிருந்து திரும்பி யிருப்பார்கள். கண்ணகி சேரநாடு செல்லவோ தெய்வநிலை பெற்றுக் குடமலையாட்டியாகவோ வாய்ப்பு இல்லை. ஆகவே பின்னுல் நிகழக்கூடிய—கண்ணகி தெய்வமாகும்-நிலையை இளங்கோவடிகள் இந்த வேட்டுவரியில் முன்கூட்டியே அறிவிக்கின்ருர் என்பது தெளிவாகிறதன்ருே?

## 15. புறஞ்சேரி இறுத்தல்

குமரியின் கோலம் நீங்கிய பின்பு, கோவலன் கவுந்தி அடிகளை நோக்கிப் 'பாண்டியர் காக்கும் நாட்டிலே புலி முதலிய கொடிய விலங்குகள் துன்பம் செய்யா; பகற்பொழுதில் வெயிலின் வெப்பம் மிகுந்து உள்ளது. ஆகையால் பகலிற் செல்லாமல் இரவில் நிலவொளியிற் செல்லுவோம்'' என்றான். கண்ணகி செல்வப் பெருங்குடியிலே பிறந்தவள். அவளைத் துன்பமிக்க காட்டுவழியிலே பகற்பொழுதில் அழைத்துக்கொண்டு சென்றால், பலர் பலவிதமாகப் பேசக் கூடும் என்று அவன் நாணினான். ஆகவே இரவில் செல்லலாமென அவன் துணிந்தான். அதற்குக் கவுந்தி அடிகளும் இணங்கவே மூவரும் இரவின் வருகையை எதிர்பார்த்திருந்தனர். பொதியில் மலையிலே பிறந்து, மதுரையிலே வளர்ந்து புலவர்களால் மிகவும் வியந்து பேசப்பட்டுள்ள தென்றற் காற்றும், பால் போன்ற வெண்ணிலவும் தோன்றின.

கண்ணகி கோவலனுடன் நிலவுக் காலத்தில் உடன் உறைந்து இன்பம் பெறும் வாய்ப்பினைப் பலகாலமாகப் பெறவில்லை. இப்பொழுதும் கவுந்திஅடிகள் கூடவே வருவதனால், அந்நிலவும் அவர்கட்குப் பயன்படாது போயிற்று. இதனை உணர்ந்து வருந்துபவள்போல நிலமகள் அடங்கினாள் என்று தற்குறிப் பேற்றமாக இளங்கோவடிகள் இங்கு நிலமகள் செயலையும் நிலவு வருதலையும் வருணிக்கின்றார்.

''மலயத்து ஓங்கி மதுரையின் வளர்ந்து
புலவர் நாவில் பொருந்திய தென்றலொடு

பால் நிலா வெண்கதிர் பாவை மேல் சொரிய
வேனில் திங்களும் வேண்டுதி யென்றே
பார்மகள் அயாவுயிர்த்து அடங்கிய பின்னர்''

என்ற இப்பகுதி நினைவு கூரத்தக்கது.

கோவலன் கண்ணகி கவுந்திஅடிகள் ஆகிய மூவரும் இரவுப்பொழுது வரும்வரையில் காத்திருந்து நிலவு வந்ததும் புறப்பட்டனர். கண்ணகியைத் தன் தோளோடு சேர்த்து அச்சம் நீங்க அணைத்துக்கொண்டு கோவலன் நடந்தான். கவுந்திஅடிகள் நடை வருத்தம் தோற்ருதபடி பல அறவுரைகளையும் கதைகளையும் கூறிக்கொண்டு உடன் வந்தார். இவர்கள் மதுரை நகருக்கு அண்மையில் இழுக்கிய ஒழுக்கமுடைய பார்ப்பனர் வாழும் ஒரு புறஞ்சேரியை அடைந்தனர்.

பார்மகள் அயாவுயிர்த்து அடங்கிய பின்னர்
ஆரிடை உழந்த மாதரை நோக்கிக்
கொடுவரி மறுகும் குடிஞை கூப்பிடும்
இடிதரும் உளியமும் இனையாது ஏகு எனத்
தொடிவளைச் செங்கை தோளில் கூட்டி
மறவுரை நீத்த மாசறு கேள்வி
அறவுரை கேட்டு ஆங்கு ஆரிடைக் கழிந்து

புறஞ்சேரியை வந்தடைந்தபொழுது சூரியன் வானத்தில் தோன்றினன். முள்வேலி சூழ்ந்த காவலிடத்தே கவுந்தியையும் கண்ணகியையும் இருக்கச் சொல்லிவிட்டுக் கோவலன் காலைக்கடன் முடித்தற் பொருட்டு ஒரு நீர்நிலையை அடைந்தான்.

புறஞ்சேரியிறுத்த காதையில், இளங்கோவடிகள் மாதவியின் மாண்பையெல்லாம் ஒருசில சொற்களாலேயே மிகச் சிறப்பாக வடித்துக் காட்டிவிடுகிருர். கோவலனும் தான் கருதியது மிகவும் தவறு என்பதையும் தெரிந்து கொண்டு விடுகிருன்.

மாதவி கோவலன் பிரிந்தபின் யாது செய்வது எனத் தெரியாது மயங்கினுள். பின்னர்க் கோசிகன் என்ற பிராமணனிடம், ஒரு ஓலை எழுதி அதைக் கோவலனிடம் சேர்ப்பிக்குமாறு கூறுகிறுள். அவன் அவ்வோலையை எடுத்துக் கொண்டு கோவலனைப் பின்தொடர்ந்து சென்று பல இடங்களில் தேடியலைந்து கடைசியாக இங்குச் சந்திக்கிருன்.

கோவலனே, மாதவியின்மேல் மிகுந்த கோபங்கொண்டு அவளைவிட்டுப் பிரிந்து வந்தவன். ஆகையால், தன்னுடைய ஓலையை அவன் ஏற்றுக் கொள்வானே என்ற அச்சமும் அவளுக்கு உண்டாயிற்று.கோவலன் தனிமையாக இருப்பதைப் பார்த்துவிட்டான் கோசிகன். ஆனல் எவ்வாறு அவனிடம் சென்று மாதவியின் மயக்கத்தைத் தெரிவிப்பது என்பதைப் பற்றி அவன் தெளியவில்லை. அவனுடைய சிந்தனை சிறகடித்துப் பறக்கத் தொடங்கியது. அருகிலே ஒரு குருக்கத்திக் கொடி வெயிலின் வெப்பம் தாங்க மாட்டாது வாடி வதங்கி நின்றதைக் கண்டான் கோசிகள்; குருக்கத்திக் கொடிக்கு மாதவி என்ற பெயரும் உண்டு. கோவலன் காதில்விழும்படி குருக்கத்திக் கொடியைப் பார்த்துப் பின்வருமாறு கூற ஆற்று, ''கோவலன் பிரிந்தபின், மாதவி கொடும் துயரப் பட்டாள்; அவள் மேனி வாடி வதங்கியது; அம்மாதவி போல நீயும் வாடிவதங்கிவிட்டாயோ, மாதவிக் கொடியே'' என்ருன்.

''கோவலன் பிரியக் கொடுந் துயர் எய்திய
மாமலர் நெடுங்கண் மாதவி போன்றஇவ்
அருந்திறல் வேனிற்கு அலர் களைந்து உடனே
வருந்தினை போலும் நீ மாதவி''

என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

கோவலன் மாதவிபால் பிரியா விருப்புடன் கூடியிருந்தவன்; அவள்பால் மணிமேகலை என்ற மகளையும் பெற்றவன். மாதவியின் மகள் மணிமேகலையின் மழலையைக் கேட்க வேண்டுமென்ற எண்ணம் அவனுக்கு உள்ளுக்குள்ளே இருந்து இனம் தெரியாத ஏக்கத்தை தந்துகொண்டிருந்தது.

கண்ணகியும் கவுந்திஅடிகளும் அவ்வேக்கம் தலையெழாதபடி காத்து வந்தனர். ஆனால் தனிமையிலே, மாதவியின் பெயரைக் கேட்டவுடனேயே, சென்றகால எண்ணங்களெல்லாம் அவன் மனத்தில் திரும்பின. அவளுடைய ஆடலும், பாடலும், சொல்லும், செயலும், அவனை வேறு உலகத்திற்குக் கொண்டு சென்றுவிட்டன. திகைப்பூடு மிதித்தவன் போல் சிறிது நேரம் நின்றுவிட்டுக் கோவலன் தன்நிலையை அடைந்தான். பின்னர்க் கோசிகனை நோக்கினான். ''அந்தணரே! ஏதோ ஒன்றைக் கூறினீர்களே அது என்ன என்று திரும்பவும் கூற முடியுமா?'' என்றான். கோசிகன் மிகவும் திறமைசாலி. மனித உள்ளப் பண்பாட்டை நன்கு அறிந்தவன். கோவலனுடைய மனது மாதவியின்பாற் சென்றுவிட்டது என்பதை நன்கு உணர்ந்தான். ஆயினும், தாய் தந்தையர்களைப் பற்றிக் கூறினால்தான் கோவலன் தன் உரைகளை ஊன்றிக் கேட்பான் என்ற எண்ணத்தினால் பின்வருமாறு கோவலனைப் பார்த்துக் கூறினான். ''கோவல! செல்வம் திகழும் உன் தந்தையும் தாயும் இரத்தினத்தை இழந்த நாகம் போலப் பதறிவிட்டனர். உன் பிரிவு அவர்களைத் துயரக் கடலிலே வீழ்த்திவிட்டது. உன்னுடைய வேலையாட்களும் நண்பர்களும் பிறரும், இராமனை இழந்த அயோத்தி மக்களைப்போன்று மிக்க வருத்த முற்றனர். பூம்புகார்ப் பட்டினமே செல்வத்தை இழந்து விட்டோமே என வருந்தியது. கோவலன் வேறு ஊர் சென்றுவிட்டான்; தன்னை மறந்துவிட்டான் என்பதை வயந்தமாலை மூலமாக மாதவி அறிந்தாள். மேனியெல்லாம் பசுமையாகி விட்டது நோயுற்றவள் போல் படுக்கையில் படுத்தாள். தான் என்ன பிழை செய்துவிட்டோம் என்று எண்ணி எண்ணி ஏங்கினாள். பின்னர்த் தன்னுடைய மலர்க் கரத்தால் ஒரு முடங்கல் எழுதி, கண்மணியனையானிடத்தில் காட்டு என்று என்னிடம் இக்கடிதத்தைக் கொடுத்தாள்'' என்று கூறிக் கோவலனிடம் மாதவி தந்த ஓலையைக் கொடுத்தான். இதனை

''கோசிக மாணி கூறக் கேட்டே
யாதுநீ கூறிய உரை அது ஈங்கு எனத்

தீதிலன் கண்டேன் எனச் சென்றெய்திக்
கோசிக மாணி கொள்கையின் உரைப்போன்;
இருநிதிக் கிழவனும் பெருமனைக் கிழத்தியும்
அருமணி இழந்த நாகம் போன்றதும்
இன்னுயிர் இழந்த யாக்கை என்னத்
துன்னிய சுற்றம் துயர்க்கடல் வீழ்ந்ததும்
ஏவ லாளர் யாங்கணும் சென்று
கோவலனைத் தேடிக் கொணர்க எனப் பெயர்ந்ததும்
பெருமகன் ஏவலல்லது யாங்கணும்
அரசே தஞ்சமென்று அருங்கான் அடைந்த
அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்
பெரும்பெயர் மூதூர் பெரும் பேதுற்றதும்
வசந்த மாலைவாய் மாதவி கேட்டுப்
பசந்த மேனியள் படர் நோயுற்று
நெடுநிலை மாடத்து இடைநிலத்து ஆங்கோர்
படையமை சேக்கைப் பள்ளியுள் வீழ்ந்ததும்
வீழ்துயர் உற்றேள் விழுமம் கேட்டுத்
தாழ்துயர் எய்தித் தான் சென்று இருந்ததும்
இருந்துய ருற்றேள் இணையடி தொழுதேன்
வருந்துயர் நீக்கு என மலர்க்கையின் எழுதிக்
கண்மணி யனையாற்குக் காட்டுக என்றே''

கோவலன் கோசிகனிடமிருந்து மாதவி விடுத்த கடிதத்தைப் பெற்றுக் கொள்ளுகிறான். அக்கடிதம் ஓர் ஓலைச்சுருள். அந்த ஏட்டுச் சுருளைச் சுற்றித் தன் கூந்தலால், ஒரு சின்னம் பொறித்துக் கட்டி அனுப்பிவைத்திருந்தாள் மாதவி. நாம் இந்தக் காலத்திலும் இரகசியமாக ஒரு கடிதம் இருக்க வேண்டுமானால் அதற்கு அரக்கு முத்திரை வைத்து அனுப்புவதுபோல் அவளும் மயிரினாலேயே வரி முத்திரை வைத்து அனுப்பினாள். அந்தக் கூந்தலின் வாசனையைக் கண்டவுடன் கோவலனுடைய எண்ண அலைகள் அவன் அவளோடு கூடி வாழ்ந்த காலத்தை நோக்கிப் பின்சென்றன. அவன், தான் அவளை விட்டு நீங்கிய நாளில் என்ன நடந்தது என்பதைத்

திரும்பிப் பார்த்தான். அவன் அன்று கண்ட ஒப்பனை அதே வாசனை அந்தக் கூந்தல் முத்திரையில் இருக்கக் கண்டான் தான் பிரிந்தபின், அவள் ஒப்பனை யாதும் செய்யாது மனம் நொந்து இருந்தனள் என்பதை அதன் மூலம் அறிந்து கொண்டான். இதனை,

''மாதவி யோலை மலர்க்கையின் நீட்ட
உடனுறை காலத்து உரைதத நெய்வாசம்
குறுநெறிக் கூந்தல் மண்பொறி உணர்த்திக்
காட்டியது ஆதலின் கைவிடலியான்,
ஏட்டகம் விரித்து அங்கு எய்தியது உணாவோன்''

என அடிகள் குறிப்பிடுகிறார். அந்த ஓலையை வாங்கி வாசித்துப் பார்த்தான். அது தன்னலம் கருதாத ஒரு பெரியார் எழுதியது போன்ற கண்ணியமுடையதாக இருந்தது. ''என்னை மன்னித்து விடுங்கள். நான் எழுதியதில் பிழை ஏதும் இருந்தால் பொறுத்தருள்க. தங்கள் தாய் தந்தையர்களுக்குத் தாங்கள் செய்யவேண்டிய பணிகள் யாவையும் மறந்து, இரவிலே யாருக்கும் சொல்லாமல், மனையாளுடன் செல்லவேண்டிய காரணம் யாதோ? அறியேன். என் குற்றத்தால் உங்கள் தாய்தந்தையர் மனம் வருந்த நீங்கள் சென்றது கண்டு நான் மிகவும் வருந்துகிறேன். நான் என்ன பிழை செய்தேன்?'' என்ற பொருள்பட

''அடிகள் முன்னர் யான் அடி வீழ்ந்தேன்
வடியாக் கிளவி மனக்கொளல் வேண்டும்
குரவர் பணியன்றியும் குலப்பிறப்பாட்டியொடு
இரவிடைக் கழிதற்கு என் பிழைப்பு அறியாது
கையறு நெஞ்சம் கடியல் வேண்டும்''

என அத்திருமுகம் இருந்தது.

மாதவி எழுதிய கடிதத்தைத் திரும்பத் திரும்பப் படித்தான் கோவலன். அதன் சொற்றொடர்கள் தான் தன் தாய்

தந்தையர்களுக்கு எழுதினுல் எவ்வாறு இருக்குமோ அவ் வாறே இருக்கக் கண்டான், ஆகையால். அதனைக் கோசிக விடமே திரும்பக் கொடுத்து ''அந்தணரே, என் பெருமை மிக்க தாய் தந்தையர்க்கு இக்கடிதத்தைச் சேர்ப்பித்து விடுங்கள்'' என்று கூறினுன். இதனைப்

பொய்தீர் காட்சிப் புறையோய் போற்றி
என்று அவள் எழுதிய இசைமொழி உணர்ந்து
தன்தீதிலள் எனத் தளர்ச்சி நீங்கி
என்தீது என்றே எய்தியது உணர்ந்து ஆங்கு
எற்பயந்தோர்க்கு இம் மண்ணுடை முடங்கல்
பொற்புடைத்தாகப் பொருளுரை பொருந்தியது
மாசில் குரவர் மலரடி தொழுதேன்
கோசிகமாணி காட்டு எனக் கொடுத்து

என்று அடிகள் சொல்லுகிருர்.

கோவலன் செல்வப் பெருங்குடியில் பிறந்தவன். அவன் தந்தையின் காலத்தே, தானே பெருஞ்செல்வத்தைத் தேடிப் பேரும் புகழும் பெற்றவன். தந்தை மகற்குச் செய் யும் நன்றி அவையின் முந்தியிருப்பச் செயல் என்ற வள்ளுவர் வாக்கிற்கு இணங்க, அவன் தந்தை, அவனை அரசர்கள் செய் யும் பெருமைகளுக்கெல்லாம் நற்பாத்திரமாக்கினுர். கோவ லனும். அரச அவையிலே சீரும் சிறப்பும் பெற்று வாழ்ந்து வந்தான். ஆனுல், அவனுடைய விதி சதி செய்துவிட்டது. இயற்கையிலேயே இலக்கியத்திலும் ஆடல் பாடலிலும் இல யித்திருந்த அவன் உள்ளம், மாதவியின் ஆடலிலும் பாடலி லும் ஒன்றுபட்டுத் தோய்ந்தது. பல நாள் அவ்வாறு இருந்த காரணத்தால், அவன் செல்வம் தேடும் செயல்வகையையும் மறந்தான். மாதவி மங்கைபால் மையல் கொண்ட அவன் தன் செல்வம் யாவையும் மாதவிக்கே தந்துவிட்டான். அத ஞல் அவன் வறுமைநிலை எய்த நேர்ந்தது. அந்நாளில் ஒரு கொள்கை இருந்தது. அது தாயத்தால் பெற்றது கொண்டு வாழ்வுக்கு வேண்டியவைகளைச் செய்தால் தேவரும் பிதிர

ரும் இன்புறூர் என்பது.* ஆகையால் வறிஞனுகிய போதி லும் தந்தையின் சொத்தை நம்பி உயிர்வாழ அவன் நெஞ் சம் இடம் தரவில்லை. தந்தையின் நிழலிலே வாழ்ந்தால், அந்நாளை மக்கள் தன்னைப் பழிப்பர் என்று அஞ்சினுன். மேலும், தந்தையிடம் சென்று ''மதுவிலும் மங்கையர் கூட் டத்திலும், நான் தேடிய செல்வத்தை எல்லாம் இழந்தேன்; எனக்கு நீங்கள் தான் வாழ்வளிக்கவேண்டும்'' என்று கேட் கவும் கூசியது அவன் உள்ளம். இக்காரணங்களினுல், அவன் மதுரைக்கு இரவே புறப்பட்டுச் சென்றுவிடுகிறுன். ஆனுல், இக்கொள்கையிலும் கருத்திலும் மாதவிக்கு நம்பிக்கை இல்லை. ஆகையால்தான் மாதவி, ''தாய்தந்தையர்களுக்குப் பணி செய்யாது புறப்பட்டுச் சென்றது தவறு'' என்று கண் டித்து எழுதியிருந்தாள். அதைக் கோவலனும் உணர்ந் தான். ஆனுலும், அவன் மதுரை செல்வதிலிருந்து திரும்ப விரும்பவில்லை. ஆகவே, தான் செய்தது பிழை என்று கூறு முகத்தால், மாதவியின் ஓலையையே தன் தாய் தந்தையர் களுக்கு அனுப்பி விடுகிறுன்.

கோவலன் தன் விதியை நொந்து கொள்ளுகிறுன். செல் வனுகப் பிறந்து, செல்வத்தைத் தேடிவிட்டு, அதனைத் தொலைத்துப் பிறரிடம் கேட்டுவாங்கி வாழும் வாழ்க்கை வந்துவிட்டதே என்று மிகவும் வருந்தினுன். தன் தந்தை பெருஞ் செல்வனுக இருந்த போதிலும், அவனிடம் சென்று தன் நிலையைக் கூற அஞ்சினுன். மாதவி தன்னை வஞ்சித்து விட்டதாக நினைத்து, அவள்மேல் கோபங்கொண்டு, அவள் தான், தான்எய்திய இழிநிலைக்குக் காரணமென்று எண்ணி யெண்ணி ஏங்கிய அவனுடைய உள்ளத்தில், ஒரு மாற்றத் தைத் தந்தது மாதவியின் ஓலை. ஆனுல், வையை பாயும் மதுரையில் அமைக்க நினைத்த புதுவாழ்வை நோக்கி அவன் இருந்தானுகையால் திரும்பவும் காவிரியாறு பாயும் தன் நாட்டிற்குச் செல்ல விரும்பவில்லை. கண்ணகியுடன் சிறிது காலம் மதுரையிலே வாழ்ந்து, வாணிகம்செய்து பெருஞ்

*இறையனுர் களவியல் உரை

செல்வத்துடன் திரும்பவேண்டுமென்று அவன் நினைத்தான். ஆனால் அவனுடைய உள்ளுணர்வு அவன் நினைப்பது தவறு எனக் கூறிக்கொண்டே வருகின்றது. எனினும் துணிந்து மதுரை செல்வது என்றே அவன் முடிவுக்கு வந்தான்.

மாதவி செய்தது தவறு அல்ல; தன் இழிநிலைக்குத் தானே காரணம் என கோவலன் நினைத்தான். ஆனால் விதி தான் காரணம் என்பதை அவன் அறியான். இதை மனத் திற்கொண்டு தான் அடிகளும், தம் பதிகத்தில் காவியத்தின் குறிக்கோளின் ஒன்றாக, "ஊழ்வினை உருத்து வந்து ஊட் டும் என்பதும்" என்று கூறியுள்ளார். அவல நாடகத்தின் தலைவனான கோவலனுக்குத் திருந்துவதற்கு வழி இருந்தது. ஆனால் அவன் அதைப் பொருட்படுத்தவில்லை. விதியின் பிடி அவனை எங்கோ இழுத்துச் சென்று விட்டது. ஆகையால் தான் விதியின் வலிமை அறிந்த இராமனும், தான் காட் டிற்குப் போகும்போது, "விதியின் பிழை" என்று கூறு கிறான். இராமனைக் காட்டிற்கு அனுப்பிய விதிதான், கோவலனை மதுரை நோக்கி நடக்கச் செய்தது.

கோவலன் மதுரையை நோக்கிச் செல்லுகிறான். ஆனால் அவன் மனம் மாதவியை மறக்கவில்லை, மாசிலாக் கற் புடைய மாதவி என்ன பிழை செய்துவிட்டாள் என்று அவன் உள்ளுணர்வு கேட்கத் தொடங்குகிறது. இந்த எண் ணத்திற்கு மாறாக வேறொரு எண்ணமும் அவனிடம் தோன்றத் தொடங்கியது. வாழ்க்கையிலே மேம்பட வேண்டுமானால், ஒரு பெண்ணிடம் தன் உள்ளத்தை எல் லாம் செலுத்தி அவளுடன் இன்ப வாழ்க்கை வாழவேண் டும். இதனால்தான், "காதலர் இருவர் கருத்து ஒருமித்து எஞ்ஞான்றும் ஆதரவு பட்டதே இன்பம்" என்று ஔவை யார் கூறுகின்றார். இங்கு என்ன காண்கிறோம்? மாதவியின் அன்பு அவனைக் காவிரிப்பூம்பட்டினத்திற்கு இழுத்துச் செல்ல நினைக்கிறது. கண்ணகியின் அன்பு அவனை மதுரைக் குச் சென்று புகழ் பெறுமாறு கூறுகிறது. இதுவா, அதுவா எது வேண்டும் என்று எண்ணி எண்ணி அவன் நெஞ்சம் நைந்துவிடும் நிலைக்கு வந்துவிட்டது. அவன் பாராட்டிப்

பேசிய புகழுரைக்கும் பாடலுக்கும் பதில் ஒன்றும் கூறாது கண்ணகி கற்சிலைபோல அமைதி சமைந்து நின்றதை நாம் மனையறம் படுத்த காதையில் கண்டோம். குலப் பெண்களுக்கு இயற்கையாக அமைந்திருந்த பண்புகள் மிகுதியாக அவளிடம் காட்சி தந்தன. ஆனால். கோவலன் கற்றறிந்திருந்த கலைத்திறனுக் கெல்லாம்—தான் படித்த காவியத்திற்கு எல்லாம்—ஒரு எடுத்துக்காட்டாகக் காட்சியளித்து அவன் உள்ளத்தைக் கவர்ந்தாள் மாதவி. ஆனால் இளமைத் துடிப்பின் வேகம் குறைந்த பின்புதான் கண்ணகியின் காதற் சிறப்பைக் கண்டான் கோவலன். இரு சிறந்த பெண்களின் காதல் அவனைத் தேடிவர அவன் இன்னது செய்வது என்று அறியாது, தன் உள்ளத்தில் ஏற்பட்ட ஏக்கத்தைத் தீர்க்க இசைவாணர்களிடம் சிறிது நேரம் தன் காலத்தைக் கழித்தான்.

மதுரையில்தான் தென்றல் சிறப்புறுகிறது என்பது பழம் பெரியோரின் கருத்து. புலவர்களின் நாவிலே புகழ்ந்துரையாகப் புறப்பட்டு விளங்குவது தென்றல். அது பொதியமலையிலே பிறந்து விளங்கும் தென்றலாக வந்தது. இதனை அடிகள்,

‘புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பின்
பொதியில் தென்றல் போலாது ஈங்கு
மதுரைத் தென்றல் வந்தது காணீர்’

என்று கூறியுள்ளார்.

கோவலன், தன் பதற்ற குணத்தினால் ஆராயாமல் மதுரை வந்துவிட்டானே என்று :வையகமும் வானகமும் அழுதன. சிறந்த பண்பாட்டையுடைய கோவலன் மாதவியின்பால் தனக்கேற்பட்ட கழிபெருங் காதற் காமத்தால் வீழ்ச்சியுறத் தொடங்கிவிட்டானே என வருந்துகிறோம். வையையாகிய நங்கையும், கோவலனது சோகக் கதையைக் கேட்டு வருந்தி அழுதாள் என்று கூறுகிறார் அடிகள். இதனை,

உலகுபுரந்து ஊட்டும் உயர்பேர் ஒழுக்கத்துப்
புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி
வையை யென்ற பொய்யாக் குலக்கொடி
தையற்கு உறுவது தான் அறிந்தனள் போல்
புண்ணிய நறுமலர் ஆடை போர்த்துக்
கண்ணிறை நெடுநீர் கரந்தனள் அடக்கப்
புனல் யாறு அன்று இது; பூம்புனல் யாறு என
அனநடை மாதரும் ஐயனும் தொழுது

எனவரும் பகுதி இனிது காட்டுகின்றது.

உலகத்திலே ஒருவன் ஒழுக்கத்தினின்று தவறி விதியின் கையிலே சிக்கினுன் என்ருல் அவன் மட்டும் அழிவதில்லை. அவனைச் சேர்ந்தவர்கள் யாவரும் அழிகிருர்கள். ஆகையால் தான், ''ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்'' என்று பெரியவர்கள் கூறி, தம்முடைய நிலைமறந்து எதனிலும் ஆசை எவரும் வைக்கக் கூடாது என்று கூறுகின்றனர். தசரதன் இராமன்பால் வைத்த தீராத காதலினுல் இறந்தான். பழியின் பேரில் வெறுப்பும், அறத்தின் பேரில் பெரிய ஆசையும் கொண்ட கைகேயி, வாய்மையும் மரபும் காப்பதற்காகப் பழியை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலை அவட்கு ஏற்பட்டது. இதுபோல ஆசையினுல் பலர் இன்னலுற்றவர். புகழுக்காக ஆசைப்பட்ட கர்ணனும் பாரியும் மடிந்தனர் என்ருல் ஆசையின் சக்திதான் என்னே! மதுரைக்குச் சென்று பெரிய செல்வத்தை அடைந்து சீரும் சிறப்பும் பெற்று வாழலாம் என்று ஆசையுடன் கண்ணகியும் கோவலனும் செல்லுகிருர்கள்.

புறஞ்சேரியிறுத்த காதையில், இளங்கோவடிகள் மாதவி திக்கற்றவளாயினுள் என்பதைக் கோவலன் அறிந்து கொண்டு விட்டான் என்பதைத் தெள்ளத் தெளியக் காட்டி விடுகிருர். கோவலன் இந்த உண்மையை அறியாது மதுரைக்குச் செல்வானேயானுல் அவனுடைய மனத்திலே பெரும்பாரம் தாக்கிக்கொண்டே இருந்திருக்கும். அவன் இந்த உண்மையைத் திரும்ப வேறு ஓரிடத்திலும் அறிய

வாய்ப்புக் கிடைக்காமலே போய்விடும். ஆகையால்தான் இளங்கோவடிகளும், கோவலன் மதுரை செல்லுமுன்பே நமக்கும் கோவலனுக்கும் மாதவி மாண்பு மிக்கவள் என்பதைத் தெளிவுபடுத்தி விடுகிறுர். ''நல்லார் அனைவரும் அல்லல் உறுவதும், அல்லார் எல்லாம் நன்மை பெறுவதும் இப்பொல்லா உலகில் பொருந்துவனவாகும்'' என்பதற்கு மாதவியும் கண்ணகியும் ஏற்பப் பிறருடைய செயல்களுக்காகத் துன்பத்தை ஏற்றனர்.

வான்மீகியின் காலம் வரலாற்று வரையறை கடந்தது என்பர். அவற்கு முன்னமே பாண்டியனும், மதுரை மக்களும் சங்கப் புலவர்களும், செந்தமிழின் இனிமையிலே திளைத்து வாழ்ந்து வந்தனர். வையை நதியில் தவம் செய்து வந்த வைசந்த மனு இராமனுக்கு இருபத்தொரு தலைமுறைக்குமுன் வாழ்ந்து வந்தவனென்றுல், மதுரையின் தொன்மை சொல்லுவதற்கும் முடியாததாகும். இதனாலன்றே அடிகளும் ''வையை என்ற பொய்யாக் குலக்கொடி'' என்று சிறப்பித்துக் கூறுகின்றுர். பாண்டிய நாடே பழம் பதி என்று பிறரும் கூறுவர். அத்தகைய பழம் பதியான மதுரையைக் கபாடபுரம் என்று வடவர் கூறுவர். கபாடம் என்றுல் கதவு, நான்கு மாடங்களை உடைய மதுரையிலே பெரிய கதவுகள் அமைந்திருந்ததனுல் அதற்குக் கபாடபுரம் என்றும் புலவர் பெரு மக்களெல்லாம் அங்கே கூடியதால், அதற்குக் கூடல் நகரம் என்றும் பெயர்கள் வருவதாயின. ''அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றுகும்'' என்ற உண்மையை, மதுரை மன்னன் மூலமாகக் காட்ட நினைக்கின்றுர் அடிகள். ''நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே'' என்று அஞ்சாது ஆண்டவனையே எதிர்த்து வாக்கு வாதம் செய்யச் செய்த மண் அல்லவா மதுரை மண்! தம்முயிர்க்கு உறுதி எண்ணுது, அரசன் வெகுண்டபோதும், பாண்டிய நாட்டிலே, அவனது வெம்மையைத் தாங்கி நீதியை விடாது எடுத்துக் கூறுவார்கள். அரசனுக்கு ஒரு நீதி, மக்களுக்கு ஒரு நீதி அங்கு இல்லை. ஆங்கிலத்தில் கூறுவதுபோல் ஆராய்ந்து

துணிவதில் தவறினும் (*Error of judgment*) அதற்கும் நீதிபதி தண்டனைக்குள்ளாக வேண்டியதுதான்.

திருவுடை மன்னனைக் கண்டால் திருமாலைக் கண்டேன் என்று கூறும் மக்கள் ஆண்டவனின் சாயலான மன்னன் குற்றமுடையவன் என்பதைக் கண்டால் நெஞ்சு பொறுக்க மாட்டார்கள். மன்னன் தவறமாட்டான்* என்ற எண்ணம் மக்களிடையே பதியவேண்டும். அப்படித் தவறின் வாழ மாட்டான் என்ற எண்ணம் நிலைபெற வேண்டுமென்று அந் நாட்டுத் தமிழ் மன்னர்கள் நினைத்தார்கள்; செய்தார்கள். இல்லையேல் மடிந்தார்கள் என்பதனால் பாண்டியனின் பண்பட்ட உள்ளத்தைத்தான் நாம் சிலப்பதிகாரம் காட்டக் காண்கின்றோம்.

புறஞ்சிறைப் பொழிலும் பிறங்கு நீர்ப்பண்ணையும்
இறங்குகதிர்க் கழனியும் புள்ளெழுந்து ஆர்ப்ப
புலரி வைகறைப் பொய்கைத் தாமரை
மலர்பொதி அவிழ்த்த உலகு தொழு மண்டிலம்
வேந்து தலைபனிப்ப ஏந்துவாள் செழியன்
ஓங்கு உயர் கூடல் ஊர் துயில் எடுப்ப

மதுரைக்கு அண்மையிலுள்ள புறஞ்சேரியில் காலைக் காட்சியை அடிகள் வருணிக்கும் சிறப்பு இவ்வடிகளில் காணப்படுகின்றது.

சோலைகளிலும், நீர்நிலைகளிலும், வயல்களிலும், புள்ளினங்கள் ஒலி கிளப்பி நிற்கின்றன. பொய்கையின் அழகுடன் விளங்கும் தாமரை இதழ் விரித்து நின்றது. உலக மக்கள் எல்லோரும் தொழும்படியான சிறப்புமிக்க சூரிய மண்டிலம் ஆகாயத்தே காட்சி அளித்தது. பகைவேந்தர்களெல்லாம் அடங்கி வாழுமாறு வாள் ஏந்தி ஆட்சி புரிந்த பாண்டியனது கோநகரமாகிய மதுரையில் இரவெல்லாம் கவலையின்றித் தூங்கிய மக்கள் உறக்கம் நீங்கி விழித்தனர்.

இத்தகைய இன்பமிக்க காலை நேரத்தில் கூடல் நகரிலுள்ள கோயில்களிலும், பாண்டியன் அரண்மனையிலும் சங்

---

**King can do no wrong.*

கும் முரசும் முழங்கிய தன்மையைச் சிறப்பித்துப் பாடும் இளங்கோவடிகள்,

நுதல் விழி நாட்டத்து இறையோன் கோயிலும்
உவணச் சேவல் உயர்த்தோன் நியமமும்
மேழிவலன் உயர்த்த வெள்ளை நகரமும்
கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்
அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளியும்
மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்
வாள்வெண் சங்கொடு வகைபெற்று ஓங்கிய
காலை முரசு கனைகுரல் இயம்ப

என்று பாடுகின்றார்.

நெற்றிக் கண்ணை உடைய சிவபெருமான் கோயில், கருடக் கொடியையுடைய திருமால் கோயில், கலப்பைக் கொடியையுடைய பலராமன் கோயில், சேவற் கொடியை உடைய முருகன் கோயில், தவ முனிவர் வாழ்கின்ற தவப் பள்ளி, வீரம் செறிந்த அரசர் வாழும் அரண்மனை ஆகிய இவ்விடங்களிலெல்லாம், கதிரவன் உதித்தபடியால், சங்கு ஒலித்தது; முரசம் முழங்கியது.

அடிகள், சிவபெருமானை இறைவன் என்ற பொதுப் பெயரால் கூறுகின்றனர். இறைவன் என்பதற்கு எல்லா உயிர்களும் தங்குவதற்கு நிலைக்களமாக இருப்பவன் என்பது பொருள். இதை ஒட்டியே கம்பனும் தசரதனைக் கூறுமிடத்து "சென்று நின்று வாழ் உயிரெல்லாம்... உடலமாயினான்" என்றார். மக்களைப் பாதுகாப்பதாலும், அவர்கள் தங்கும் நிலைக்களமாக நிற்பதாலும் அரசர்கள் இறை என்று கூறப்பட்டார்கள். திருவள்ளுவரும் "முறை செய்து காப்பாற்றும் மன்னவன், மக்கட்கு இறை என்று வைக்கப் பெறும்" என்று கூறுகின்றார். ஆகையால் முழுமுதற் கடவுள் சிவபெருமான் என்பதையே அடிகளும் கருத்தில் கொண்டுள்ளார் என்பது புலனாகிறது.

இரவெல்லாம் நடந்துவந்த களைப்பினுல் ஒரு பக்கம் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த கவுந்தி அடிகளை நோக்கி, நான் நெறிதவறியவனுனேன். என்னுடைய மெல்லியலாளாகிய கண்ணகி, நடுக்கம் கொள்ளும்படி, முன்பின் அறியாத வேற்று நாட்டில் வந்து துன்புற்றேன். இந்தப் பழைமையான மதுரை நகரில், மன்னருக்கு அடுத்த வரிசையில் எண்ணப்படும் வணிகர்களுக்கு, என்னுடைய இழிந்த நிலையை எடுத்துக் கூறி, நான் திரும்பி வரும்வரை, கண்ணகி நின்னுல் காக்கப்படுதல் வேண்டும்'' என்று கூறினுன். இதனை,

''கோவலன் சென்று கொள்கையின் இருந்த
கவுந்தி ஐயையைக் கைதொழுது ஏத்தி
நெறியின் நீங்கியோர் நீர்மையே னுகி
நறுமலர் மேனி நடுங்குதுயர் எய்த
அறியாத்து தேயத்து ஆரிடை உழந்து
சிறுமை யுற்றேன் செய்தவத்தீர் யான்''

என்று அடிகள் கூறுகின்றூர்.

இவ்வாறு வருத்தப்பட்டுக் கூறிய கோவலனைத் தேற்ற கவுந்தி அடிகள்,''உலகில் அறிவிற் சிறந்த பெரியோர்கள், எவ்வளவுதான் அறவுரை கூறினுலும், மக்கள் எளிதில் ஏற்றுக் கொள்வதில்லை. தனக்கு ஒரு தீங்கு நேர்ந்த காலத்தில் வருத்தம் கொள்ளுவது அறியாமை. பிரிவினுல் வரும் துன்பமும், புணர்தலால் வரும் துன்பமும் மன்மதனுல் ஏற்படும் துன்பமும், இல்லறத்தார்க்கே அல்லாது துறவிகளுக்கு இல்லை; இல்லறத்தால் துன்பம் அடைவது இயல்பே. இஃது இன்று நேற்று அல்ல. பல நூற்றூண்டுகளுக்கு முன்னரே இத்தகைய நிகழ்ச்சிகள் நடைபெற்று வந்துள்ளன'' என்று சொல்லித் தேற்றினுர்.

## 16. அடைக்கலக் காதை

கோவலன் தான் பெரும் பிழை செய்துவிட்டதாக எண்ணி எண்ணி ஏங்கினன். இதை உணர்ந்த கவுந்தி அடிகள் அவனைத் தேற்றினர். கோவலன் பிரிவின் துன்பத்தை அறிந்தவனல்லன். வறுமையின் கொடுமைகளையும் அறிந்தவனல்லன். பிறர் சூழ்ச்சியால் துன்பப்பட்டவனுமல்லன். அதனுல் அவன் யாரையும் குறை கூறிக்கொள்ள வேண்டியதில்லை. இந்த உண்மைகளைக் கவுந்தி அடிகள் இரண்டு எடுத்துக் காட்டுகளின் மூலம் கூறுகிறுர்.

நமது நாட்டுப் புராண இதிகாசங்களில் இராமாயணம் மிகவும் சிறந்தது. உயர்ந்த பண்பாட்டுள்ளம் கொண்டு எல்லோரும் தன்னை விரும்புமாறு செய்பவனுகிய இராமனுடைய குண நலங்களைக் கூறுவது அக்காவியம். அந்தக் காவியத் தலைவன் அரசியல் சூதில் சிக்கி நாட்டைவிட்டு வெளியேறும்படியான நிலைமை ஏற்பட்டது. கைகேயிபெற்றிருந்த வரத்தின் காரணமாக இராமன் காடு சென்ருன்; அங்கே தன் மனைவியை இழந்தான். ஏறத்தாழ ஓர் ஆண்டு பிரிவென்னும் துன்பத்தினுல் மனம் வாடினுன்.

இராமனது துன்பத்திற்கு அடுத்தபடியாகக் கூறப்படுவது நளனுடைய சோகக் கதை. அவனும் தன் மனைவியாகிய தமயந்தியைப் பிரிந்து வருந்தினுன். நளன் ஒரு மன்னனுயிருந்தும் தன் மனைவியைப் பிரிந்து வேற்று நாட்டிலே அடிமையாக வாழவேண்டியவனுனன்.

கவுந்தி அடிகள் வருந்தி நின்ற கோவலனை நோக்கி, "மகனே, சிராமனும், நளனும் தம் மனைவியைப் பிரிந்து

வருத்தமுற்றனர். ஆனுல் நீயோ மனைவியுடன் வாழ்கிருய். மேலும் உன்னுடைய தாய்தந்தையரோ மிகவுல் சீரும் சிறப்பும் பெற்று வாழ்கிருர்கள். ஏன் உனக்கு வருத்தம்?'' என்று கூறுகிருர். துன்பம் வரும் காலத்தில் தம்மைக் காட்டிலும் மிக்க துன்பங்களை அனுபவிப்பவர்களை எண்ணும்போது தம்முடைய துன்பம் குறைவாகவே தெரியும்.

கோவலன் பெருஞ்செல்வனுகப் பிறந்தவன். அவன் தன் நாட்டைவிட்டு, வேறு இடத்திற்குச் செல்வதையே பெருந் துன்பமாகக் கருதினுன். ஆனுல் இராமன் நளன் போன்ற பெரு மன்னர்களும் கானகத்தில் காலமெல்லாம் வாழ்ந்து வந்தார்கள் என்பதை நினைக்கும்போது கோவலன் பட்ட துன்பம் பெரிதாகக் கருதப்படுவதற்கில்லை. பிறந்தவர்கள் எல்லாம் துன்பத்தை அடைவதுதான் இயற்கை. அறிவு, குணம், செல்வம், எல்லாம் இருந்தபோதிலும், வினையின் சூழலில் அகப்பட்டு நாம் துன்பது அனுபவிக்கிருேம். இந்தத் தத்துவத்தைக் கூறுவதற்குத்தான், புராணங்கள், இதிகாசங்கள், நாடகங்கள் எல்லாம் தோன்றியுள்ளன. இளங்கோவடிகளும், விதியின் வலிமையைக் கூறவே சிலப்பதிகாரத்தை எழுதினுர். சமயங்களெல்லாம், ''பிறந்தவர்கள் பெறுவது எல்லாம் துன்பம், பிறவாதவர்களே பேரின்பத்தை அடைகிருர்கள்'' என்று கூறுகின்றன. இந்த தத்துவத்தைத்தான் சிலப்பதிகாரம்,

''பிரிதல் துன்பமும, புணர்தல் துன்பமும்
உருவிளாளன் ஒறுக்கும் துன்பமும்,
புரிகுழல் மாதர்ப் புணர்ந்தோர்க்கு அல்லது
ஒரு தனி வாழ்க்கை உரவோர்க்கு இல்லை;
பெண்டிரும் உண்டியும் இன்பமென்று உலகில்
கொண்டோர் உறூஉம் கொள்ளாத் துன்பம்
கண்டனராகிக் கடவுளர் வரைந்த
காமம் சார்பாக் காதலின் உழந்தாங்கு
ஏமம் சாரா இடும்பை எய்தினர்
இன்றே யல்லால் இறந்தோர் பலரால்;
தொன்று படவரும் தொன்மைத்து ஆகலின்

தாதை ஏவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
காதலில் பிறிந்தோன் அல்லன் காதலி
வேத முதல்வன் பயந்தோன் என்பது
வல்லாடு ஆயத்து மண்ணரசு இழந்து
மெல்லியல் தன்னுடன் வெங்கான் அடைந்தோன்
நீயறிந்திலேயோ? நெடுமொழியன்றோ!
தீதொடு படூஉம் சிறுமையல்லள்
அடவிக் கானகத்து ஆயிழை தன்னை
இடையிருள் யாமத்து இட்டு நீக்கியது
வல்வினையன்றோ?''

என்று கூறுகிறது.

கோவலனுக்கு வந்த துன்பத்தைவிடப் பெருந்துன்பம் பிறரும் அனுபவித்தனர் என்று கவுந்தி அடிகள் கூறித்தேற்றிய பின் கோவலன் மதுரை நகருக்குப் புறப்பட்டான். மதுரை நகரம் காவற் காடு சூழ்ந்த அகழியையும் யானைக் கூட்டங்கள் செல்கின்ற சுருங்கை வீதிகளையும் எந்திரப் போர்க்கருவிகள் வைக்கப்பெற்ற கோட்டை கொத்தளங்களையும் உடையது. அந்தக் கோட்டை வாயிலில் வெற்றிக் கொடி ஆடிக் கொண்டேயிருக்கும். எந்த நேரமும் அங்கு யவனர்கள் போர்க் கருவிகளைத் தாங்கிக்காவல் புரிந்து நிற்பர். இந்த யவனர்கள் தன்னை ஐயுருதவண்ணம் கோவலன் கோட்டைக்குள் நுழைந்து மதுரை நகருட் புகுந்தான்.

மதுரை நகருள் நுழைந்த கோவலன் முதற்கண் காவற் காடு சூழ்ந்த நீர்நிறைந்த அகழியினைக் கண்டான். அந்த நாளிலே போர் அச்சம் மிகுந்திருந்தது. ஆகையால், மதுரை மாநகரைச் சுற்றிலும் போர்க் கருவிகள் பலமிகுந்து காணப்பட்டன. அங்கு உள்ள கோட்டையிலே எந்திரப் போர்க் கருவிகளும் அவற்றைச் செய்யும் சாதனங்களும் இருந்தன. தானே வளைந்து பகைவர்களைத் தாக்கும் விற்பொறி, பகைவர்கள்மேல் சுடுகற்களை எறியும் கவண் முதலிய அஞ்சத்தக்க பல போர்க் கருவிகள் அங்கே பெருகியிருந்தன. நமது நாட்

டிற்கும் கிரேக்க நாட்டிற்கும் நெடுங் காலமாகத் தொடர்பு இருந்து வந்தது. கிரேக்கர்களை யவனர்கள் என்று அழைப்பர். அந்த யவனர்களை (அயோனியர்களை)த் தமிழரசர் காவற்காரர்களாக அமைத்திருந்தனர். இந்நாளிலும் பெருவாரியான இடங்களில் கூர்க்க தேசத்தவர்களைத் தமிழ் நாட்டில் காவலாளிகளாக நியமிப்பதைக் காண்கிறோமல்லவா? அது போலவே பாண்டிய நாட்டிலும் அந்நியர்களைக் காவலாளிகளாக வைத்திருந்தனர். கோவலன் எவரும் ஐயுறுவண்ணம் மதுரை நகருக்குட் சென்றான் என்று முன்பு கண்டோம்.

அவ்விதம் நுழைந்த கோவலன் அந்நகரின் பல்வேறு வீதிகளையும் சுற்றிப் பார்த்தான். அப்பொழுது அவன் கண்ட மதுரை நகரின் நலத்தைச் சிறிது காண்போம். மதுரை நகர்க் காட்சிகளை வருணிக்கப் போந்த இளங்கோவடிகள், சிறு பொழுதாகிய காலை முதலியவற்றையும் பெரும் பொழுதாகிய கார் முதலிய பருவங்களில் சிறப்பினையும் வருணித்திருப்பது மிக்க இன்பம் பயப்பதாகும். கோவலன் மதுரை நகருக்குள் சென்ற காலம் முதுவேனிற் காலம். அதனால் மேற்காற்று வீசத் தொடங்கியது. கோட்டை மதில்களின் மீது கட்டப்பட்டிருந்த கொடிகள் அசைந்து ஆடின. காலை நேரத்தில் பொதுமகளிர் தத்தம் காதலர் சூழ வையையில் நீராடும் பொருட்டுத் திருமருதந்துறையை அடைந்தனர். அடைந்ததும் அங்கிருந்த ஓடங்களில் ஏறி அவற்றை இயக்கியும் நீரில் விழுந்து நீந்தியும் மகிழ்ச்சி அடைந்தனர். நண்பகலில் குளிர்ந்த சோலையினிடத்துச் சென்று பொழில் விளையாட்டு அயர்ந்தனர். அப்பொழுது, மகளிர், முல்லை குவளை முதலிய மலர் மாலைகளையும் கொற்கைத் துறைமுகத்தில் கிடைத்த முத்துக்களால் ஆகிய மாலைகளையும் அணிந்தும் பொதிய மலையில் கிடக்கும் சந்தனத்தைப் பூசியும் மகிழ்ந்தார்கள். இதனை இளங்கோவடிகள்.

''தண்ணறும் முல்லையும் தாழ்நீர்க் குவளையும்
கண்ணவில் நெய்தலும் கதுப்புற அடைத்த

வெண்பூ மல்லிகை விரியலொடு தொடர்ந்த
தண்செங் கழுநீர்த் தாதுவிரி பிணையல்
கொற்கையம் பெருந்துறை முத்தொடு பூண்டு
தெக்கண மலயச் செழுஞ்சேறு ஆடிப்
பொற்கொடி மூதூர்ப் பொழிலாட்டு அமர்ந்து''

எனச் சிறப்பித்துள்ளார். இவ்வாறு காலே நண்பகல் நிகழ்ச்சிகளை வருணித்த அடிகள் மாலையில் அம்மகளிரும் மைந்தரும் மனமகிழ்ந்து மலரமளிமேல் இருக்கும் நிலையை,

'எற்படு பொழுதில் இளநிலா முன்றில்
தாழ்தரு கோலம் தகைபாராட்ட
வீழ்பூஞ் சேக்கைமேல் இனிது இருந்து'

என்று உரைப்பாராயினர். இனி ஆசிரியர் பெரும் பொழுது ஆறனையும் பாட முற்பட்டு முதலில் கார் காலத்தின் தன்மையையும் அக்காலத்தில் மதுரை மக்களது நிகழ்ச்சிகளையும் விரிக்கின்ருர். அப்பொழுது மகளிர் சிவந்த பட்டாடையை அரையிலே உடுத்து வெட்பாலைப் பூவைச் சூடி சிறு மலையில்தோன்றிய செங்கூதாள மலருடன் குறிஞ்சி மலரையும் அணிந்துள்ளார். செந்துரம் குங்குமம் முதலிய சிவந்த சுண்ணங்களை அம்மகளிர் பூசியிருந்தனர். அக்காட்சி வச்சிரப் படையை உடைய இந்திரனுக்குச் செவ்வணி காட்டுவது போல் இருந்தது. இவை எல்லாம் கார் காலத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகள். கார் காலம் ஆகிய ஆவணி புரட்டாசி மாதங்கள் கழிந்து கூதிர்காலம் வந்தது. அப்பொழுது மதுரை மகளிர் சிற்பக்கலை வல்லவர்களால் அழகாகக் கட்டப்பட்டிருந்த மாடமாளிகைகளின் மேனிலையில் அமர்ந்து அகிற் கட்டைகளை எரியூட்டி நெருப்பை வளர்த்துத் தத்தம் காதற் செல்வர்களோடு குளிர் காய்ந்தனர். இது கூதிர் காலமாகிய ஐப்பசி கார்த்திகை மாதங்களில் நடைபெறுவதாகும்.

இனி முன் பனிக்கால நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறும் ஆசிரியர், பெரிய வளமனைகளின் முற்றத்திலே மைந்தரும்

மகளிரும் இருந்து, தென்பக்கமாக இயங்கும் சூரியனது இளவெயிலை நுகர்ந்தும், முன்பனியாதலால் ஆகாயத்தில் வெண்மேகங்கள் தெளிவாக இல்லாமல் மங்கித் தோன்றும் படியான காட்சியைக் கண்டும் இன்புறுவர் என உரைத்துள் ளார். இனிப் பின்பனிக்காலமாகிய மாசி, பங்குனி மாதங் களில் கடற்கரை பட்டினமாகிய தொண்டி அரசர்கள் திறையாகக் கொடுத்த அகில், பட்டு, சந்தனம், கருப்பூரம் முதலியவற்றின் நறுமணத்தினைத் தாங்கி மேகங்கள் சூழ்ந்த கூடல் நகரில் கீழ் காற்ருேடு காமனது விழாவைக் கண்டு களிப்பதற்காகப் பின்பனிக்காலமாகிய அரசன் வந்தான் என வருணித்துள்ளார் இளங்கோவடிகள்.

இனி ஆசிரியர் இளவேனிற் காலத்தின் எழிலைப் பாராட்டியிருப்பது மிக்க நயமுடையதாகும். இக்காலத்தில் மாதவி என்னும் பெயருடைய குருக்கத்திக் கொடி நன்கு வளர்ந்து செழிக்கும். பூஞ்சோலைகளும் நந்தன வனங்களும் நன்கு பூத்து நறுமணத்தைக் கொடுக்கும். தென்னவனுகிய பாண்டியனது தலைநகரில் தென்றல் காற்று இனிமையுடன் வீசும். இதனை,

‘கோதை மாதவி கொழுங்கொடி எடுப்பக்
காவும் கானமும் கடிமலர் ஏந்தத்
தென்னவன் பொதியில் தென்றலொடு புகுந்து
மன்னவன் கூடல் மகிழ்துணை தழூஉம்
இன்இள வேனில் யாண்டுளன் கொல்’

என வியந்து போற்றுகின்றது சிலப்பதிகாரம். இறுதியாக முதுவேனிற் காலத்தில் பெண் யானைகளையும் கன்றுகளையும் உடைய களிறுகளும் நடுங்கும்படியான கொடிய வெப்பத் தைக் கக்கும் கோடையின் இயல்பும் கூறப்படுகிறது.

கோவலன் மதுரையின்கண் வந்த காலம் சித்திரை மாதம். கோடையின் வெப்பம் மிகுந்த காலம். மலைக் காடு களில் வெயில் வெதுப்புகிறது. அதனுல் அந்நாட்டு மக்கள்

சென்ற பருவ காலங்களைப் பற்றி நினைந்து நினைந்து உருகுவர். அவ்வக்காலங்களில் தாம் அனுபவித்த சுகங்களை எண்ணி எண்ணி, "அக்காலம் எல்லாம் எங்கோ, எப்படியோ ஓடிப் போயினவே" என்று எண்ணுவர்.

கம்பன் கண்ட இருபெரும் நாடுகளிலும், நாம் தேவ லோகத்தின் இயற்கையைக் காண்கிறோம். அயோத்தியிலும், இலங்கையிலும், ஆடல், பாடல், அழகுகளையும், ஊடம், கூடல் முதலியவற்றையும் வருணித்திருப்பதுபோல் இளங்கோவடிகளும், பாண்டிய, நாட்டிலே, நுண்கலை எத்தனைத் தூரம் வளர்ந்து விரிந்திருந்தது என்பதை நமக்கு தெரிவிக்கின்றார். ஒரு நாடு செல்வத் திருநாடாகத் திகழ வேண்டுமானால் அங்கு நல்லாட்சி அமையவேண்டும். பாண்டிய நாட்டிலே, நல்லாட்சி அமைந்திருந்தது. ஆனால், வாழ்க்கைத் தரம் முறையே உயர்ந்து போகும்போது அதற்கு இணையாக வாழ்க்கை முறை உயருவதில்லை. சிற்றின்ப வாழ்விலே களிக்கும் மக்கள் பெருகிய பின் கள்ளும் காமமும் இடம் பெறுகின்றன. மக்கள் உண்டு உறங்க ஆரம்பிக்கும்போது, கள்ளும் காமமும், பல தீய வழிகளில் மக்களைச் செலுத்தி விடுகிறது. திருட்டு, கொலை முதலான பஞ்சமா பாதகங்களும் பெருகத் தொடங்கி விடுகின்றன அந்த நிலையில்தான் பாண்டிய நாடும் இருந்தது என்பதை அடிகள் கூறுகின்றார்.

மதுரை மாநகரிலே, கோவலன் பாண்டியனது செங்கோலின் செம்மையைக் கண்டான். அந்த வெண்கொற்றக்குடையின் குளிர்ச்சியைக் கண்டான். பாண்டிய வீரர் வேலின் கொற்றத்தைக் கண்டான். மன்னன் மன்னுயிரையெல்லாம் தன்னுயிர் போலக் காப்பாற்றும் பண்பைக் கண்டான் ஆனால் அங்கேயும் சூதும் வாதும் நிறைந்த மக்கள் இருப்பார்கள் என்பதை அவன் அறியவில்லை. மதுரைக்கு வரு முன்பே நாம் மதுரையின் செல்வத்தை எப்படியாவது திருட்டு மூலமாகப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று வேட்டுவர் பலர் கொற்றவையை வணங்கியதையும் கண்

டோம். அந்தத் திருட்டுக்குத் துணையாக மதுரை நகரிலும் பலர் துணைசெய்து வந்தனர் என்பதையும் அறிகிறோம். பொன்னும் மணியும் பூத்துக் குலுங்கும் மதுரை மாநகரம், தனக்கு மீண்டும் வாழ்வு அளிக்குமென்று கோவலன் எண்ணினான்.

வாழ்வு தேடிவந்த கோவலன், மதுரை நகரத்தின்கண் வாழும் பொதுமகளிரிடங்கள், இரத்தினக் கடைத்தெரு, கூலக்கடைத் தெரு, அரசர் வீதி முதலிய பல்வேறு தெருக்களையும் சுற்றி அலைந்து திரிந்து மக்கள் இயல்புகளைக் கண்டு புறஞ்சேரிக்குத் திரும்பினான்.

கோவலனோ ஒரு பெருஞ்செல்வன்; தான் பெற்ற செல்வத்தை எல்லாம் மங்கையின் மையலிலே இழந்தான்; பொறுப்பற்றவன்; இவ்வளவுதான் உலகம் கோவலனைப் பற்றி அறிந்திருப்பது. ஆனால் அவன் பண்பாளன் என்பது அடிகளின் கருத்து. ஓர் அவலக் கதைக்குத் தலைவனாக விளங்குபவன்; பல சிறந்த குணப் பண்பாடுகளை உடையவனாக இருத்தல் வேண்டும். அப்படிப் பல சிறந்த குணங்களைப் படைத்திருந்தும் ஒரு பெரிய பிழை செய்துவிட்ட காரணத்தால், துன்பத்தில் உழல நேர்ந்தது. கோவலனுடைய சிறந்த குணங்களை மாடலன்மூலம் அடிகள் நமக்கு விளக்குகிறார்.

மாடலன் ஓர் அந்தணன். அவன் கோவலனை முன்பே அறிந்தவன்; அம்மட்டோ! நீண்ட காலத் தொடர்புடையவன். மாதவிக்கு மகள் பிறந்தபோது கோவலன் கூறிய வார்த்தைகள் அவன் செவிகளில் ஒலித்துக் கொண்டிருந்தன. "இடுக்கண் வந்த காலத்துத் தன் முன்னோரைக் காத்த குலதெய்வமான மணிமேகலா தெய்வத்தின் பெயரை இடுக" எனக் கூறினான். இதனால், கோவலனை நிறைந்த தெய்வ பக்தி உடையவன் என்பதை அறிகிறோம். பொய்ம்மை நிறைந்த இவ்வுலகம் ஏன் இன்னும் வாழ்கின்றது என்பதை விளக்கப் போந்த ஒரு தமிழ் அறிஞர், "தனக்கென வாழாது பிறர்க்கு உரியவர்களாய் வாழும்

பெருமக்கள் வாழ்வதினுல்தான் இவ்வுலகம் நிலைபெறுகிறது. எனக் கூறினர்; கோவலன் தன் மகள் மணிமேகலை பிறந்த நாளன்று, பொன்னும் மணியும் வாரி வாரிக் கொடுத்தான், பழமரம் நாடிப் பறவைகள் வருவதுபோல் இரவலர் பலர் கோவலனை நாடிவந்தனர். "ஊருணி நீர் நிறைந்தற்றே உலக வாம் பேரறிவாளன் திரு" என்பதற்கேற்பக் கோவலனு டைய செல்வம்எல்லோருக்கும் பயன் தந்தது. அங்குக் கோவ லன் கொடுத்த பொருளை வாங்கவந்த அந்தணன் ஒருவனை, ஒருமதங்கொண்ட யானை பிடித்துஅடித்துக் கொல்லச் சென் றது. அந்த யானையின் பிடிகளிலே அகப்பட்டுக் கொண்ட அவனது உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. அந்நிலையில் மற்றவர்களெல்லாம் வாயளவிலே, "ஐயோ, ஐயோ" என்று அலறி இரக்கப்பட்டார்களேயன்றி யாரும் அவனுக்கு உதவி செய்ய முன்வரவில்லை. ஆனுல், கோவலன் விரைந்து சென்று அவனைக் காப்பாற்றினுன். தன்னுயிரைப் பெரிதெனக் கருத வில்லை அவன். இதனை ஆசிரியர் இளங்கோவடிகள்,

'வளைந்த யாக்கை மறையோன் தன்னைப்
பாகு கழிந்து யாங்கணும் பறைபட வருஉம்
வேகயானை வெம்மையின் கைகொள
ஒய்யெனத் தெழித்து ஆங்கு உயர் பிறப்பாளனைக்
கையகத்து ஒழித்து அதன் கையகம் புக்குப்
பொய்பொரு முடங்குகை வெண்கோட்டு அடங்கி
மையிருங் குன்றின் விஞ்சையன் ஏய்ப்பப்
பிடர்த்தலை இருந்து பெருஞ்சினம் பிறழாக்
கடக்களிறு அடக்கிய கருணை மறவ'

எனப் பாராட்டுகின்ருர்.

மாடலன் கண்முன்னே,கோவலனுடைய அந்தக் கருணை யும் வீரமும் நிறைந்த காட்சி நின்றது. மாடலனுக்கு இவ் வரிய குணங்களெல்லாம் ஒருவனுக்குச் சாதாரணமாக அமை யக் கூடியவை அல்ல என்பது புலப்பட்டது. மனிதகுல மாணிக்கமாக அவனுக்குக் கோவலன் காட்சி தந்தான்

இவ்வெண்ணங்கள் மேலிடவே "கோவல, நான் அறிந்த வரையிலும் நீ யாருக்கும் கெடுதல் செய்தவனல்லன். நீ இன்றுவருந்துவது முன்செய்த வினைப்பயன்தான்" என்றான்.

இளங்கோவடிகள், கோவலன் ஒழுக்கசீலன் என்பதை மூன்று சான்றுகள் கொண்டு காட்டுகின்றார். வீரத்திற்கு எடுத்துக்காட்டாக நின்றது அவன் அந்தணனை யானையின் பிடியினின்று காப்பாற்றியது. அவனுடைய கொடைக்கும் கருணைக்கும் சான்று தருகிறார் மற்றொரு சம்பவத்தின் மூலமாக. ஒரு மறையவன் நெடுங் காலமாகப் பிள்ளையில்லாமலிருந்தான். ஆகையால் அவனும் அவன் மனைவியும் ஒரு கீரிப் பிள்ளையை மகவென வளர்த்தனர். சிறிது காலம் சென்ற பின் அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது. ஒருநாள் கணவனைப் பிள்ளைக்குக் காவலாக வைத்து மனைவி நீர் கொண்டு வரச் சென்றாள். குழந்தை தொட்டிலில் உறங்கிவிட்டது கண்ட அந்த அந்தணன், வெளியில் சென்றுவிட்டான். கீரிப் பிள்ளை குழந்தையைக் காத்திருந்தது. அவ்வேளை அங்கே ஒரு பாம்பு வந்தது கண்ட அக்கீரிப்பிள்ளை அதைக் கொன்று பிள்ளையைக் காப்பாற்றியது. அதனால் அக்கீரியின்மீது இரத்தக்கறை பட்டிருந்தது. நீர்க் குடத்துடன் வந்த பார்ப்பனி கீரிப்பிள்ளையைக் கண்டாள். இரத்தக் கறையுடன் அது இருப்பது கண்டு "ஐயோ, இது பிள்ளையைக் கடித்துக் கொன்றுவிட்டாதே என நீர்குடத்தை அதன்மேல் போட்டு நசுக்கிக் கொன்றாள். பின்னர்க் குழந்தை தொட்டிலில் அயர்ந்து தூங்குவதைக் கண்டு, தான் ஆராய்ந்து செய்யாமல், ஆத்திரத்தால் குழந்தையைக் காப்பாற்றிய கீரிப் பிள்ளையைக் கொன்றேனே என்று வருந்தினாள். அவள் கணவன், அவள் மேல் கோபங் கொண்டு வடமொழியில், ஒரு சுலோகத்தை எழுதி அவளிடம் கொடுத்துத் துறத்திவிட்டான். அதில் "எதையும் ஆராய்ச்சியின்றிச் செய்யற்க; நன்றாக ஆராய்ந்து செய்வன செய்க; இன்றேல்; உதவி செய்த கீரியைக் கொன்ற பார்ப்பனி போல வருந்த நேரிடும்" என்று எழுதியிருந்தது. அதனை எடுத்துக்கொண்டு ஊரூராய்த் திரிந்த அவள் ஒரு நாள் கோவலனைக் கண்டு

அவன் கையில் அச்சுலோகம் எழுதிய ஓலை சுருக்கைக் காட்டி நீங்கினாள். அது கண்டதும் அவன் அந்தப் பெண்ணைக் கூவிழைத்து "அஞ்சாதே உன் துன்பம் துடைப்பேன்" என்று கூறி அவள் பாவம் தீர வேண்டியவற்றை உதவினான். இதனைச் சிலப்பதிகாரம்,

'அஞ்சல் உன்றன் அருந்துயர் களைகேன்
நெஞ்சுறு துயரம் நீங்குக என்று ஆங்கு
ஒத்துடை அந்தணன் உரைநூல் கிடக்கையில்
தீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத்
தானம் செய்து அவள் தன்துயர் நீக்கிக்
கானம் போன கணவனைக் கூட்டி
ஒல்காச் செல்வத்து உறுபொருள் கொடுத்து
நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ!

என்று புகழ்ந்து சிறப்பித்துள்ளது. பின்னர் ஒரு தீயோன் பத்தினி ஒருத்திமேல் ஐயுறும் பொய்ப்பழி சுமத்தினான். அவனைப் பூதம் புடைத்துண்ண முற்பட்டது. அன்பினால் அலறினாள் அவன் தாய். அப்பொய்யனின் அன்னை படும் துயரைக் காணத் தாங்காது கோவலன், அப்பூதத்தினிடம் சென்று, தன்னை உண்ணும்படிகேட்டுக்கொண்டான். ஆனால் அப்பூதம், அவன் சொற்களை ஏற்றுக்கொள்ளவில்லை. புதல்வன் இறந்ததைப் பற்றி வருந்தினாள் அவன் தாய். அவன் உறவினரைப் பசிப்பிணி அகலும்படி செய்தான் கோவலன். ஏழைகளின் செல்வமாய் இணையற்ற பல மேலான பண்புகளைக்கொண்ட கோவலன், ஏன் வருந்தவேண்டும்? இந்தக் கேள்வி மாடலனையும் ஆட்கொண்டது. அவன் சிந்தித்துப் பார்த்தான்; எவ்விதமான தெளிவும் அவனுக்கு வரவில்லை. கடைசியில் இப்பிறப்பில் கோவலன் நன்மையே செய்திருக்கவும் இவ்வாறு கண்ணகியுடன் புறப்பட்டு வந்து வழி வருத்தம் எய்தி வேதனைப்படுவது எல்லாம் இவனது முன்வினைப் பயனே என்று கூறுகிறான்.

'இம்மைச் செய்தன யானறி நல்வினை
உம்மைப் பயன்கொல் ஒருதனி யுழந்து இத்

திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது
விருத்த கோபால நீ' யென்

என்பது சிலப்பதிகாரம்.

இதைத்தான் விதி என்று கூறுகிறார்கள். கோவலன் சிறந்தவன்; ஆனால் அவனிடத்திலே சில குற்றங்கள் இருக்கத்தான் செய்தன. சந்திரனிடத்தில் உள்ள களங்கம்போல அவனிடம் சிலகுறைகள். ஆனாலும் அக்களங்கம் சந்திரனுக்கு அழகு தருவதுபோல், அக்குறைகள் அவனுடைய நல்ல குண இயல்புகளைப் பெரிதும் பாராட்டவே உதவுகின்றன.

கோவலன் ஒரு சிறந்த பண்பாளன். பாரியைப்போல் பசித்தவர்களுக்கெல்லாம் வாரிவாரி வழங்கினான். யானையையும் வெல்லும் விரம், அழகு.குணம்,கருணை,ஆண்மை யாவையும் ஒருங்கே அமையப்பெற்ற உத்தமன் அவன். ஆனால் குற்றமற்ற பொருளை உலகம் ஏற்காது என்ற காரணத்தால் கோவலனும் குற்றமுள்ளவனாகப் படைக்கப்பட்டான். எல்லாம் நன்றாக அமைந்துவிட்டால் கண்ணேறு பட்டுவிடும் என்று கூறுவார்கள். அதனால்தான், கடவுளைக் காணவேண்டுமென்று துடிதுடித்த அன்பர் இராமலிங்கனாரும் "கண்ணேறு படுமென்றோ கனவிலேனும் காட்டென்றால் காட்டுகிலாய்" என்று கசிந்து உருகிப் பாடுகிறார். பரவைகுந்தத்தில்இருந்து இறங்கிவந்து அவதரித்த திருமாலும் கண்ணேறுபடும் என்றுதான், தன் முழுச் சக்தியையும் காட்டவில்லை. கிறித்துவப் பாதிரியார் ஒருவரும், ஆண்டவனது முழு வடிவத்தையும் காணமுடியாது என்ற உண்மையைக் கொண்டு, "ஆண்டவனே உன்னுடைய திருமுகப் பொலிவைக் காட்டு என்று நான் கூறவில்லை; உன் திருவடிக்கமலத்தைத் தூர இருந்து காட்டினாலும் போதும். ஓர் அடி எடுத்து வைத்து என்னை இரட்சிக்க மாட்டாயா?" என்று கூறுகிறார். மேல்நாட்டிலும் சரி, கிழ்நாட்டிலும் சரி, ஆண்டவன் தன் முழு நலத்தையும் காட்டமாட்டான் என்ற நம்பிக்கையுடன் பலர் இருக்கிறார்கள். ஆண்டவனே தன் முழு நலத்தையும் காட்டப் பின்விடுகிறான் என்றால், மனிதர்கள் எவ்வாறு முழு

நலத்துடன் வாழமுடியும். அதனுல்தான் திருவள்ளுவரும், குணம் நாடிக் குற்றமும் நாடி, அவற்றுள் எது மிகுதியாக இருக்கிறதோ அதைப் பொறுத்தே ஒருவனை அறிந்து கொள்ளவேண்டும் என்று கூறுகிருர். கோவலன் செய்த ஒரு பெருங்குற்றம் மனைவியை விடுத்து மாதவியை அடைந்தது தான். அஃது ஒரு பெருங் குற்றமானுல் வேறு எத்துணையோ பேர்கள் இவனைக் காட்டிலும் பெருங் குற்றம் செய்ய வில்லையா? வாழ்தல் வேண்டி மனம் ஒன்றி வேறு யாரையும் கனவிலும் நினையாதுவாழ்ந்த மாதவியின் மையலில்வீழ்ந்த கோவலன் மட்டுமா மாயவேண்டும்? மனையாளிருக்க மாத வியை அடைந்தது குற்றம்தான்! ஆனுல் அதற்கு இத் துணைத் தண்டனையா? இந்த ஒரு குற்றத்திற்காகக் கோவ லன் துன்பமுறவில்லை என்பதே மாடலனது முடிவு. இது தான் அடிகளின் முடிவும் கூட.

கோவலன் தனக்குப் பல துன்பங்கள் வருமென நினைத் தான். காளிதாசன் கூறுவது போல, ''நல்லவர்களுக்கு ஐய மேற்படின், அவர்கள் உள்ளமே வழிகாட்டியாக நிற்கும்.'' கோவலனுடைய உள்ளுணர்வு அவன் நெடுங்காலம் வாழ மாட்டான் எனக் கூறியது. அருங்கலை விநோதனுக மாதவி யுடன் வாழ்ந்த வாழ்வு, யாழ் ஏந்திப் பாணர்களுடன் இசை பாடியது, எல்லாம் பொய்யாக முடியும் காலம் வந்து விட் டது என்று அவன் கண்ட கனவு ஒன்று கூறிற்று. அவன், ''மாடல! வாழ வழி வகுத்துக் கொள்ளலாம் என மதுரை நோக்கி வந்தேன்; ஆனுல் வாழ்வு எனக்கில்லை; சாவுதான் காத்திருக்கிறது. இது கூடல்மாநகரம்; இங்கே நாம் இனிக் கூட முடியாது. மணமுள்ள கூந்தலையுடைய கண்ணகி, கண் டார் மனம் உருகும்படி துன்பம் எய்தும்படியான கனவு ஒன்று கண்டேன். நான் உடுத்து இருந்த ஆடையை பிறர் பறித்தனர். பின்னர் நான் எருமைக்கடா மீது ஏறி, இந்தப் பெண்ணுடன் வீட்டின்பத்தைப் பெற்றேன். நான் இறந் தது கண்டு, மன்மதன் கணை செல்லாது தங்கினுள் மாதவி. தன் மகளைப் போதி அறவோன்முன் அளித்தாள். நான்

என்ன செய்வேன்'' என்று கூறுகிறான். இதனைச் சிலப்பதிகாரம்.

காவல் வேந்தன் கடிநகர் தன்னில்
நாறைங் கூந்தல் நடுங்குதுயர் எய்தக்
கூறை கோட்பட்டுக் கோட்டுமா ஊரவும்
அணித்தகு புரிகுழல் ஆயிழை தன்னொடும்
பிணிப்பறுத் தோர்தம் பெற்றி எய்தவும்
மாமலர் வாளி வறுநிலத்து எறிந்து
காமக் கடவுள் கையற்று ஏங்க
அணிதிகழ் போதி அறவோன் தன்முன்
மணிமேகலை மாதவி அளிப்பவும்
நனவு போல நள்ளிருள் யாமத்துக்
கனவு கண்டேன்,

என்று உரைத்திருப்பது காண்க.

இவ்வாறு கோவலன் தான் கண்ட கனவு நிகழ்ச்சிகளைச் கூறவும், அவனது அஞ்சிய நிலையைக் கண்ட கவுந்தியடிகளும் மாடலனும், 'கோவல இப்புறஞ்சேரி தவமுனிவர்களுக்கே ஏற்ற இடமாகும். உன் போன்ற இல்லறத்தோர் இங்கே தங்குதல் தகாது; எனவே இன்று சூரியன் மறைவதற்குமுன் வர் நீ உன் மனைவி கண்ணகியுடன் மதுரை மாநகருக்குள் சென்று தங்குவாயாக' என்று கூறினார்கள். அந்த நேரத்தில் ஆய்ச்சியர் குலத்தில் தோன்றிய மாது ஒருத்தி தெய்வத்திற்குப் பால்மடை படைத்துத் திரும்பி வந்தவள், தவக் கோலத்தில் இருந்த கவுந்தியடிகளைக் கண்டு அடிபணிந்து தொழுது நின்றாள். காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து மதுரை வரையிலும் எந்தவிதமான இடையூறும் வராமல்கோவலன் கண்ணகி ஆகிய இருவரையும் பாதுகாத்து வந்த கவுந்தியடிகள் அவர்களைத் தனியே மதுரைக்குள் செல்ல விடுவது எப்படி என்று மனத்திற்குள் எண்ணம் இட்டவராக இருந்தார். அத்தகைய நிலையில்தான் மாதரி அங்கு வந்து சேர்ந்தாள். மாதரியைப் பார்த்த கவுந்தியடிகள் அவ்விருவரையும்

பாதுகாக்கத் தக்க பண்பாடு உள்ளவள் அவளே என்று உணர்ந்தார். மேலும் ஆயர் வாழ்க்கை அமைதியானது; பாவத் தொழிலை அறியாதது; கொடுமை அற்றது என எண்ணினர்.

'ஆகாத்து ஓம்பி ஆப்பயன் அளிககும்
கோவலர் வாழ்க்கை ஓர் கொடும்பாடு இல்லை
தீதிலன் முதுமகள் செவ்வியள் அளியள்
மாதரி தன்னுடன் மடந்தையை இருத்துதற்கு
ஏதம் இன்று என எண்ணினள் ஆகி'

என்பது சிலப்பதிகாரம்.

இத்தகைய சிறந்த குலமகளாகிய மாதரியை பார்த்துக் கவுந்தி அடிகள் பின்வருமாறு கூறலுற்று, 'மாதரி, இக் கோவலன் காவிரிப் பூம்பட்டினத்துப் பெருங்குடி வணிகர் மரபிலே தோன்றிய மாசாத்துவான் என்பான் மகன். இவன் தந்தை பெயர் மதுரையிலுள்ள வணிகர்களுக்குத் தெரியுமானல், அவர்கள் இவனைப் பெறுதற்கு அரிய விருந்தினனுகப் பெற்று மிகவும் மகிழ்ந்து கொண்டாடுவர். அத்தகு கோவலனை அவன் மனைவியோடும் நீ அடைக்கலமாக ஏற்றுச் சிறிது காலம் காப்பாயாக' என்று விளம்பினர். இதனை ஆசிரியர் இளங்கோவடிகள்,

'மாதரி கேள் இம் மடந்தைதன் கணவன்
தாதையைக் கேட்கில் தன் குளவாணர்
அரும்பொருள் பெறுநரின் விருந்து எதிர் கொண்டு
கருதடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவர்;
உடைப்பெருஞ் செல்வர் மனைப்புகும் அளவும்
இடைக்குல மடந்தைக்கு அடைக்கலம் தந்தேன்'

என்று கவுந்தி கூற்றில் வைத்து உரைப்பது அறியத் தகுவதாம்.

இவ்வாறு அடைக்கலம் ஏற்க வேண்டும் என்று மாதிரியைக் கேட்டுக்கொண்ட கவுந்தியடிகள் அவள் கண்ணகி

யைப் பாராட்ட வேண்டிய முறையையும் எடுத்துக் கூறினர். கண்ணகிக்கு நீராட்டுவித்து, அவளது கண்களுக்கு மைதீட்டி, கூந்தலுக்குப் பூச்சூடி நல்லாடை தந்து உடுக்கச் செய்யவேண்டும் என்றும் அவளுக்குத் தீங்கு ஒன்றும் வராதவாறு தோழிகளைக் காவலுக்கு இருக்கச் செய்ய வேண்டுமென்றும் கூறி, அவளுக்குத் தாய்போல மாதரி விளங்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். இதனை,

'மங்கல மடந்தையை நல் நீராட்டிச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் தீட்டித்
தேமென் கூந்தல் சின்மலர் பெய்து
தூமடி உடீஇத் தொல்லோர் சிறப்பின்
ஆயமும் காவலும் ஆயிழை தனக்குத்
தாயும் நீயே ஆகித் தாங்கு'

என்று உரைக்கின்றது சிலப்பதிகாரம். இனி, கவுந்தியடிகள் மாதரிக்குத் தான் தரும் அடைக்கலப் பொருளாகிய கண்ணகியின் சிறப்பைக் கூறவிரும்பிக் கண்ணகியின் அழகிய பாதங்கள் மண்ணில் பட்டு அறியாதவை; தன் காதலனுக்காக அவள் நெடுந்தொலைவு நடந்தே வந்தாள்; பொறுக்க முடியாத சூரிய வெப்பத்தையும் தாங்கினாள். அதனால் அவள் கால் நடுக்கம் எய்தினாள்; அவளோ கற்புக்கு எடுத்துக்காட்டாக விளங்குபவள் என்ற கருத்துப்பட அவளது பெருமையை,

'இன்துணை மகளிர்க்கு இன்றியமையாக்
கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது
பொற்புடைத் தெய்வம் யாம் கண் டிலமால்'

என வருணிப்பது அறிந்து மகிழத்தகும்.

"கற்புக்கடம் பூண்ட இத்தெய்வம் அல்லது பொற்
புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்'

எனப் புகழ்ந்து கண்ணகியைப் போற்றுகின்றார் கவுந்தி அடிகள். தூர்த்தர்களைச் சபித்துப் பின் வாழ வைத்துக்

காத்தவர் அவர்; வாழ்த்தவும், சபிக்கவும் வல்லவர் அக் கவுந்தி அடிகள். அவர் முன்பொருகால், இல்லறத்தார் பெறுவது எல்லாம் துன்பங்கள் என்று கூறி, இல்லறத்தை விட்டுத் துறவறத்தைப் போற்றியவர். எனினும் இல்லறத் தில் இருக்கும் ஓர் இளமை பொருந்திய மங்கை நல்லாளாய் வாழ்ந்த கண்ணகியைக் கற்புடைத் தெய்வம் என்று கூறு வது நினைக்கத் தக்கது.

அடைக்கலப் பொருள் மிகவும் சிறந்தது என்பது முன் னேரின் கருத்து. தன் உயிரைக் கொடுத்தாகிலும், அடைக் கலப் பொருளைக் காக்கவேண்டுவது அறம் என்று முன்னுளை அறிஞர் வற்புறுத்தினர். சிபிச் சக்கரவர்த்தி புருவிற்காகத் தன் உயிரையே கொடுக்க முன்வந்ததும் ஒரு எடுத்துக்காட் டாகும்.இதுபற்றியே "உயர்குடியிலே பிறந்த கண்ணகியின் கால்கள் மண்மேல் பட்டதேயில்லை. அப்படிப்பட்ட கால் கள் மண்மேல் நடந்துவிட்டன. நீ இவளுக்கு உறுதுணையாய் நின்று உதவவேண்டும். இவளைத் தூய நீராட்டி, மீன்போல் அகன்று நீண்ட கண்களுக்கு மை எழுதி, கருநாகம் போன்று நீண்டு வளர்ந்த கூந்தலிலே வண்ணமலர்களைச் சூடி, நல் லாடை புனைந்து, தாயாகவும் தன்னை வளர்த்த செவிலியாக வும், தன்னிகரற்ற தோழியாகவும் இருந்து நீ இவளைக் காப் பாற்றுவாயாக" எனக் கூறுகிறுர் கவுந்தி அடிகள்.

கண்ணகி, பல ஏவலாளர்களுடன், ஒரு அரண்மனை இராணியைப்போல் வாழ்ந்து வந்தவள். தானுகவே எக் காரியத்தையும் செய்து பழக்கமற்றவள். ஆகையால்தான் கவுந்தி அடிகள், கண்ணகி பிறர் உதவியால்தான் ஒப்பனை பெறக்கூடியவள் என்று கூறுகிறுர்.

அடைக்கலப் பொருளை அடைபவர் பெறும் பேற்றைக் கவுந்தி அடிகள் ஒரு கதையின் மூலம் கூறுகின்றுர். அது தேவன் ஒருவனுடைய கதை. எட்டி என்ற பட்டப் பெய ருடன் சாயலன் என்ற தனவணிகன் வாழ்ந்து வந்தான். அவன் பட்டினி கிடந்து தவம்செய்யும் விரதிகளுக்குப் பணி

விடை செய்யும் இயல்புடையவன். ஒருநாள், மாதவ முதல்வன் ஒருவன் செட்டி இல்லாதபோது அவன் வீட்டிற்கு வந்தான். சாயலன் மனைவி அவனை உபசரித்தாள். அச்சமயம் பசியால் வாடிய ஒரு கருங்குரங்கு மாதவன் காலில் வந்து விழுந்தது. அவன் விட்ட எச்சிலையும் கை கழுவிய தண்ணீரையும் உண்டு, ''என் பசி தீர்ந்தது! நீடுழி வாழ்க!'' என வாழ்த்தியது. குரங்கின் வார்த்தைகளை அவன் கேட்டான், பின்னர்ச் சாயலன் மனைவியை நோக்கி, ''இக்குரங்கை உன் மக்களுக்குச் சமமாகக் கருதிப் பேணுக'' எனக் கூறிச் சென்றான். அவளும், அக்கருங்குரங்கிற்கு, ''தீவினை நீங்குக'' எனக்கூறி, தனது செல்வத்தில், அதற்கு ஒரு பங்கும், தன் மகளுக்கு ஒரு பங்கும் தந்தாள். அந்தக் குரங்கு பின்னர் வாரணாசியில் ''உத்தர கவுத்தன்'' என்னும் மன்னனுக்கு மகனாகப் பிறந்து, தான தருமங்கள் செய்து முப்பத்திரண்டாவது வயதில் இறந்து தெய்வ வடிவம் பெற்றது; அவளுடைய நன்றியை உலகிற்கு அறிவிக்கும் பொருட்டு அது, அதுவரையிற் கருங்குரங்கின் கைகொண்டு விளங்கியது.

பருவத்தின் மலர்ச்சியை எடுத்துக் காட்டுகின்ற உறுப்புக்கள், பசுமையான மூங்கிலைப் போன்ற தோள்கள், நாணல் முளை போன்ற வெண்மையான பற்கள், இத்தகைய இயற்கையோடு பிறந்த அழகுடன் பொலிவுற்றுப் திருவேறு தெள்ளியர் ஆதல் வேறு என்ற கூற்றிற்குப் புறம்பாக, திருமகளைப் போன்ற அழகுடன் திகழ்ந்த கண்ணகியை மாதரி அழைத்துக் கொண்டு தன் வீட்டிற்குச் சென்றாள்.

தள்ளரிய பெருநீதி தனியாறு புகமண்டும் பள்ள மென்னும் தகையாளாகிய கண்ணகியை மாதரி நல்லாள் கூட்டிச் செல்லும்போது, மாலைப்பொழுது வந்துவிட்டது. பசுக்கள் தம் கன்றுகளை நினைத்து ''அம்மா'' என்று அலறி ஆயர் பாடிக்கு வந்து கொண்டிருந்தன. இடையர்கள் குழல் ஊதிப் பின்வந்தனர்; இடைச்சியர் அவர்பின் வந்தனர். இயற்கையும் இனிமையும் சேர்ந்து களிநடம் புரியும் இக்கிராமக் காட்சியைக் காணாத கண் என்ன கண்ணே! எனப்

பலரும் வியக்கும் காட்சி. அழகு என்னும் பொருள் மேலும் ஓர் அழகு பெற்றுவிட்டது. கன்னியின் வடிவத்திலே என்றும் யாவரும் வியக்கும் வண்ணம் கோவலனும் கண்ணகியும் ஊருக்குள் நுழைகின்றனர்.

இதனைச் சிலப்பதிகாரம்,

''வளரிள வனமுலை வாங்கு அமைப் பணைத்தோள்
முளையிள வெண்பல் முதுக்குறை நங்கையொடு
சென்ற ஞாயிற்றுச் செல்சுடர் அமயத்துக்
கன்று தேர் ஆவின் கனைகுரல் இயம்ப
மறித்தோள் நவியத்து உறிக் காவாளரொடு
செறிவளை ஆய்ச்சியர் சிலர் புறம்சூழ''

என உரைக்கின்றது.

## 17. கொலைக்கள நிகழ்ச்சி

மாதரியுடன் கண்ணகி அவள் மனைக்கு வந்து சேர்ந் தாள். செம்மண் பூசிய சிறிய வீடுதான் அது. ஆனால் அங்கு அமைதி குடிகொண்டிருந்தது. அன்புப் பணி காத்திருந்தது. இணையே இல்லாதது இடையர் குலம். வந்தவர்களுக்கெல் லாம், மோர், பால், தயிர் முதலியவற்றை மட்டுமல்லாமல், தங்குதற்கேற்ற வசதிகளையுடைய வீட்டையும் கொடுத்து உதவும் வள்ளன்மையுடையவர் ஆயர். தான் கவுந்தி அடி களுக்குக் கொடுத்த வாக்குப்படி, மாதரி கண்ணகியைப் புதுப்புனலாட்டினாள். பின்னர், கண்ணகியை நோக்கி ''இம் மதுரையில் வாழும் பெண்கள் பலவகையான ஆபரணங்களை அணிந்துள்ளனர். ஆனால் அது உங்கள் இயற்கை அழகின் முன் எம்மாத்திரம்? என் மகள் ஐயை உங்களுக்கு எல்லாப் பணிவிடைகளும் செய்வாள்'' எனக் கூறினாள். பின்னர் ஆய்ச்சியரைக் கூப்பிட்டு இவர்கள் இரவு உண்ணாத சிராவக நோன்பினர். ஆகையால், இவர்களுக்கு வேண்டிய சமையல் சாமான்கள் யாவும் கொண்டுவந்துகொடுங்கள்'' என்று கூறினள்.

கவுந்தி அடிகள் சமண சமயத்தவர். வழி நெடுகிலும், அவர் சமயக் கருத்துக்களைக் கூறிக்கொல்லா நோன்பின் சிறப்பைப்பற்றி மிகவும் விரிவாகக் கூறினார். சமணர்கள், இரவிலே உண்ணமாட்டார்கள். விளக்கு ஏற்றி அமுதுண் டால், பல உயிர்ப் பிராணிகள் விளக்கின் ஒளியைப் பழ மெனக்கருதி அதன்மேல்விழுந்து இறந்துபடும். அக்கொலைக் கும் தாங்கள் காரணமாகக் கூடாது என்பதற்காக அவர்கள்

இரவிலே விளக்கேற்றி வைக்கவும் அஞ்சினர். கவுந்தி அடிகளால் போற்றப்பட்டதனல் கோவலனையும் கண்ணகியையும் சமணக் கொள்கையைக் கடைப்பிடிப்பவர் என மாதரி எண்ணிவிட்டாள்.

இல்லறத்தாரைச் சிராவகர் எனச் சமண சமயத்தவர் கூறுவர். சிராவகர் எனப்பட்டதனுல், கோவலனும் கண்ணகியும் சமண சமயத்தவர்கள் என்று முடிவு செய்துவிட முடியாது. சைவ சமயத்தவர்களுக்கும் பிறர் கோட்பாடுகளில் எப்பொழுதுமே வேறுபாடு ஏற்பட்டதில்லை. அடியார்க்கு அடியாராக அன்புப்பணி செய்துவந்த காரணத்தால் அவர்கள் எம்மதமும் சம்மதம் என்ற பரந்த மனப்பான்மையுடன் வாழ்ந்து வந்தனர். ஆகையால்தான், இந்து சமயத்தினர், இன்றும், பிறசமய தெய்வங்களிடத்தில் அன்புக் காணிக்கை செலுத்துவதைக் காண்கிறோம். இது நிற்க,

அரும்பெறல் பாவையான கண்ணகியை அடைக்கலப் பொருளாகப் பெற்றுப் போற்றியதை அடிகள்,

அரும்பெறற் பாவையை அடைக்கலம் பெற்ற
இரும்பேருவகையின் இடைக்குல மடந்தை
அளைவிலை உணவின் ஆய்ச்சியர் தம்மொடு
மிளைசூழ் கோவலர் இருக்கை யன்றி
பூவல் ஊட்டிய புனைமாண் பந்தர்க்
காவல் சிற்றில் கடிமனைப் படுத்துச்
செறிவளை ஆய்ச்சியர் சிலருடன் கூடி
நறுமலர்க் கோதையை நாள் நீர் ஆட்டிக்
கூடல் மகளிர் கோலம் கொள்ளும்
ஆடகப் பைம்பூண் அருவிலை யழிப்பச்
செய்யாக் கோலமொடு வந்தீர்க்கு என் மகள்
ஐயை காணீர் அடித் தொழிலாட்டி,
பொன்னின் பொதிந்தேன் புனைபூங் கோதை
என்னுடன் நங்கை ஈங்கு இருக்க எனத் தொழுது
மாதவத் தாட்டி வழித்துயர் நீக்கி

ஏத மில்லா இடம் தலைப்படுத்தினள்
நோதக வுண்டோ நும்மக ளார்க்கு இனி

என்பதனால் நயம்பட நவில்கின்றார்.

பக்கத்திலிருக்கும் கண்ணகியைப் பார்த்த மகளிர்' காளிந்தியாற்றில் கண்ணன் துயர்தீர்த்து மகிழ்வித்த இராதைதானோ இவள் என ஐயுற்றனர்.

மனைவி தன் கணவனை மகன் என்று உரிமையோடு அழைக்கும் சமயங்களுமுண்டு. மணிமேகலையில் "நினக்கு இவன் மகனாத் தோன்றியதூஉம்" எனக்கணவனை மகனென வழங்குதலாலும் அறியலாம். கோவலனும் கண்ணகியும் திருமணம் செய்துகொண்ட நாளில், அவர்களுடை வாழ்க்கை செம்மையுறத் தனி வீடு கொடுத்துதவினார்கள் பெற்றோர். என்று மனையறம் படுத்த காதையில் நாம் படித்தோம், செட்டிமார் நாட்டில் வேறுவைத்துப் புதுமண மக்களைச் சிறப்பிப்பதை இன்றும் காண்கிறோம். ஆனால் ஏன் வேறு வைக்கவேண்டும் என்பதற்குத் தெளிவாக விளக்கம் கூற வில்லை. அடிகள் அங்கு. மேலும், வாழ்க்கை நிலையாதது என்று அறியாதவர்கள்போல், அவர் மண்ணகத்திலுள்ள எல்லா இன்பங்களையும் துய்க்க முற்பட்டார் என்று அடிகள் கூறினாரே யன்றி, அவர்களின் ஒன்றுபட்ட வாழ்க்கை நலத்தைக் கூறினாரில்லை. இவைகளுக்கெல்லாம் ஈடு செய்யும் வகையிலே, அடிகள் கொலைக்களக் காதையில் மிகவும் சிறப்பாகக் கோவலன் கண்ணகியின் இல்வாழ்க்கையைப் பற்றிக் கூறுகின்றார்.

ஆயர்குலப் பெண்கள் கொடுத்த சட்டிபானைகள், காய் கறிகளைக் கொண்டு நல்லமுது செய்தாள் கண்ணகி. அவள் என்னென்ன வகைக்காய்கறிகளைச் சமைத்தாள் என்பதைக் கூட அடிகள் நன்கு விளக்குவது நோக்கத் தக்கதாகும். சமைத்தற்குரிய பலாக்காய், வெள்ளரிக்காய், கொம்மட்டி மாதுளங்காய், மாங்கனி, வாழை முதலிய கறிகளுடன் செந்நெல்லரிசியுடன் சமையல் செய்தாள் கண்ணகி. கொம்

மட்டி மாதுளங்காய் புளித்த கறி ஆக்குதற்கு மிகவும் சிறந்த தென்பதனுல் அதையும் அடிகள் கூறுகிருர். கண்களில் நீர் சொறியவும் நெற்றியில் வியர்வை அரும்பவும் தான் சமைத்த அமுதைத் தன் கணவனுக்குப் போடுவதற்கு ஆயத் தம் செய்கிருள் கண்ணகி. புதிய மண்கல நீரால் கண்ணகி, அவன் அடிகளைக் கழுவினுள். ஆய்ச்சியர் அழகாக முடைந்த ஓலைத் தடுக்கில் கோவலன் அமர்ந்தான். பூமாதேவியான வள் மயங்கிக் கிடக்கின்ருள். அவளது மயக்கம் தீர்க்க வேண்டும் என்ற எண்ணமுடையவள்போல, கண்ணகி தரையில் தண்ணீர் தெளித்துத் தடவினுள். பின்னர்த் தலைவாழை இலையைப் போட்டுக் கோவலனை அமுதம் உண்ணக் கூப்பிட்டாள். அவன் அமுதம் உண்பதைக் கண்டவர்கள், அரசர்களுக்கு உண்டான ஆடை ஆபரணங் களை எல்லாம் களைந்துவிட்டு பிருந்தாவனத்திலிருந்து கண்ணபிரானே மதுரை மாநகர்க்கு வந்துவிட்டானே என்று ஐயமுற்றனர். வடக்கேயுள்ள மதுராவை விட்டு தென்மதுரைக்குக் கண்ணன், காட்சிதர வந்துவிட்டானே என்று ஐயமுற்றனர். இதனை அடிகள்,

''தொழுனையாற்றினுள் தூமணி வண்ணனை
விழுமம் தீர்த்த விளக்குக் கொள் என
ஐயையும் தவ்வையும் விம்மிதம் எய்திக்
கண்கொளா நமக்கு இவர் காட்சி''

எனக் கூறுகின்ருர்.

சிலப்பதிகாரத்திலே இக் கொலைக்களக்காதை தான் அதிகமாக நம் கவனத்திற்குரியது. மதுரைக் காண்டத்தில் இதற்கு முந்திய காதைகளில் நாம் பற்பல செய்திகளை அறிந் தோம். அந்தச் செய்திகளையெல்லாம் பின்னேக்கிக் காணச் செய்வது இந்தக் காதையெனின் அது மிகையாகாது.

கோவலன் இந்தக் காதையில் தனது முன்னைய நாள் நடத்தையை எடை போட்டுப் பார்த்துக் கொள்கிருன். கண்ணகியும் தான் இதுவரையும் பொறுமையோடுநடத்திய

வாழ்க்கையைக் கோவலனுக்குத் தெரிவிக்க இக்காதையில் ஒரு வாய்ப்புப் பெறுகிறாள்.

கோவலன் இந்தக் காதையில் மண் தேய்த்த புகழுடையவனும் இடம் பெறுவதால் இக்காதை பலருடைய உள்ளத்தையும் கவரும் பெரியதோர் சிறப்பு உடையதாகின்றது.

கோவலன் அழகுடையவன் என்பதை முன்னரே அடிகள் எடுத்துக் கூறியுள்ளார். திருமகளைப் போலப் பேரழகு படைத்த கண்ணகியின் கணவன் கண்ணனைப் போன்ற சிறந்த அழகுபடைத்தவன் தான் என்று ஆயர்பாடியினர் அகமகிழ்ந்தனர். அன்னை தன் மகனுக்குச் சோறு ஊட்டுவது போல மிகவும் அன்பாக அமுது படைத்தாள் கண்ணகி. ஆடவர் உள்ளம் அறத்துறையினின்று நீங்கிக் காம இன்ப நுகர்ச்சியிலே செல்லும்போது அது நிலையிலாக் காற்றாய் மாறிவிடுகிறது. அந்நிலையிலாத் தன்மையை மாற்ற வேண்டுமென்று கண்ணகி முயன்று வந்தாள். பேய்க்காற்று அடித்துச் சற்று நின்றிருக்கும் அவன் உள்ளத்திலே அமைதி குடிகொள்ளத் தொடங்கியது. பெருவழியிலே நடந்துவந்த களைப்புத் தீர உண்ட அவனுக்கு கண்ணகி வெற்றிலை கொடுத்தாள். அதை வாங்கி உண்டபின் அவன் கண்ணகியை மிக அன்புடன் அழைத்துத் தலையை நீவி'' முள்ளும் கல்லும் பெருகியுள்ள நெடுந் தூரத்தை நீ கடக்க வல்லவளோ? உன்னுடைய மெல்லிய அடி இத்துணை இன்னல்களையும் தாங்கிக் கொண்டுள்ளது பற்றி என் பெற்றோர்கள் என்ன நினைக்கின்றனரோ? இச்செய்கை மாயமோ. முன் செய்த வினைதானோ என உள்ளம் கலங்கிவிட்டது; இன்னது செய்வது என்றே தெரியவில்லை; வெட்டிப் பேச்சுப்பேசும் மக்களிடமும் வேசைகுலப் பெண்களுடனும் என்னுடைய பொன்னான காலத்தைக் கழித்துவிட்டேன்; எனக்கு இனி வாழ்வு உண்டா?'' என்று கூறுகிறான். இதனைச் சிலப்பதிகாரம்,

உண்டு இனிது இருந்த உயர் பேராளற்கு
அம்மென் திரையலோடு அடைக்காய் ஈத்த

மையீரோதியை "வருக எனப் பொருந்திக்
கல்லதர் அத்தம் கடக்க யாவதும்
வல்லுந கொல்லோ மடந்தை மெல்லடி என
வெவ்வினை அருஞ்சுரம் போந்ததற்கு இரங்கி
எம் முதுகுரவர் என்னுற்றனர்கொல்!
மாயம் கொல்லோ! வல்வினைகொல்லோ!
யான் உளம் கலங்கி யாவதும் அறியேன்
வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு
குறுமொழிக் கோட்டி நெடுநகை புக்குப்
பொச்சாப்புண்டு பொருளுரையாளர்
நச்சுக் கொன்றேற்கும் நன்னெறி உண்டோ?

என்று பாடுகிறது.

கோவலனுக்கு மாதவி எழுதிய கடிதத்தின் வாசகங்கள் அவன் நினைவிற்கு வருகின்றன. பெற்றோர்களை விட்டு விட்டு வந்தது தவறு என்று அவள் கடிதத்தில் கூறியதை நினைந்து நெஞ்சு உருகத் தொடங்கினான். தன் தந்தை பெருஞ் செல்வந்தராக இருக்கும்போது, அவரிடம் சென்று தவற்றைக் கூறி வாழ்வு பெற்றிருந்தால் சிறப்பாக இருந் திருக்குமே எனச் சிறிது சிந்தித்தான். மாதவி கூறிய அற வுரைகளைக் கண்ணகி கூறியிருந்தால் தனக்கு ஒரு துன்ப மும் ஏற்பட்டிருக்காது எனவும் எண்ணினான். நேர்மையின் திறம் எய்தி விட்டபோதிலும் அவன் நெஞ்சிலே உறுதி ஏற் படவில்லை. களிற்றியானையை வெல்லும் திறம் படைத்த அவன் மனது கலங்கத் தொடங்கியது. இவ்வெண்ணங்கள் மிகவே அவன் கண்ணகியை நோக்கி, "சோழ நாட்டின் பேரூராகிய காவிரிப்பூம்பட்டினத்தை விட்டு, மதுரைக்குச் செல்லலாம் என்று நான் கூறியவுடனேயே எழுந்து வந்து விட்டாயே! என்ன காரியம் செய்துவிட்டாய்" என்று கூறு கிறான். இதனை இளங்கோவடிகள், மிகவும் அழகுபட,

இருமுதுகுரவர் ஏவலும் பிழைத்தேன்
வழுவெனும் பாரேன் மாநகர் மருங்கு ஈண்டு
எழுக என எழுந்தாய்; என் செய்தனை?

என்று கூறுகிறார்.

"என்ன காரியம் செய்தாய்?" என்று கோவலன் கேட்பதிலிருந்து, மதுரைக்கு வந்தது தவறு என்பது அவன் கருத்து என்பது தெளிவாகிறது. ஒரு நன் மனைவி தன் கணவன் தவறு செய்கின்ற விடத்து இடித்துக்காட்ட வேண்டும் என்பது அவனுடைய கொள்கை. "தாய்போல் கழறித் தழீஇக் கோடல் ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்து" எனத் தொல்காப்பியனாரும் கூறுவர். ஆனால், கண்ணகியோ மதுரைக்குப் போகலாம் என்று கூறியவுடனேயே இரவோடு இரவாக உடன் வரத் துணிந்துவிட்டாள்.

கண்ணகி ஏன் கணவனுக்கு மறுமொழி கூறாது மதுரை சென்றாள் என்பதை ஆராயுமுன், கோவலன் கண்ணகி ஆகிய இருவருடைய மனநிலையைச் சிறிது காண்போம். கலையார்வமுடைய கோவலன் மாதவியின் ஆடலிலும் பாட்டிலும் மகிழ்ந்து அவள்பால் சென்றுவிட்டான். கண்ணகியின் கள்ளமற்ற காதலின் திறனை அறிய அவனுக்கு வாய்ப்பு ஏற்படவில்லை. மாதவியினிடத்தில் ஏற்பட்ட மனத்தாங்கலினால், அவன் அவளை விட்டு நீங்கி வந்துவிட்டான். எந்தப் பொருளிலாவது மிகுந்த ஆசை வைத்துப் பின்னர் அதன் மேல் அருவருப்பு ஏற்படும் போது, அந்தப் பொருளின் பேரில் மட்டுமன்றி, அதனைச் சுற்றி உள்ளவர்கள் பாலும், அது இருக்குமிடத்தின் பேரிலும், ஒருவன் மனத்தில் வெறுப்பு ஏற்படும். மாதவியின் மேல் கோபம் கொண்ட கோவலன் அந்த ஊரின் பேரிலும் விருப்பம் குன்றினான். பெற்றோர் தன்னைப் பழிப்பார்களே, நண்பர்கள் நாடமாட்டார்களே என எண்ணத் தொடங்கினான். வேறு ஊருக்குச் செல்வதே சரி என முடிவு செய்தான்.

மாதவி மாண்பு மிக்கவள் என்பதைக் கண்ணகி நன்கு அறிந்தவள். ஏதோ தவறுதலாக மாதவியின் பேரில் பழி போடுகிறான் கோவலன் என்பதையும் அறிந்தாள். மறுநாளை வரையிற் காத்திருப்பாளேயாயின், மாதவியின் மாண்பைக் கோவலன் அறிந்து கொள்ள வாய்ப்பு ஏற்பட்டுவிடும். ஆகையால், கண்ணகி, தன் கணவன் தன்னைத் தேடிவந்த

போது, மாதவியை இகழத் துணியவில்லை; பாம்பின் கால் பாம்பறியும் என்பது போல, ஒரு பெண்ணின் உள்ளத்தை மற்றொரு பெண் தானே அறிய முடியும். 'கண்ணில்லான் பெற்று இழந்தான்' என்ற கதை தனக்கும் நேரக் கூடாதே என்று எண்ணினாள். ஆகையால், மாதவியின் மாண்பைக் கோவலன் அறியுமுன் காவிரிப்பூம்பட்டினத்தை விட்டுப் புறப்படுவதே நல்லது எனத் துணிந்தாள். அதனால் தான் 'எழுக' என்றவுடன் கண்ணகி எழுந்தாள்.

கண்ணகி, தமிழ்ப் பண்பாட்டிலே வளர்ந்தவள். இகபர சுகத்திற்கு இல்வாழ்க்கை ஒரு அளவுகோல் போல்வது; அது, பேரின்ப வீட்டிற்கு ஒரு சிறந்த படியாக அமைய வேண்டும் என்பது தான் அவள் கண்ட உண்மை. அதற்காகத்தான் கணவனும் மனைவியும் தனித்த வாழ்க்கை நடத்தி இல்லறத்தை நல்லறமாக்க வேண்டுமென்று கருதினர் நம் முன்னோர். அறவழியிலே நின்ற பெருமக்களை உபசரிப்பதும், உலக இன்பங்களை எல்லாம் துறந்த பெருமக்களுக்குப் பணிவிடை செய்வதும், எவ்வுயிர்க்கும் அருள்புரியும் அந்தணர்களை ஓம்புதலும், வந்தவர்களுக்கெல்லாம் விருந்திட்டு மகிழ்வதும் தான் ஒரு மனையாளின் கடமைகளாகக் கருதப் பட்டன. ஆனால் கோவலன் இல்லாத காரணத்தால் இல்லறத்தில் ஏற்படுகின்ற பெரும் பயன்களை அவள் அனுபவிக்க முடியவில்லை. ஆகையினால்தான் ஏன் எழுந்தாய் என்றதற்கு விடை தருமுகமாக, அவள், "நான் செய்தது தவறுதான்; ஆனால் என் மனநிலையை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும்; உங்களை விட்டு நீங்கியபின், நான் அறவோர்களையோ அந்தணர்களையோ துறவிகளையோ உபசரிக்க முடியாதவளாகி விட்டேன். தமிழ்ப் பெருங்குடிக்கே உரித்தானதும் சிறந்ததுமான விருந்தோம்பலைச் செய்யமுடியாது போய் விட்டேன். நான் இவைகளை எல்லாம் நினைந்து நினைந்து அழுது கொண்டிருக்கும் போது உங்கள் தந்தை வருவார். தங்களை இகழ்ந்தும், என்னைப் பாராட்டியும் பேசுவார். நான் வருத்தப்படுவதைக் கண்டால், அவர் மனம் பின்னும்

நோகுமே என எண்ணி நான் துக்கத்தை எல்லாம் அடக்கிக்கொண்டு சிறிது புன்னகை புரிந்தேன். அதைக் கண்டும் அவர் மிகவும் வருந்தினர். அவ்வாறு தந்தை மனம் புண்படத் தீயவழியிலே சென்று விட்டீர்கள். அவர்கள் உங்களைப் பாராட்டும்படி வாழவேண்டும் என்ற எண்ணத்தால் நான் உங்களுடன் வரத் துணிந்தேன்'' என்றாள்.

கண்ணகி தன் கணவனுடன் கூடி இல்லறமாகிய நல்லறத்தைச் செவ்வனே நடத்துதற் பொருட்டு மதுரை வந்தாள். தான் பேசாது ஒழுகிய காலமெல்லாம் போய், கணவனுக்கு இனிக்க இனிக்கப் பேசும் நிலையைப் பெற்றுவிட்டாள். செல்வச் சிறுமியாகச் செருக்குடன் வாழ்ந்த அந்நாளில் காணாத இன்பத்தை இப்பொழுதுதான் கண்டாள் கண்ணகி. அன்று அவள் இட்ட வேலைகளைச் செய்ய ஆயிரமாயிரம் பேர் காத்துக் கொண்டிருந்தனர்; சுற்றத்தார்கள் எல்லாம், அவளைப் பாராட்டிய வண்ணமே யிருந்தனர்; விளையாடுவதற்குப் பல தோழிமார்கள்; இத்துணையிருந்தும் கோவலனை மகிழ்விக்க முடியவில்லை. அவள்பால் நாணமும், மடமும், நல்லோர் போற்றும் கற்பும்பெருந்துணையாக அன்றும் இருந்தன; ஆனால் அவை விளக்கம் பெறவில்லை; மாதவியின் ஆடலும் பாடலும், கண்ணகியின் களங்கமற்ற கற்பிற்கு எதிரில் வந்தன. கலை ஆர்வம் கொண்ட கோவலன் அவளை மறந்தான்; காலம் மாறியது; கருத்துக்களும் மாறத்தொடங்கின கோவலன் கண்ணகியது கற்பின் திறத்தைப் புகழத் தொடங்கி, '' கண்ணே! உன்னுடைய தோழியரும், தாதியரும், சுற்றமும், துணையும் எங்கோ சென்றுவிட்டனர்அவர்கள்எல்லாம் நீங்கிவிட்ட போதிலும், நாணமும், மடமும், நல்லோர் ஏத்தும் கற்பும் என்றும் உனக்குத் துணையாகவே நின்று வருகின்றன. என்னோடு வந்து என் துயரங்களையெல்லாம் போக்கிய பொன்னே, கொடியே, பூங்கோதையே, நாணினையுடைய பாவாய், நீணில விளக்கே, கற்பின் கொழுந்தே, பொற்புடைய செல்வியே, உன் அழகான பாதங்களை அலங்கரிக்கும் சிலம்பில் ஒன்றைத்தா. நான் அதைவிற்று வாணிபம் செய்கிறேன்'' என்றான்.

இளங்கோவடிகள், கண்ணகியைக் கோவலன் இயற்கைப் பொருளைக் கொண்டே பாராட்டச் செய்வது மிகவும் சிறப்பாகும். வேறு எந்த மொழியிலும் ஒரு பெண்ணை இத்துணைச் சிறப்பாகக் கூறமுடியாது; இதனை இளங்கோவடிகள்,

"குடிமுதற் சுற்றமும் குற்றிளையோரும்
அடியோர் பாங்கும் ஆயமும் நீங்கி
நாணமும் மடனும் நல்லோர் ஏத்தும
பேணிய கற்பும் பெருந்துணையாக
என்னொடு போந்து இங்கு என் துயர் களைந்த
பொன்னே கொடியே புனைபூங் கோதாய்
நாணின் பாவாய் நீணில விளக்கே
கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி
சீறடிச் சிலம்பில் ஒன்று கொண்டு யான் போய்
மாறி வருவன் மயங்காதொழிக"

என்று கூறுகிறார்.

கண்ணகியை மார்போடு அணைத்துத் தழுவி விடை பெற்றுச் செல்லுகிறான் கோவலன். ஆனால், அந்தோ! அது தான் அவனுடைய இறுதி முயக்கம் என்பதை அவன் அறியான். தெருவில் செல்லும்போதே அபசகுனமாக ஒரு காளை மாடு பாய்ந்தெதிர்த்தது. இது தீச்சகுனம் என்பதை அவன் அறியான். விதி பின்னே நின்று பிடித்துத் தள்ள அவன் கடை வீதிக்குச் சென்று சேர்ந்தான்.

வீதியிலே சிற்பத் தொழில் வல்ல நூறு கம்மாளர்கள் புடைசூழப் பொற்கொல்லன் ஒருவன் வந்தான். அவன் சட்டைபோட்டிருந்தான். என்ன! இளங்கோவடிகள் காலத்தில் சட்டை உண்டா? என்று கேட்டுவிடாதீர்கள். சட்டை அன்றும் இருந்தது. அதனை "மெய்ப்பை" என்று கூறுவர். அவன் கையிலே ஒரு பிரம்பு இருந்தது. அவனுடைய நடை விலங்குகளின் நடையைப்போல் இருந்தது. இவன்தான் பாண்டியனுக்கு அணிகள் செய்யும் பொற்கொல்லன். அவனிடம் சென்று கோவலன் "ஐயா! பாண்டி

மாதேவி அணியத்தக்க ஒரு சிலம்பு என்னிடம் உள்ளது; அதை நீர் விலை மதித்துத் தரமுடியுமா?'' என்று கேட்டான். இந்நிகழ்ச்சியைச் சிலப்பதிகாரம்,

''கண்ணுள் வினைஞர் கைவினை முற்றிய
நுண்வினைக் கொல்லர் நூற்றுவர் பின்வர
மெய்ப்பை புக்கு விலங்குநடைச் செலவின்
கைக்கோல் கொல்லனைக் கண்டன னாகித்
தென்னவன் பெயரோடு சிறப்புப் பெற்ற
பொன்வினைக் கொல்லர் இவர் எனப் பொருந்திக்
காவலன் தேவிக்கு ஆவது ஓர் காற்கணி
நீ விலையிடுதற்கு ஆதியோ என''

என்று கூறுகிறது.

எமதூதன் போன்ற அக்கொல்லன் ''மாதர் காலில் அணியும் கலங்களை விலை மதித்தறியேன்; என்றாலும் மன்னர் மணிமகுடங்களைச் செய்துள்ளேன்; மன்னர்க்கு ஏற்றதா எனப்பார்க்கிறேன்; சிலம்பைக் கொடுங்கள்'' என்றான். வஞ்சம் அறியாதவன் கோவலன். அவன் தனக்கு நேரப்போகும் பெருங் கெடுதியைச் சிறிதும் உணராமல், அந்தப் பொற்சிலம்பைப் பொற்கொல்லனிடம் தந்துவிட்டான். அவனும் அதனை நன்கு நோக்கி, ''எவ்வளவு அழகான சிலம்பு! வைரப்பத்தியுடன், முகப்பில் விலையுயர்ந்த மணியுடன் பொலிவு பெற்றிருக்கிறதே'' என்று வேலைப்பாட்டை எல்லாம் க்ண்டு வியந்தான். அவனுக்கு ஒரு வஞ்சச் சூழ்ச்சி மனதில் தோன்றியது. ''ஐயா, இவ்வருமையான சிலம்பு கோப்பெருந்தேவிக்கே தகும். ஆகையால் இதைக் குறித்து, நான் அரசனுக்குத் தெரிவித்து வருகிறேன். அதுமட்டும் என் சிறு வீட்டின்கண் தங்கியிருங்கள்'' என்று கூறினான். கோவலனும் அவன் சொல்லிற்கு இசைந்து அங்கு இருந்தான். பொற்கொல்லனைப் பற்றி முதலில் கூறுமிடத்து, இளங்கோவடிகள், விலங்கு நடையுடையவன் என்று மிகநயமாகக் கூறுகின்றார். வஞ்ச நெஞ்சமுடைய பொற்கொல்லனை மனிதனுக்குப் பதில் மாக்களில் ஒருவன் என்று கூறுவதே பொருந்தும் என்று அடிகள்

எண்ணினர் போலும். விலங்கிற்கு ஒப்பான வஞ்சக் கொல்லன், முன்பு கோப்பெருந்தேவிக்காக இருசிலம்புகளைச் செய்தான். ஆனால் ஒன்றை அவன் களவாடிவிட்டான். தனது திருட்டு வெளிப்பட்டுவிடுமோ என்று அவன் மனம் பதை பதைத்துக் கொண்டிருந்தது. அவன் தனக்குள் ''நல்லவேளையாய் இந்த ஒற்றைச் சிலம்பு கிடைத்தது! களவுபோன சிலம்பு இதுவே; கள்வன் இவனே என்று இந்த அப்பாவிமீது பழிசுமத்தி நாம் தப்பித்துக் கொள்வோம்'' என்ற சூழ்ச்சியுடன் அரண்மனைக்குட் சென்றான் அக்கொல்லன்.

அரசன் அரண்மனையில் அன்று காலை நாடக மகளிர் ஆடிப்பாடி அரசனை மகிழ்வித்தனர். என்றும் இல்லாதபடி, மன்னன், அம்மகளிரின் ஆடலைக் கூர்ந்து நோக்கிச் சுவைத்தது கோப்பெருந்தேவிக்கு மனவேதனை அளித்தது. தனக்கே உரியதான மன்னனது உள்ளம் கணிகையரின் கண்கவர் தோற்றத்திலும் பண் சுமந்த பாடலிலும் ஈடுபட்டு மயங்கியதை உணர்ந்த அவள், தன் கோபத்தை வெளிக்காட்டாமல் தலைவலி என்று கூறி அவையை விட்டுச் சென்றுவிட்டாள். அது கண்ட பாண்டியன் உள்ளம் கலங்கியது. அரசவை உடனே கலைக்கப்பட்டது. தேவியின் ஊடலைத் தீர்க்க அவள் பின்னாலேயே எழுந்து சென்றான் மன்னவன். அந்தப்புரத்தின் வெளிவாயிலை நெருங்கியதும் தேவியின் அறைக்கதவு அடைத்திருந்ததைக் கண்டான். அந்த நேரத்தில் வந்து, அவன் கால்களில் வீழ்ந்து வணங்கினான் பொற்கொல்லன். ''மன்னவ, வாழி, கன்னக்கோல் இன்றி மந்திர வலிமையால் அரண்மனைப் பண்டகசாலையில் இருந்ததும் தேவியதும் ஆகிய சிலம்பைத் திருடிய கள்வனை நான் கண்டு பிடித்துவிட்டேன். அவன் இப்பொழுது என் சிறு குடிலில் இருக்கின்றான்'' என்று கூறினான். இதனைச் சிலப்பதிகாரம்,

''மந்திரச் சுற்றம் நீங்கி மன்னவன்
சிந்து அரி நெடுங்கண் சிலதியர் தம்மொடு
கோப்பெருந்தேவி கோவில் நோக்கிக்

காப்புடை வாயில் கடைகாண் அகவையின்
விழ்ந்தனன் கிடத்து தாழ்ந்து பல ஏத்திக்
கன்னகம் இன்றியும் கவைக் கோல் இன்றியும்
துன்னிய மந்திரம் துணை எனக் கொண்டு
வாயிலாளரை மயங்கு துயில் உறுத்துக்
கோயில் சிலம்பு கொண்ட கள்வன்
கல்லென்பேரூர்க் காவலர்க் கரந்து என்
சில்லைச் சிறுகுடில் அகத்திருந்தான்''

என உரைக்கின்றது.

''காம வேட்கை மிக்குற்ற போது கற்றதும் கை கொடாது'' என்னும் ஆன்றோர் மொழிக்கு ஏற்பத் தேவியின் ஊடலைத் தீர்ப்பதே கருத்தாகச் சென்ற மன்னன், சிறிதும் எண்ணிப் பாராமல் ஊர்க்காப்பாளரைக் கூவி, ''கள்வன் கையதாகில் அவனைக் கொன்று அச்சிலம்பைக் கொணர்க'' என்று ஆணையிட்டான். காணமற்போன சிலம்பு கிடைத்துவிட்டதால் அதைக் கொண்டு வரச்செய்து தேவியின் ஊடலைத் தீர்க்கலாம் என்று எண்ணியிருக்கலாம். மன்னன் இவ்வாறு கண்ட இடங்களில் நின்று தண்டனை கொடுக்கும் மரபு அக்காலத்தில் இல்லை என்றாலும் கள்வனால் கொல்லவேண்டும்;சிலம்புடன் அவனைப் பிடித்து வாருங்கள்'' என்று ஆணையிடுவதே முறை. ஆனால் அமிழ்தின் இயன்ற இலக்குமியைப் போன்ற கோப்பெருந்தேவியின் ஊடல் அவனுடைய மனத்தைக் கலக்கி நிலைபிறழச் செய்துவிட்டது. நாடக மகளிரிடம் தன் மனம் சென்றது குற்றம் எனத் தேவியிடம் ஒப்புக்கொண்டு அவளை மகிழ்விக்க அன்றோ சென்றான் அரசன். அந்த நேரத்தில் கொல்லன் குறுக்கிட்டபோது, அவன் ஓதி உணர்ந்த நீதி நூல்கள் அவனுக்கு உதவவில்லை. அவன் நீதி மன்றத்தில் அமர்ந்து பிறருக்கு உறைத்த அறவுரைகள் அவனுக்குக் கைகொடுக்கவில்லை. கோவலன் பாண்டியன் ஆகிய இருவரின் ஊழ்வினையே இதற்குக் காரணமாக நின்றது என இளங்கோவடிகள் கூறுகிறார். இதனை,

''வினை விளைகாலம் ஆதலின் யாவதும்
சினை அலர் வேம்பன் தேரான் ஆகி
ஊர்காப்பாளரைக் கூவி, ஈங்கு என்

தாழ்பூங் கோதைதன் காற் சிலம்பு
கன்றிய கள்வன் கையது ஆகின்
கொன்று அச்சிலம்பு கொணர்க ஈங்கு

என உரைக்கின்ருர். இவ்வாறு பாண்டி மன்னன் கூறவே, வஞ்ச நெஞ்சமுடைய, பொற்கொல்லன் தன் எண்ணம் கைகூடப்போவதை எண்ணி மகிழ்ந்து ஊர்க்காப்பாளரை அழைத்துக்கொண்டு கோவலனிடம் வந்தான். அரசன் ஏவலால் இவர்கள் சிலம்பு காண வந்திருக்கிருர்கள் என்று கூறிச் சிலம்பை வாங்கி அவர்களிடம் காட்டினுன். அரண்மனைச் சிலம்புதான் அது என்று இரகசியமாகச் சொன்னுன். ஊர்க்காப்பாளர்களுள் அறிவுடைய சிலர், கோவலன் இருந்த இருப்பையும், அவனது முகப்பொலிவையும், உடல் தோற்றத்தையும் கண்டு கொல்லனைத் தனியே அழைத்து, மெல்லிய குரலில், "இவன் கள்வனெனத் தோன்றவில்லை" என்று தங்கள் மனதில் பட்ட கருத்தை எடுத்துக் கூறினர். கொல்லன் அவர்களை எள்ளி நகைத்தான்; பிறகு கள்வரின் தந்திரங்களை விரிவாக விளக்கினுன். "மந்திரத்தாலும், மருந்தாலும், களவு நூல் கற்ற திறமையாலும் அவர்கள் காவலர்களை எளிதாக ஏமாற்றி விடுவார்கள்" என்ருன். சிறு தேவதைகளின் உதவியைக்கூட அவர்கள் பெற்றிருக்கிருர்கள் என்றும் எந்த இடத்திலும் எந்த வடிவத்திலும் மாறுவார்கள் என்றும் பொற்கொல்லன் கூறினுன். முன் ஒரு முறை ஒரு கள்வன் அரசகுமரனின் அறையில் புகுந்து அவனுடைய மணிமாலையை மிகத் தந்திரமாகத் திருடி, அவன் வாளுக்குத் தப்பிச் சென்ற கதையை எடுத்துச் சொன்னுன். அவன் கூறியதைக் கேட்ட காவலருள் ஒருவன், தன்னையும் ஒரு கள்வன் ஏமாற்றிய நிகழ்ச்சியைக் கூறி, 'நண்பர்களே, நாம் இவனைக் கொல்லாமல் திரும்பினுல் வேந்தன் நம்மைத் தண்டிப்பான்;என்ன செய்வோம், கூறுங்கள்' என்று கேட்டான். அப்பொழுது கல்வி அறிவில்லாத குடிவெறியுற்ற காவலன் ஒருவன் பொறுமை இழந்து கைவாளால் கோவலனை வெட்டினுன். கலைக்குரிசிலின் தலை மண்ணில் உருண்

டது; வெட்டுண்ட அவன் உடலில் குருதி பீறிட்டது. வந்தவர்க்கு வாரி வாரி வழங்கிய அவனுடைய தோள்கள், மத யானையை எதிர்த்து வென்று வீறுகொண்ட வீரத் தோள்கள், தரையில் சாய்ந்தன. நிலமகள் துயரத்தால் நடுங்கினாள். பாண்டியனுடைய வளையாத செங்கோல் வளைந்தது. கோவலன் ஊழ்வினை சிலம்பின் வழியாகப் புகுந்து அவன் உயிரைக் குடித்தது.

''கல்லாக் களிமகன் ஒருவன் கையில்
வெள்வாள் எறிந்தனன் விலங்கூடு அறுத்தது
புண் உமிழ் குருதி பொழிந்துடன் பரப்ப
மண்ணக மடந்தை வான்துயர் கூரக்
காவலன் செங்கோல் வளைஇய வீழ்ந்தனன்
கோவலன் பண்டை ஊழ்வினை உருத்து''

என அடிகள் கூறுகின்றார்.

ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பது சிலப்பதிகாரக் காப்பியத்தால் உணர்த்தப்படும் மூன்று உண்மைகளில் சிறந்த ஒன்றாகும். காவிரிப்பூம்பட்டினத்துக் கடற்கரையில் மாதவியின்கானல்வரிப்பாடலைக்கேட்டுக்கோவலன் அவளை வெறுத்துப் பிரிந்த நிகழ்ச்சியைக் கூறும்போதும், இளங்கோவடிகள், 'அவனது ஊழ்வினை யாழ் இசையின் வடிவத்தில் வந்ததால் அவன் மாதவியைப் பிரிந்து சென்றான்' எனக்கூறுவாராய், ''யாழ் இசைமேல் வைத்துத் தன் ஊழ்வினை வந்து உருத்தது, ஆகலின், உவவு உற்ற திங்கள் முகத்தாளைக் கவவுக்கை நெகிழ்ந்தனனாய், ஈங்குக் கழிந்தது பொழுது ஆகலின் எழுதும் என்று, உடன் எழாது, ஏவலாளர் உடன்சூழ்தரக்கோவலன்தான் போன பின்னர்'' என்று சொல்லுகின்றார். சோழர் தலைநகரில் அரசருக்கு அடுத்த நிலையில், எண்ணற்ற செல்வமும் இணையற்ற செல்வாக்கும் பெற்று வாழ்ந்தவனை, மனைவியோடு மதுரைக்கு இழுத்துவந்து கள்வன் என்று பெயர் சூட்டிக்கொல்லச் செய்தது ஊழ்வினையே அல்லவா? ''ஊழிற் பெருவலி யாவுள'' என்று கூறுகிறார் திருவள்ளுவர்.

## 18. ஆய்ச்சியர் குரவை

திருமணம் ஆகிச் சில ஆண்டுகள் கணவனோடு மகிழ்ந்திருந்த கண்ணகி பின் பல ஆண்டுகள் அவனைப் பிரிந்து கண் இழந்த குருடனைப்போல் வருந்தினாள். பிறகு விதி அவனை அவளிடம் கொண்டுவந்து சேர்த்தது. அமைதியாக மகிழ்ந்து வாழும் நிலையிலா அவன் வந்தான்? "குலம் தரு வான் பொருட் குன்றம்" தொலைத்து வறுமையால் நாணித் தலை குனிந்து வந்தான். அவனோடு மதுரைக்குப் புறப்பட்டாள் கண்ணகி. வழியெல்லாம் அவனது அன்பு கனிந்த பார்வையையும் சொல்லையும் பெற்றாள்; மாதரி வீட்டில் அவன் மனம் மகிழ உணவு சமைத்து உண்பித்தாள்; மனம் திறந்து பேசினாள். ஆனால், ஐயகோ! அவள் மகிழ்ச்சி அவ்வொரு நாள் அளவோடு முடிந்துவிட்டது. "கண் இல்லான் பெற்று இழந்தால்" போலக் கண்ணகி மாதவியிடமிருந்து கணவனைப் பெற்று மதுரை மன்னனின் அநீதிக்குப் பலி கொடுத்து விட்டாள்.

நல்லார் அனைவரும் துன்பம்தான் அடைய வேண்டுமா? கண்ணகி என்ன கொடுமையை யாருக்குச் செய்தாள்? மாரி பொய்க்கினும் பாரி பொய்யான் என்று வாழ்ந்தவர்களின் வழிவந்த கோவலன்–வணிகப் பெருமகன்–யாருக்கு என்ன தீங்கு செய்தான்? கோவலன் தனக்குத் தானே துன்பம் தேடிக்கொண்டான் என்பாரும் உண்டு. அப்படியானால் இந்தத் துன்பத்தைத் தடுத்து விட்டிருக்கலாகாதா என்ற எண்ணமும் உண்டாகிறது. மேல்நாட்டு அறிஞர் பெருமக்கள், விதி வசத்தால் மனிதன் அடையும் துன்பம் அவலச்

சுவை உடையதன்று என்று கூறுகின்றனர்கள். ஆனால் கோவலன் எவ்வாறு தன்னுடைய முடிவைத் தடுத்துக் கொண்டிருக்க முடியும்? நல்லவர்களுக்கு ஐயமேற்படின் அவர்களின் மனமே வழிகாட்டியாக அமையுமே, அப்படி நிகழ்ந்ததா இங்கு? என்று கேட்கலாம். "ஆம்; எழுகென எழுந்தாய். என் செய்தாய்?" என்று கோவலன் கண்ணகியைக் கேட்கின்ற போதே, கோவலன் தான் செய்தது தவறு என்பதை உணர்ந்திருந்தான் என்பதை நாம் அறிகிறோம். ஆனால், தன் அறியாமையினாலோ, திறமைக் குறைவினாலோ அவன் அதை அப்பொழுது உணர முடியவில்லை.

கண்ணகியை "மயிலே, குயிலே, மணியே முத்தே" என்று பலவாறு பாராட்டிய கோவலன், அவளை விட்டுப் பிரிந்து சில ஆண்டுகள் மாதவியுடன் வாழ்ந்தான். இது கண்ணகிக்குத் துன்பம் தருவதொன்றுதான். ஆனால் இது மக்களைத் துன்பக் கடலில் ஆழ்த்தாது; ஆனால், நல்லவர்கள் துன்பம் அடைவது நாட்டிற்கே ஒரு அவகேடு. நல்லவர் துன்பப்படுவதைக் காணும்போது, மக்கள் கடவுளையும் பழிக்கும் மனப்பான்மையைப் பெற்று விடுகிறார்கள்.மக்கள் பணிக்கே உரியவன் என்று கருதப்பட்ட கோவலன் இறந்ததைக் கண்டவர்கள் கரைகாணாத துயரமுற்றனர். எத்தனை எத்தனையோ பேர்கள் நாளும் நலிகிறார்கள். இளம் பெண்கைம்பெண்ணாகிறார்கள். ஆனால் கண்ணகிக்குக் கிட்டிய தெய்வத்தன்மை அவர்களுக்குக் கிடைத்ததா? இல்லை.

மதுரை மாநகரமே மன்னனது அநீதியைக் கண்டு அஞ்சப் போகிறது என்ற உண்மையை அறியாது இருந்தனர் ஆயர்குலப் பெண்கள். ஆனால், பல தீச்சகுனங்கள் அவர் சேரியில் தோன்றத்தான் செய்தன.

ஆயர் வீட்டில் அடைக்கலம் புகுந்த கண்ணகியை மாதரி என்ற மங்கைநல்லாள் தன் கண்ணிமைபோலக் காத்து வந்தாள். தன் மகள் ஐயை என்பாளை அவளுடன் இருக்குமாறு செய்தாள்.இவ்வாறு கண்ணகி கவலை நீங்கி இருந்தபொழுது தான், கோவலன் மதுரையில் காவலனது தெளிவிழந்த

செய்கையால் வெட்டுண்டான். இந்நிலையில்தான் ஆயர் சேரியில் பலவித தீய சகுனங்கள் தோன்றின. அதனால் மாதரி மனம் கலங்கினாள்; தனது பசுக்களுக்கு யாது துன்பம் வருமோ என்று அஞ்சினாள். வரவிருக்கும் தீய செயல்களுக்கு முன்னரே பரிகாரம் தேடிக்கொள்ள வேண்டும் என்று அவள் நினைத்தாள். உடனே தன் மகள் ஐயையை அழைத்து ஆநிரைகளின் துன்பம் நீங்குமாறு குரவைக் கூத்து நிகழ்த்து வதற்கு ஆலோசித்து ஆவன செய்தாள்.

அன்று மாலையில் குரவைக்கூத்து நடைபெற இருந்தது. இவ்வேற்பாட்டிற்குரிய காரணம் மிகவும் சிறப்பானது. அன்றுதான் பாண்டியனது கோயிலுக்கு மாதரி நெய் செலுத்த வேண்டிய நாள். வழக்கம்போல் காலையில் எழுந்த மாதரி தன் மகள் ஐயையுடன் மத்தும் கடைகயிறும் கையில் ஏந்தி மோர் கடைவதற்குச் சித்தமானாள். முதல் நாள் இரவில் உறை ஊற்றி வைக்கப்பட்டிருந்த பாற்குடத்தைத் திறந்தாள். வழக்கம்போல் உறைந்திருக்க வேண்டிய குடப் பால் அன்று உறையவில்லை. மாதரிக்குத் திகைப்பு ஏற்பட் டது. சுற்றிலும் பார்த்தாள். தொழுவத்தில் கட்டப்பட் டிருந்த காளையின் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் சொரிவதைக் கண்டாள். அவளது திகைப்பு மேலும் அதிகப் பட்டது. முதல் நாள் உரியிலே ஏற்றி வைத்த வெண் ணெயை உருக வைத்தாள். அதுவும் உருகாமல் இருந்தது. துள்ளி விளையாடும் இளங் கன்றுகளும் ஆட்டுக் குட்டிகளும் அசைவற்று நின்றன. கறவைப் பசுக்கள் உடல் நடுங்கி நின் றன. அவற்றின் கழுத்தில் கட்டப்பட்டிருந்த மணிகள் தாமே அறுந்து கீழே வீழ்ந்து கிடந்தன. இவை எல்லாம் அன்று மாதரியின் மனையில் நிகழ்ந்த தீய குறிகளாகும். இவற்றைச் சிலப்பதிகாரம்,

''குடப்பால் உறையா! குவி இமில் ஏற்றின்
மடக்கண்ணீர் சோரும், வருவது ஒன்று உண்டு
உரிநறு வெண்ணெய் உருகா உருகும்;
மறிதெறித்து ஆடா! வருவதொன்று உண்டு

நால் முலே ஆயம் நடுங்குபு நின்று இரங்கும்;
மான்மணி வீழும்! வருவதொன்று உண்டு''

என அழுகுறப் புனைந்திருப்பதைக் காண்க.

இத்தகைய தீய நிமித்தங்களின் விளைவுகள் ஆயர்களைத் தாக்காமல் இருப்பதற்குச் சாந்தியாகவே குரவைக் கூத்து ஏற்பாடாயிற்று. கூத்தில் கலந்துகொள்ள ஏழு பெண்களைத் தயார் செய்தாள். இவ்வேழு பெண்களும் தத்தம் வீடுகளில் ஏழு காளைகளை வளர்த்து வந்தார்கள். தாம் தாம் வளர்க்கும் காளைகளை அடக்கி ஆள்பவரே தங்களுக்கு மணவாளர்களாகும் தகுதி உடையவர்கள் என்பது அதன் கருத்து. 'இது ஏறு தழுவுதல்' என்று கூறப்படும். குரவைத் கூத்திற்கு வேண்டிய சரித நிகழ்ச்சியும் முடிவு செய்யப் பெற்றது. முன்பு ஒரு காலம் ஆயர்பாடியில் கண்ணனும் பலராமனும் நப்பின்னையுடன் ஆடிய நிகழ்ச்சியையே இக்குரவைக்கும் ஏற்பாடு செய்தாள் மாதரி. அதனுல், குரவைக் கூத்தில் பங்குகொள்ளும் ஏழு பெண்களுக்கும் ஏழு பெயர்களை வைத்தாள். இப்பெயர்களை மாதரியே படைத்துக் கொண்டாள். தமிழில் பண்டு தொட்டு வழங்கிவரும் ஏழு சுரங்களின் பெயர்களாகிய குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் ஆகியவற்றை அவ்வேழு பெண்களுக்கும் பெயர்களாக அமைத்தாள். அப்பெண் எடுத்துப் பாடும் பாட்டிசையும் அச்சுரங்களுக்கு ஒத்ததாக இருக்கும். மேலும் குரலை மாயவனுகவும்,இளியைப் பலராமனுகவும்,துத்தத்தை நப்பின்னையாகவும், மற்ற இசைப் பெயர்களை மற்றவர்களாகவும் அமைத்துக் கொண்டனர். இதனை,

'மாயவன் என்ருள் குரலை விறல் வெள்ளை
ஆயவன் என்ருள் இளிதன்னை—ஆய்மகள்
பின்னையாம் என்ருள் ஓர் துத்தத்தை மற்றையார்
முன்னையாம் என்ருள் முறை'

எனச் சிலப்பதிகாரம் செப்புகின்றது.

இவ்வாறு ஏழு இசைகளின் பெயர்களைத் தாங்கிய ஏழு பெண்களையும் கூத்தாடுவதற்குரிய வரிசைப்படி நிறுத்தினுள் மாதரி. கைகோர்த்து நின்ற அப்பெண்கள் மாயோனுகிய கண்ணனைப் பற்றிப் பாட ஆரம்பித்தனர். அப்பாடல்களின் பொருள் படிப்பவர்களின் உள்ளங்களைப் பிணிக்கும் தன் மையன:

'தோழி, வஞ்சத்தால் தன்முன் வந்துநின்ற பசுவின் கன்றைத் தடியாகக் கொண்டு வஞ்சத்தாலேயே வளர்ந்து தோன்றிய விளாமரத்தின் பழத்தை வீழ்த்த கண்ணன், நமது பசுக் கூட்டத்திடையே வருவானுயின், அவன் வாய் வைத்து ஊதும்படியான கொன்றைக் குழலின் இன்னிசையைக் கேட்டு மகிழலாம் அல்லவோ?' என்ற கருத்தமைய,

'கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
இன்று நம் ஆனுள் வருமேல் அவன் வாயில்
கொன்றையம் தீங்குழல் கேளாமோ தோழீ!'

என்று பாடினர்.

இவ்வாறு பொருள் சிறந்த பாடல்கள் பலவற்றையும் பாடி ஆடிக் காட்டினர் குரவைப் பெண்கள். இவர்களின் பாடல் இனிமையையும் ஆடல் சிறப்பையும் கண்டும் கேட்டும் வியந்து நின்ற மாதரி, தன் உள்ளக் கருத்துக்களை வெளியிடும் வகையை ஆசிரியர் இளங்கோவடிகள் மிகவும் நயமாகப் பாடியுள்ளார். கண்ணனும் அவன் முன்னேனுகிய பலதேவனும் முன்பு ஒருநாள் அசோதை அகமகிழும்படி துவாரகையில் ஆடிய குரவைக் கூத்தினைப் போன்று இவ்வாயர் சிறுமியர் தமது கூந்தலில் சூடிய மாலைகள் ஆடிஅசையவும், அவர்கள் கைவளையல்கள் தாளமிட்டு ஒலிக்கவும் ஆடிக்காட்டிய குரவைக் கூத்து மிகவும் மகிழ்ச்சியைக் கொடுத்தது. இதனைச் சிலப்பதிகாரம்,

'மாயவன்தம் முன்னினெடும் வரிவளைக்கைப் பின்னையொடும்
கோவலர்தம் சிறுமியர்கள் குழற்கோதை புறஞ்சோர

ஆய்வளைச் சீர்க்கு அடிபெயர்த்திட்டு அசோதையர்
தொழுதேத்தத்
தாதெரு மன்றத்தாடும் குரவையோ தகவுடைத்தே’

என வருணித்துள்ளது.

இனி, இக்குரவைக் கூத்தின்கண் திருமாலைப் போற்றும் முறையில் படர்க்கைப் பரவலாக வந்துள்ள சிலப்பதிகாரப் பாடல் மிக்க சுவை வாய்ந்ததாகும்.

‘மூவுலகும் ஈரடியால் முறை நிரம்பா வகை முடியத்
தாவிய சேவடி சேப்பத் தம்பியொடும் கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல் இலங்கை கட்டழித்த
சேவகன் சீர் கேளாத செவி என்ன செவியே
திருமால் சீர் கேளாத செவி என்ன செவியே’

என்பது அப்பாடல்களில் ஒன்று.

இவ்வாறு கடவுளையும் மன்னனையும் பாடிய ஆய்ச்சியர், கண்ணகி முன்னிலையில் குரவைக் கூத்தாடினர். குரவைக் கூத்து முடிந்ததும், மாதரி பலவகையான பிரார்த்தனைப் பொருள்களுடன் திருமாலை வழிபடச் சென்றாள். கோவலன் இறந்தான் என்ற செய்தி ஊர்முழுவதும் காட்டுத் தீப்போல் பரவத் தொடங்கியது. ஐயையும் அதைத் கேட்டாள். அதை உடனே தாய்க்குச் சொன்னாள். ஆய்ச்சியர்களிடையேயும் அது பரவத் தொடங்கியது. “அழகும், குணமும், இளமையும், வனப்பும், நற்குணமும், கற்பும் அமைந்தவளுக்கு இவ்வாறு ஏன் துயரம் வரவேண்டும்?” என்று அவர்கள் பொருமி அழுதனர். ‘காதலர்ப் பிரியாமல் கவவுக்கை நெகிழாமல் தீதின்றி” வாழுங்கள் என்று அன்று வாழ்த்தியதுபோல் இன்றும் நடந்துவிட்டது. ‘உங்களைக் கண்டால் திருமாலும், திருமகளும்போல் இருக்கிறீர்கள். உங்களுக்கு ஒரு குறையும் வரக்கூடாது. கண்ணேறு பட்டுவிடுமோ என்றுதான் அஞ்சுகிறோம்’ என்று அன்று வாழ்த்தும்போது அமங்கலம் கலந்த வாழ்த்தாக வாழ்த்தினார்கள்

நினைத்தவாறே கண்ணேறும் பட்டுவிட்டது. கொஞ்சி மகிழ்ந்த இரு புருக்களைப் பாண்டியன் என்ற வேடன் பிரித்துவிட்டான். ஆண் புரு வேடனின் சொல்லம்பால் இறந்துவிட்டது. பெண் புருவின் துயரத்தைச் சொல்லவும் கூடுமோ?

கணவன் இறப்பதைப்போல் துன்பம் தரும் நிகழ்ச்சி பெண்களின் வாழ்க்கையில் வேறு ஒன்றும் இராது; தமிழ்ப் பெண்கள், வேற்று நாட்டவர்களைப்போல், கணவன் இறந்தபின் மறுமணம் செய்துகொள்ளும் வழக்கமுடையவர்களல்லர்! ''இருமணம் கூடுதல் இல்லியல்பு அன்று'' என்பர். காட்டுவதற்கு அரிய கணவனை இழந்த கண்ணகி, நடந்தது அறியாதவளாய் ஐயையைப் பார்த்து, ஏதோ நீங்கள் பேசிக் கொண்டிருக்கிறீர்களே, எனக்கு மிகவும் கலக்கமாக இருக்கிறது; யாது நடந்தது?'' என்று கேட்டாள்.

அதனை,

"காதலற் காண்கிலேன்; கலங்கிய நோய் கைம்மிகும்;
ஊதுலை தோற்க உயிர்க்கும் என் நெஞ்சு அன்றே;
ஊதுலை தோற்க உயிர்க்கும் என் நெஞ்சாயின்
ஏதிலார் சொன்னது எவன்? வாழியோ தோழீ!''

எனச் சிலப்பதிகாரம் தெரிவிப்பது காண்க.

ஐயை அவளிடம் நடந்ததைக் கூறவேண்டிய நிலைக்கு வந்துவிட்டாள். ''ஆம். உனது கலக்கம் சரியே; பாண்டியன் அரண்மனையிலே, சிலம்பைத் திருடிய கள்வனும் என்று ஐயுற்று உன் கணவனைக் காவலர் கொன்றனர்'' என்றாள். கண்ணகியின் கணவனையா காவலர் கொன்றார்கள்? இல்லை. அவள் கண்ணவனை அன்றோ கொன்றார்கள். கண்ணகியின் துயரம் அளவுக்கு மீறியது.

மணமான இரண்டு மூன்று ஆண்டுகளில், கோவலன் கண்ணகியை விட்டுப் பிரிந்து போய்விட்டான். கண்ணகியைத் திரும்ப அடையும்போது, கோவலனுக்கு இருபத்து

ஆறு ஆண்டுகள்தான் இருக்கும். கண்ணகிக்கு இருபத்திரண்டு ஆண்டுகள்தான் இருக்கும். இளமை கழிந்து முதுமைப் பருவம் வந்தபோது கோவலனுடன் கண்ணகி மீண்டும் கூடிப் பிரிந்திருந்தாலும் இந்நிகழ்ச்சியைக் கேட்ட மக்களது துக்கம் இத்துணை அளவுக்கு ஏற்பட்டிராது.

மறுநாள் காத்திருந்தால், மாதவியின் மாண்பு மணாளனுக்குத் தெரிந்துவிடுமே என்று இரவோடு இரவாகக் குலமகளிர்க்கு உரிய செயலினின்றும்* தான் வேறுபடுவதையும் பொருட்படுத்தாமல் மதுரைக்கு வந்த கண்ணகி என்ன பயனைக் கண்டாள்? "கண்ணே உன் சிலம்பை விற்று வருகிறேன்" என்று கூறிச் சென்ற கணவன் வருவான் வருவான் என்று வழிமேல் விழிவைத்து இருந்தவளுக்கு என்ன கிடைத்தது? பழியும் பாவமும் கணவனுக்கு ஏற்பட்டன. "என்னோடு அன்புடன் இருப்பான் என் இன்பக் கணவன்; அவன் நலமே அன்றித் தீது யாதும் அறியான்" என்று எண்ணி எண்ணிஇருமாந்திருந்த கண்ணகிக்கு இப்பொழுது "சிலம்பு என்னுடையதாக இருந்தும் அதனை அரண்மனையில் திருடினான் என்று பிறர் கூறும்படி ஆயிற்றே" எனப் பொங்கி எழுகின்றநிலை ஏற்பட்டுவிட்டது. "ஆ!" என் அருமைக் காதல" என்று அழுதாள். ஒரு கொடியில் இடி விழுந்துவிட்டால் எவ்வாறு இருக்குமோ அந்நிலையைக் கண்ணகி எய்தினாள். பொங்கி எழுந்த கண்ணகி, நிலை கொள்ளாமல் சோர்ந்து கீழே விழுந்தாள். அவ்வாறு அவள் தரையின்மீது விழுந்த காட்சி ஆகாயத்தில் உள்ள சந்திரன்மேகக் கூட்டத்தோடு பெயர்ந்து மண்ணின்மேல் விழுந்ததை ஒத்து இருந்தது என்கிறார் ஆசிரியர் இளங்கோவடிகள். விழுந்த கண்ணகியின் உள்ளத்தில் பாண்டியன் நீதிதவறியது தோன்றவே, கண்கள் கோபத்தால் சிவந்தன; இக்கோலத்தோடு "என் கண்மணியனைய கணவன் எங்கே எங்கே" என்று ஏங்கி வாய்விட்டு

*பொருள், வினை, கல்வி முதலியன குறித்துக் கணவன் பிரியும்போது குலமகளிர் உடன் போதல் கூடாது என்பது பழந்தமிழர் வகுத்திருந்த செயல் முறையாகும்.

அழுதாள்; அயர்ந்தாள். இக்காட்சியைச் சொல்லோவியம் செய்து காட்டும் இளங்கோவடிகள்,

''பொங்கி எழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
திங்கள் முகிலோடும் சேண்நிலம் கொண்டெனச்
செங்கண் சிவப்ப அழுதாள் தன் கேள்வனை
எங்கணு என்ணு இனைந்தேங்கி மாழ்குவாள்''

என்று குறிக்கும் திறத்தைப் பாருங்கள்.

மேலும் கண்ணகியின் கதிகலங்கிய நிலையை அடிகள் பின் வருமாறு வருணித்துக் காட்டுகின்ருர். மன்னவன் செய்த தவற்ருல் நான் என் கணவனை இழந்து கதறும்நிலை எனக்கு வந்ததே? தம் கணவன்மார் இறந்துபட்டு எரியில் மூழ்கவும் தாம் மட்டும் உயிர் வாழ்ந்து கைம்மை நோன்புகளை மேற் கொண்டு வாழ்கின்ற மற்றப் பெண்களைப்போல உலகம் பழிக்கும்படி நான் வாழ்வேனே? என்று அரற்றினுள். கண்ணகியின் ஆற்ருமையை அவள் நிலையில் இருக்கும் மற்ற பெண்தான் உணர முடியும். இந்நிலையைச் சிலப்பதிகாரம்,

''இன்புறு தம் கணவர் இடர் எரியகம் மூழ்கத்
துன்புறுவன நோற்றுத் துயருறும் மகளிரைப்போல்
மன்பதை அலர் தூற்ற மன்னவன் தவறு இழைப்ப
அன்பனை இழந்தேன் யான்; அவலங்கொண்டு அழிவலோ!

''தம்முறு பெருங்கணவன் தழலெரி யகமூழ்கக்
கைம்மைகூர் துறைமூழ்கும் கவலைய மகளிரைப் போல்
செம்மையின் இகந்தகோல் தென்னவன் தவறிழைப்ப
இம்மையும் இசைஒரீஇ இனைந்தேங்கி அழிவலோ?''

என்று சித்திரிப்பது காண்க.

கண்ணகியின் கடுந்துயரம் கரைகாணு நிலையை அடைந்தது. சூரியனே! என் கணவன் கள்வனு? என்று கதறினுள். கதிரவன், கண்ணகியின் நிலைகண்டு வருந்தி, ''உன் கணவன் கள்வன் அல்லன், இம்மதுரையில் பாவங்கள் மல்கிவிட்டன.

ஆகையால் இவ்வூரைத் தீயுண்ணும்'' என்று அசரீரியாகக் கூறினன்.

கண்ணகியின் வருத்தம் கரை கடந்துவிட்டது. அவள் மிகுந்த சினம் கொண்டாள். அன்பின் பிறப்பிடம் பெண்மைக் குலம். கொலையுண்டான் கோவலன் என்றவுடன், அவளுடைய அன்புள்ளம், அறம் தவறி அரசனை அழிக்கவும் அஞ்சவில்லை. பேசுவதற்கே அஞ்சும் அவள், தன் தன்மை மாறி வஞ்சினம் கூறும் நிலைக்கு வந்துவிட்டாள். கண்ணகி தான் அணிந்திருந்த மற்றொரு சிலம்பைத் தன் கையில் ஏந்தினள். புலம்பி அழுதாள். 'என் கணவனை முன்போல உயிருடன் காண்பேன். கொஞ்சிக் குலாவுவேன்' என்று அரற்றத் தொடங்கினள். துக்கமிகுதியால் பித்தம் தலைக் கேறிப் பேதுறலானள்.

கண்ணகி புதுவாழ்வு வாழக் கோவலுடன் மதுரை வந்தாள். வாழ்விலும் தாழ்விலும் ஒரே துணைவன் என்று எண்ணிய கோவலன் அந்த இடத்தில் இறந்துவிட்டான். அவன் இறந்தான் என்பதைக்கூட அவளால் நம்பவே முடியவில்லை.

''பட்டேன் படாத படுதுயரம் படுகாலை
உற்றேன் உறுதது உறுவனே ஈதொன்று;
கள்வனோ அல்லன் கணவன், என் காற் சிலம்பு
கொள்ளும் விலைப்பொருட்டால் கொன்றாரே ஈதொன்று;
மாதர்த் தகைய மடவார்கள் முன்னரே
காதற் கணவனைக் காண்பேனே ஈதொன்று;
தீதறு நல்லுரை கேளாது ஒழிவேனேல்
நோதக்க செய்தாள் என்று எள்ளல், இது ஒன்று''

என்று சொல்லிக் கதறிப் புலம்பினள்.

அவள் மனக்கண்ணில் அங்கே வாழும் பெண்குலத்துப் பத்தினிப் பெண்டிர் தோன்றுகின்றனர். அவர்களை நோக்கிய கண்ணகி, ''நிறையுடைப் பத்தினிப் பெண்டிர்காள்'' என்று அரற்றுகிறாள்.

தன்னுடைய பாதச் சிலம்பை விற்ற கோவலன் கள்வன் என்று அநியாயமாகக் குற்றஞ்சாட்டப்பட்டதைக் கண்டு அவள் நெஞ்சம் துடித்தது. அது பெண்குலத்திற்கு ஏற்பட்ட ஒரு கொடுமை என்று நினைத்தாள் அவள். மன்னன் மாநில மெல்லாம் காக்கும் காவலன். அவன் தன் மனையாளை மகிழ் விக்கக் கொல்லன் பேச்சைக் கேட்டு ஒரு பெண்ணை மங்கலம் இழந்துவிடச் செய்துவிட்டான். இது ஒரு பெரும் அநீதி; இதுபோல அரசன் தான் கண்டதே காட்சி கொண்டதே கோலம் என நீதி செலுத்துவானுனல் மாநிலம் வாழுமா? என நினைத்தாள். ஆகையால்தான், ''இறைவன் போல மன்னன் மாட்சியுடன் மன்பதை காத்து ஆளவேண்டி யிருக்க, அக்கிரமத்திற்கே உறைவிடமாக அவன் சென்று கொண்டிருக்கவும், பெண்களும் அறிஞர்களும் ஏன் உண்டு களித்து உறங்கிக் கொண்டிருக்கிருர்கள்'' என்று நினைத் தாள்; கொதித்தாள். வீதியில் நடமாடிக் கொண்டே ''பெண்டிரும் உண்டுகொல்! அறிஞர்களும் உண்டுகொல்'' என்று அலறுபவள்,

''பெண்டிரும் உண்டு கொல் பெண்டிரும் உண்டு கொல்
கொண்ட கொழுநர் உறு குறை தாங்குறூஉம்
பெண்டிரும் உண்டுகொல் பெண்டிரும் உண்டுகொல்
சான்றேரும் உண்டுகொல் சான்றேரும் உண்டுகொல்
ஈன்ற குழவி எடுத்து வளர்க்குறூஉம்
சான்றேரும் உண்டுகொல் சான்றேரும் உண்டுகொல்
தெய்வமும் உண்டுகொல் தெய்வமும் உண்டுகொல்
வைவாளில் தப்பிய மன்னவன் கூடலில்
தெய்வமும் உண்டுகொல் தெய்வமும் உண்டுகொல்''

என வாய்விட்டுக் கதறினுள்.

பின்பு கோவலனைக் கொலை செய்த களத்தை நாடிச் சென்றுள்; அவனைக் கண்டாள். அவனுடைய இனிய முகத் தைக் கண்டாள்; மயங்கினுள்; அவனுடைய முகம் பேசவும் கண்டாள். ''கண்ணகியே, நான் குற்றமற்றவன், ஏன் உன்

உடல் வாடியிருக்கிறது? உன் கண்ணீரைத் துடைத்துக் கொள்'' என்று அவன் கூறினன். பின்னர் அவளுடைய கண்ணீரைத் துடைத்து, ''இரு, நான் சென்று வருகிறேன்'' என்று கூறிவிட்டுத் தேவருலகம் சென்றுவிட்டான்.

கண்ணகி சிறிதுநேரம் கழித்துத் தன் நிலையை அடைந்தாள். தான் கண்டது கனவா, நனவா அல்லது கண்டது பொய்தானு என்று நினைத்தாள். தான் கண்ணுரைக் கண்டதெல்லாம் கனவாய்ப் போய்விட்டதே என்று எண்ணினுள். ஒருவேளை அது மாயமாக இருந்தாலும் இருக்கலாம் என எண்ணினுள். அல்லது ஏதோ ஒரு தெய்வம்தான் தன்னை மருட்டிவிட்டதோ என நினைத்தாள். ''நான் இனி எங்குப் போய் என் கணவனைத் தேடுவேன்'' என்ருள்.

''மாயங்கொல் மற்று என்கொல் மருட்டியதோர் தெய்வங்கொல்
போய் எங்கு நாடுகேன் பொருளுரையோ இது வன்று''

என்பது அவள் கூற்று.

''வெட்டுண்ட தலை பேசுமா?'' என்று பல அறிஞர்கள் கேட்கிருர்கள். இது கட்டுக்கதை என்றும் சில அறிஞர்கள் கூறுகின்ருர்கள். தலை பேசிற்ரு? இல்லை. கண்ணகி ஆவேசத்துடன் வந்தாள். அவள் எந்த எண்ணத்துடன் வந்தாளோ, அது அவளுக்கு முன் தோன்றியது. கானல் நீரை, நீர் என்று எண்ணினுள். மனப்பிரமையை மெய் என்று நினைத்தாள். பின்னுல் தானே ஐயுற்ருள். இது நடக்குமா? ஆம். இதுநாளும் நடப்பதுதான். ஒரு பெரியார் தன் தந்தை இறந்தபின் இலங்கைக்குச் சென்ருர். அந்நாட்டின் எழில்மிகு தோற்றத்தைக் கண்டார். தன்னை மறந்தவராய், தம்முடைய இறந்துபோன தந்தை அருகிலிருந்தால் எத்துணை நன்மையாயிருக்கும் என்று நினைத்தார். சிறிதும் சிந்தியாது தன் தந்தைக்கு இலங்கை வருமாறு தந்தி கொடுத்துவிட்டார்.

இதே போலக் கண்ணகியும் ஒரு பகற்கனவைக் கண்டாள். அந்தக் கருத்தையறியாமல், சிலப்பதிகாரம் கட்டுக் கதை என்று கூறிவிடுகிறோம். கோவலன் தலை பேசியது இயற்கைக்குப் புறம்பான நிகழ்ச்சிதான். இது கதை ஓட்டத்திற்கு ஏதும் துணை செய்யவில்லை. ஆனால் கண்ணகியின் ஆறாத காதலை அழகுடன் விளக்கிக் காட்டுவதுடன் அமைந்து விடுகிறது.

தான் இவ்வுலகத்தில் கணவனைக் கூடுவதென்பது கனவாகவும், கானல் நீராகவும், பகற்கனவாகவும் ஆகிவிட்டதைக் கண்டாள். கண்ணகியினுடைய மீன் போன்ற நீண்ட கண்களிலே, நீர் ஆறுபோல ஓடியது. அந்த நீரையும் துடைத்துக் கொள்ளாமலே, அரசன் அரண்மனை முன் சென்றாள்.

## 19. வழக்குரைத்தல்

திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டதாகக் கூறுவார்கள். முறைசெய்து காப்பதனால் அவனை இறைவன் என்றே குறித்தார்கள். அன்பின் உறைவிடமாய் அறநெறியின் இருப்பிடமாய், நீதியின் சிகரமாக வாழவேண்டியவன் அரசன். அரியணையின்மீது இருந்தே ஆட்சி செய்யவேண்டும். அமைச்சர் குழுவும், எண்பேராயமும் அவனுக்குத் துணை புரிய வேண்டும். ஐயம் ஏற்படும்போது, அவனுடைய மனமே வழிகாட்டியாக நிற்கவேண்டும். ஆனால் என்ன நடந்தது? பொற்கொல்லன் சொன்ன வார்த்தையை நம்பி, ஒரு குற்றமும் இல்லாதவனைக் கொலை செய்து விட்டான் பாண்டியன். பாண்டி மாதேவியின் மனம் சஞ்சலிக்கத் தொடங்கியது. அவள் ஒரு தீக் கனாக் கண்டாள். கனவில், சூரியனை இருள் சூழ்ந்து கொண்டது; என்றுமே கேட்காத ஆராய்ச்சி மணியின் ஓசை கேட்டது; வெண்கொற்றக்குடை வீழ்ந்தது; பகலிலே நட்சத்திரங்கள் விழத்தொடங்கின. இத்தகைய தீக் கனாக் கண்ட கோப்பெருந்தேவி போந்து அரியணை மீதிருந்த தன் கணவனிடம் அவற்றைக்கூறிக்கொண்டிருந்தாள்.

கோப்பெருந்தேவி அரசனிடம் அவலச் செய்தியைக் கூறிக் கொண்டிருக்கும்பேபது கண்ணகி மாளிகையின் முன் வந்துவிட்டாள். வாயிற்காப்போனை நோக்கி, "வாயிற் காப்போனே! அறிவை இழந்து, அறநெறியினின்றும் தவறிய காவலனின் வாயில் காப்போனே, உன் மன்னனிடம் ஒரு சிலம்பைக் கையில் தாங்கிய ஒரு பெண் நீதிக்காகக் காத்திருக்கிறாள் என்று சொல்" என்றாள். இங்குக் கண்ணகி

அரசவை வாயில் காப்போனை விளித்துப் பேசியவிதம் சிலம் பில் சித்திரிக்கப்பட்டுள்ளவாறு கண்டு மகிழ்க.

''வாயிலோயே, வாயிலோயே,
அறிவு அறை போகிய பொறியறு நெஞ்சத்து
இறைமுறை பிழைத்தோன் வாயிலோயே''

என்பன சிலப்பதிகார வரிகள். இங்கு, 'வாயிலோயே' என்னும் தொடர் 'வாயில் காப்போன்' என்றும் 'வாய் இல் லாதவன்' என்றும் பொருள்படும். மனதில் எண்ணிய எண் ணங்களைத் தடையின்றியும் உரிமையோடும் வெளிப்படுத் தும் தன்மை இல்லாத காவலன் என்ற பொருள் வாயிலோய் என்ற சொல்லில் நிரம்பியுள்ளது. அஃதாவது: அரசன் ஆணை யின்றித் தான் மட்டும் நினைத்த எதனையும் வெளியிட முடி யாத நிலையில் உள்ளவன் அவன். அரசனுக்கு அடிமை என் பது பொருள். 'ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர் களாய் வாழும்' வருக்கத்தைச் சார்ந்தவன் அவன் என்பதை இவ்வரிகள் விளக்குகின்றன. அச்சொல்லைக் கேட்டதும் காவற்காரன் உடல் பதறிவிட்டான்; காளிதேவிதான் வந்து விட்டாளோ? என்று ஐயமுற்றான். 'அவன் ஓடோடியும் மன்னனிடம் சென்று, ''மன்னர் மன்னா, காளிதேவியோ, பிடாரியோ, நான் அறியேன். ஈசனுடன் ஆடிய காளிபோல ஆடியபடி ஒரு நங்கை வந்துள்ளாள். அவள் பிடாரியோ, துர்க்கையோ, காளியோ எனில் அவர்கள் அல்ல. ஆனால் அவர்களைப் போலச் சினமுற்றுத் தோன்றுகிறாள். தொழில் திறம் அமைந்த ஒரு பொற்சிலம்பினைக் கையில் ஏந்தியுள் ளாள். கணவனை இழந்தவளாம்; தங்களைக் காணவேண்டு மென்று கூறுகிறாள்,'' என்றான். அரசன் அவளை உள்ளே கொணருமாறு கூறினான். கண்ணகி கண்களில் நீர் ததும்பக் காவலன்முன் நின்றாள். அரசன் அவளை நோக்கி, ''நீ யார்?'' என்று கேட்டான். அவன் கேட்டது ஒரு கேள்விதான். அவள் பதில் கூறத் தொடங்கினாள். மன்னன் மாறுபட்ட கருத்தில் இருந்த போதிலும், அவன் வேறு ஒன்றும் கூறிமுடியாத வாறு கூறினாள்.

"நீ யார் என்று கேட்கும் மன்னவனே, கூறுகிறேன் கேள்: ஆராய்ந்து பார்க்கும் ஆற்றலை இழந்துவிட்ட அரசனே, கேள்: இமையவர்கள் வியக்கும்படியாக ஒரு புறாவிற்காகத் தன் உடலை அறுத்துக் கொடுத்த சிபியும், தன் மகன் ஒரு கன்றைக் கொன்றான் என்று ஆராய்ச்சி மணி ஓசையின் மூலம் கேட்டவுடனே பசுவின் கண்ணில் வடிந்த கண்ணீரைக் கண்டு அஞ்சித் தன் மகனையே தேரிலிட்டுக் கொன்ற மனுவும் வாழ்ந்த சோழ மண்ணிலே பிறந்தவள் நான். நான் பிறந்த ஊர் பூம்புகார் நகரம். மாசாத்துவான் மகனான கோவலனை மணந்தேன். அவன் முன்செய்த வினையால், வாழ்தல் வேண்டி, உன் நகருக்குள் புகுந்தான். என் காற்சிலம்பை விற்கவந்தபோது, உன்னால் கள்வன் என்று குற்றம் சாற்றப் பெற்றுக் கொலை செய்யப்பட்டான். உன் அநீதியின் காரணமாகக் கொலை செய்யப்பட்ட கோவலனுக்கு மனைவி நான். கண்ணகி என்பது என் பெயர்" என்றாள். இதனைச் சிலப்பதிகாரம்,

"தேரா மன்னா செப்புவது உடையேன்:
எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்
புள் உறு புன்கண் தீர்த்தோன்; அன்றியும்
வாயில் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகும் நீர் நெஞ்சு சுடத் தான் தன்
அரும் பெறல் புதல்வனை ஆழியில் மடித்தோன்
பெரும்பெயர்ப் புகார் என்பதியே; அவ்வூர்
ஏசாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங்குடி
மாசாத்து வாணிகன் மகனை யாகி
வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்பச்
சூழ்கழல் மன்னா! நின்நகர்ப் புகுந்து ஈங்கு
என்கால் சிலம்பு பகர்தல் வேண்டி நின்பால்
கொலைக்களப்பட்ட கோவலன் மனைவி.
கண்ணகி என்பது என் பெயரே"

என்று சித்திரித்துள்ளது.

மன்னவன்:-ஆரணங்கே, கள்வனைக் கொல்லுதல் குற்ற மல்லவே?

கண்ணகி:-மதியிழந்து விட்டாய் மன்னவனே! கள்வன் என்பதை எங்ஙனம் கண்டாய்? அமைச்சர்களோடு கூடியிருந்து ஆராய்ந்த பின் என் கணவனைத் தண்டித்தாயா? இல்லை, ஆராய்ந்துதுணிந்ததுதான்உண்டா? அதுவும்இல்லை. என் காற்சிலம்பு இதோ இருக்கிறது, இதில் உள்ள பரல்கள் மாணிக்கப்பரல்கள். எங்கே உன் தேவியின் சிலம்பு...?

மன்னன் :-தேன் போன்ற மொழியையுடைய மங்கையே, என் தேவியின் சிலம்பில் உள்ள பரல்கள் முத்துக்கள். இதோ இருக்கிறது சிலம்பு.

கண்ணகி தன் சிலம்பினை உடைத்தாள்; மாணிக்கப் பரல்கள் சிதறி ஓடின.

மன்னன்:-அமைச்சரோடு ஆராயாது பொற்கொல்லன் சொல்லியதைக் கேட்டுத் தண்டனை கொடுத்த நான் அரசன் அல்லன். கோவலனின் சிலம்பை நான் வைத்திருப்பதால் நானே கள்வன். பிழையே அறியாத பாண்டியர் பெருங்குடி என்னால் பழியடைந்தது. "மன்பதைக் காக்கும் தென்புலம் காவல் என் முதற் பிழைத்தது, என் வாழ்நாள் இன்றுடன் முடியட்டும்" என்று சொல்லிக்கொண்டே வீழ்ந்து இறக்கின்றான். இதனைச் சிலப்பதிகாரச் செய்யுள்,

"கண்ணகி அணிமணிக் காற்சிலம்பு உடைப்ப
மன்னவன் வாய் முதல் தெறித்தது மணியே,
மணி கண்டு
தாழ்ந்த குடையன் தளர்ந்த செங்கோலன்
பொன்செய் கொல்லன்தன் சொல் கேட்ட
யானோ அரசன்? யானே கள்வன்!
மன்பதை காக்கும் தென்புலம் காவல்
என்முதல் பிழைத்தது, கெடுக என் ஆயுள்"

என்று அவலம்பட அறிவுறுத்துகின்றது.

கோப்பெருந்தேவியும் நிலையிழந்தாள்; கணவனை இழந்த பெண்ணிற்கு யாரைக் காட்டி ஆறுதல் அளிக்க முடியும். தாயாய், தந்தையாய் நாலிருக்கிறேன் எனக் கூறி மற்றோர் ஆதரவளிக்க முன்வரலாம். ஆனால் கணவனை இழந்தவளுக்கு வேறு ஆதரவு தமிழகம் கண்டதில்லை. ஏழேழு பிறப்பு எடுப்பினும் நான் உன் மனைவி, நீ என் கணவன் என்ற தமிழ்ப் பெண்ணுக்கு யார் துணை செய்ய முடியும்? காட்டுவதற்கு அரிய கணவனை இழந்த கோப்பெருந்தேவியும் மூர்ச்சை அடைந்து இறந்தாள்.

இவ்வாறு கண்ணகி வழக்குரைத்து வெற்றி பெற்று நின்றதும், பாண்டியனும் பாண்டிமாதேவியும் பழியைத் துடைக்கத் தமது உயிர்களைப் பணயமாக வைத்ததும் ஆகிய விரிந்த நிகழ்ச்சிகளை எல்லாம் படித்து உணர்ந்த பிற்காலப் பெரியார் ஒருவர் இந்நிகழ்ச்சிகளைப் பின்வரும் வெண்பாவில் சுருக்கமாகவும், நுட்பமாகவும் அமைத்திருப்பது இங்கே நோக்கத்தக்கதாகும்.

காவி உகுநீரும் கையில் தனிச் சிலம்பும்
ஆவி குடிபோன அவ்வடிவும்...பாவியான்
காடெல்லாம் சூழ்ந்த கருங்குழலும் கண்டு அஞ்சிக்
கூடலான் கூடாயி னன்.

மன்னன் மாண்டுவிட்டான். மதுரை மக்கள் மனம் கலங்கினர். புலிக்கொடியோன் நாட்டில் பிறந்த கண்ணகியின் கயல்விழிகளுக்குமுன் பறக்க அஞ்சியது பாண்டியனது மீன் கொடி. செங்கோல் ஆட்சி சோழ மண்டலாதிபதியின் தனி உரிமைச் சொத்தா? இல்லை. ஆனாலும் ஆத்திரத்தில் ஆதவனைக் கேட்டாள் ஆரணங்கு. மன்னன் குற்றமுடையோன் என்று அவனும் கூறினன். புகார் நகரிலே கற்பின் கொழுந்துகளான ஏழு பெண்களின் நினைவு அவளுக்கு வந்தது. திருப்புறம்பயத்திலுள்ள சிவலிங்கப் பெருமானுக்கு ஸ்ரீசாட்சி நாதர் என்று ஒரு பெயருண்டு. இங்கேதான் ஒரு கற்புடைய பெண்ணுக்குச் சிவலிங்கமும் வன்னி மரமும்

சாட்சியாக வந்தன. சோழ நாட்டில் உயர் குடியிலே பிறந்த பல பெண்கள் இயற்கைக்குப் புறம்பான நிகழ்ச்சிகளைச் செய்து தங்கள் கற்பின் திறத்தை மெய்ப்பித்திருக்கின்றனர். பத்தினிப் பெண்கள் வாழ்ந்த புகார் நகரிலே பிறந்தவள் கண்ணகி. அவளும் ஒருசினம் கொண்டாள். மதுரையை எரிப்பேன் என்று மறம் கூறி அதை வெளிப்படையாகவும் கூறினாள். மதுரையிலுள்ள "நல்லோர்களும் குழந்தைகளும் தவிர மற்றோரெல்லாம் எரியக் கடவர்" என்று கூறினாள். அவள் சாபம் பலித்தது; மதுரையும் எரியுண்டது.

மதுரை என்ன பாவம் செய்தது? மார்பகத்தின் இடப் பாகத்தைக் கிள்ளி எறிந்தாள் கண்ணகி. அதன் விளைவு தீயாய் மூண்டது. ஆயர்பாடியிலே தீ மூட்டிச் சமைக்கத் தெரியாத கண்ணகி, மதுரையையே ஊழித் தீயோ எனக் கண்டோர் கருதுமாறு அனல் கொழுந்துவிட்டு எரியச் செய்து விட்டாள். எங்கும் கண்ணகியின் பேச்சே கேட்டது. ஆடல் மகளிர் பாடல் மகளிர் எல்லோரும் அசைவற்று நின்றனர். வியப்பின் எல்லையையடைந்து எல்லாப் பெண்களும் "கணவனை இழந்து செங்கோல் தவறிய மன்னனைக் கொன்று இவ்வூரைத் தீயிட்ட இந்தப் பெண் எந்நாட்டினளோ? யார் பெற்ற மகளோ?" என்றனர். இதனைச் சிலப்பதிகாரம்,

'நாடக மடந்தையர் ஆடரங்கு இழந்து ஆங்கு
எந்நாட்டாள் கொல்? யார்மகள் கொல்லோ?
இந்நாட்டு இவ்வூர் இறைவனை இழந்து
தேரா மன்னனைச் சிலம்பின் வென்று இவ்
ஊர்தீ யூட்டிய ஒருமகள்'

என்று கூறுகின்றது.

மதுரையைத் தீயிட்ட பின்னும் கண்ணகியின் சினம் தணியவில்லை. தெருவிலே கவலை தோய்ந்த முகத்துடனே சுற்றி வந்தாள். மதுரையைக் காத்த மதுராபதித் தெய்வமும் அவளைக் காண அஞ்சியது. மதுராபதித் தெய்வம் கண்

ணகியின் பின்பக்கமே சென்று, "அம்மையே, என் குறையினைச் சற்றுக் கேட்க வேண்டுகிறேன்" என்றது.

"நீ யார்?" என்று கேட்டாள் கண்ணகி.

மதுராபதித் தெய்வம், "நங்கையே, உன்னுடைய பெருந் துன்பத்தை நான் அறிவேன். அதற்குப் பெரிதும் வருந்துகிறேன். மதுராபதி என்பது என் பெயர். பாண்டியன் குற்றமற்றவன். இது நடந்தது ஊழ்வினைப் பயனுகும்" என்றது.

கண்ணகி:-உண்மையாகவா?

மதுராபதி:-ஆம். இம் மதுரையில் மறை ஓசை கேட்குமே யல்லாது, மணியோசை கேட்டதில்லை. பகைவர்கள் அரசனைப் பழித்ததுண்டு; ஆனால் குடிகள் தூற்றியதில்லை.

கண்ணகி:-காமாந்தகாரனே பாண்டியன்?

மதுராபதி:-இல்லை; ஒருகாலும் இல்லை. அழகிய நெற்றியிலேயும் மயிலின் சாயலையுமுடைய மாதர் கடைக்கண் நோக்கிலே இளமை என்கின்ற யானை, கல்வி என்கின்ற பாகனுக்குக் கட்டுப்படாமல் ஓடிய சமயத்திலும் பாண்டியன் ஒழுக்கத்தில் தவறியதில்லை.

கண்ணகி:-நீதியின் திறம் புகாரில் உண்டு. இங்கு இல்லையல்லவா?

மதுராபதி:-இல்லை அம்மா, இங்கும் நீதிக்காகத் தன் கையையே வெட்டிக் கொண்ட பொற்கைப் பாண்டியன் போல் பலர் உள்ளனர். மனம் தெளிவு பெறுவாயாக.

கண்ணகி:-நான் மதுரையை எரித்துவிட்டேன்.

மதுராபதி:-நான் என்ற அகங்காரத்தை விட்டுவிடு. முன்பே எனக்கு மதுரையை எரிக்க ஒரு ஆணை உண்டு.

கண்ணகி:-ஆம், நான் யார் மதுரையை எரிக்க. நீதிதேவன் தன் கடமையைச் செய்துவிட்டான்.

மதுராபதி :--அம்மா. இன்று முதல் பதினுன்காவது நாள் கழிந்த பிறகு நீ உன் கணவனை வானவர் வடிவில் கண்டு கூடுவாய்.

அது கேட்ட கண்ணகி துர்க்கை கோவிலுக்குச் சென்ருள். பின்னர் மதுரை மேற்கு வாசல் வழியாக அந்நகரை விட்டுச் சென்ருள்.

கிழக்கிலே உதய சூரியன்போல் கணவனுடன் வந்த கண்ணகி, மேற்கிலே கணவனை இழந்து வறியவளாய்ச் செல்லலுற்ருள். இரவென்றும், பகலென்றும் பாராமல் வையையின் கரை வழியே சென்று தெற்கேயுள்ள மலைத் தொடரின் முடியொன்றில் கோயில் கொண்டிருக்கும் நெடு வேள்குன்றம் என்னும் மலைமீது ஏறினுள் கண்ணகி.

பின்னர் மதுராபதித் தெய்வம் உரைத்தபடியே பதி னுன்காம் நாள் எல்லையில் பகற்பொழுதில் தெய்வ வடிவு டன் விமானம் ஊர்ந்து வந்த கோவலனேடு கண்ணகி விமா னம் ஏறித் தேவர்கள் பாராட்டத் துறக்கம் சென்றனள். இதனை அடிகள்,

"அமரர்க்கு அரசன் தமர் வந்து ஏத்தக்
கோநகர் பிழைத்த கோவலன் தன்னெடு
வானவூர்தி ஏறினள் மாதோ
கானமர் புரிகுழற் கண்ணகி தானென்"

என்று குறிக்கின்ருர்.

குன்றக் குறவர் கண்ணகியைக் கண்டனர். கண்டவுடன் தெய்வமோ என அஞ்சினர். அவர்களது உள்ளுணர்ச்சி அவளைத் 'தொழு', 'தொழு' என்று கூறியது. ஆனல், இந் நிலையிலும் குறவர்களுடைய அறிவு மங்கிவிடவில்லை. "நீ யார்?" என்று கேட்காமல் முதலில் தாங்கள் யார் என்ப தைத் தெளிவாக அவளிடம் கூறுகின்றனர்.

வள்ளியம்மை பிறந்தது குறவர் குடியிலே. அவளை முருகப் பெருமான் வந்து மணந்து கொண்டான். தமிழர்

பெருங்குடிக்குச் சிறப்பாக அமைந்தது களவொழுக்கம். ஒருவனும், ஒருத்தியும், காதலித்துக் கடிமணம் புரிந்து கொள்ளுவதுதான் தமிழர்களின் சிறந்த ஒழுக்கம். தேவ யானையை,இந்திரன் கொடுக்க மணந்த முருகன் வள்ளியைத் தமிழ் முறையில் காதலித்துத் திருமணம் செய்துகொண் டான். மலைவாழ் மக்களேயாயினும், குறவர்களிடத்தில் திருந்திய நாகரிகமும் பண்பாடும் அமைந்திருந்தன. அந்தப் பண்பாடுஅவர்களுடையபேச்சிலும் தொனித்தது. அவர்கள் கண்ணகியை நோக்கி "எம்குடி வந்த வள்ளியம்மையைப் போல இருக்கிறீர்கள்"என்றனர்.உறவும் அறிந்துகொள்ளக் கூடிய உரிமையும் உடையவர் தாங்கள் என்பதைக்கூருமலே கூறிவிட்டனர். இதற்கு விடையாக, கண்ணகி 'என் கணவ னைப் பாண்டியன் கொன்று விட்டான். நான் மன்னனோடு மதுரையையும் அழித்த தீவினையேன்" என்றாள்.

கண்ணகி பிறந்தது முதல் மதுரையில் ஆயர்பாடி வரும் வரையிலும் தெரிந்தவர்களுடனேயே பழகியவள். இவளை "நீ யார்" என்று யாரும் கேட்காவண்ணம், அறி முகம் செய்து வைக்கப்பட்டாள். ஆனல் அவளை, "நீ யார்" என்று பிறர் கேட்கும் அவல நிலையும் அவட்கு வந்துவிட்டது அவளுடைய கடைசிக் காலத்தில் முதன் முதலில் அவளை "நீ யார்" என்று கேட்டவன் மதுரை மன்னன். அந்தக் கேள்வி, அவளை ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது. எரிமலை போல்குமுறி எழுந்தாள்; கனல் எனக் கக்கினள் வார்த்தைகளை.காவலன் கலங்கிக் கையற்றுக் கதறி உயிர்விட்டான். அதே கேள்வி யைத்தான், குறவர்கள் கேட்டார்கள். ஆனல் கண்ணகியின் கண்களிலே கனலென கோபமெழவில்லை; கண்களிலிருந்து கருணை வெள்ளம் நிறைந்து பெருகத் தொடங்கியது. தான் மதுரையை எரித்ததற்கு வருந்தினள். ஆகையால்தான், தன்னை தீவினை செய்த ஒரு பெண் என்று அடக்கமாகக் குற வர்களிடம் கூறினள்.

கண்ணகியைத் தெய்வ வடிவிலே கண்டனர் குறமக்கள் உள்ளத்தில் பொய்யாது, வாழ்வாங்கு வாழ்ந்ததனல், கண்

ணகி எல்லோரது உள்ளத்தையும் கவர்ந்து, வானுறையும் தெய்வமாகக் காட்சிதந்தாள். அவளைக் குறமக்கள் போற்றித் தொழுதனர். அவ்வமயம் கோவலன் வானுலகத்திலிருந்து வந்து அவளைக் கூட்டிச் சென்றான்.

கோவலன் கண்ணகியரின் உலக வாழ்க்கை முற்றுப் பெற்றுவிட்டது. கண்ணகி தெய்வமாக்கப்பட்டுவிட்டாள். குறிஞ்சி நிலமக்களான குறவர்கள் அந்நிலத்திற்கு உரிய பறையை முழக்கம் செய்தனர். நறும்புகை எழுப்பி, வற்றாமல் வளம் சுரக்குமாறு தெய்வத்துக்குப் பூப்பலிசெய்தனர். கொம்பை ஊதி மணி அடித்தனர். துன்பம் வந்தாலும், இன்பம் பெருக்கெடுத்தாலும், பக்தி மேலிட்டாலும் நம் நாட்டில் குரவைக் கூத்தாடுவது வழக்கம் உண்டு என்பதை நாம் இங்கு அறிகிறோம். குறமகளிர் ஆடிய குரவைக் கூத்தைச் சுருக்கமாகத் தெரிந்து கொள்ளுவோம்.

மலைநாட்டுத் தலைவனிடத்தில் ஒரு மங்கை காதல் கொண்டிருந்தாள். ஆனால் கடமை தடுத்ததால் அவன் அவளைப் பலகாலமாகியும் மணக்க வரவில்லை. ஒரு நாள் தலைவனது நாட்டு மலையருவியின் பக்கத்து மரச் சூழல்களிடையே, அவன் மறைந்து நிற்பதை அவள் நுணுக்கமாய்த் தெரிந்து கொண்டாள். அவன் காது குளிரப்பாட ஆரம்பித்து,

''ஆடுதுமே தோழி ஆடுதுமே தோழி
அஞ்சல் ஓம்பு என்று நலன் உண்டு நல்காதான்
மஞ்சுசூழ் சோலை மலையருவி ஆடுதுமே!''

என்று பாடினாள்.

''கண்மணி, நீ, அஞ்சாதே'' என்று அவளைக் கனிவுடன் கூடி மகிழாமல் இருக்கின்றான் தலைவன். எனினும், அவனுடைய மலையருவி என்றும்பாராமல் அதன்கண் நீராட நினைக்கிறாள் தலைவி. தலைவன் தவறு செய்து விட்டதற்காக அந்நாட்டு அருவியின் மேல் கோபம் கொள்ள விரும்பவில்லை அவள்

"ஓவென்று பேரிரைச்சலுடன் செல்லும் இந்த அருவி பிழை செய்தது இல்லை, பூக்களோடு வரும் புதுப்புனலோடு, நான் ஏன் புலந்து கொள்ளவேண்டும்? இதனிடத்தில் சிறு பிழையும் காணவில்லை'' என்றாள் தலைமகள்.

தோழி: அம்மையே வேறு யாரிடத்தில் பிழை கண்டீர்கள்?

தலைவி: மலையின் கண்ணே வரும் புதுப்புனலிலே, மற்றை மகளிர் மூழ்கி எழுந்தால் என் மனம் என்னவோ செய்கின்றது என்று இயம்புகிறாள் தோழி!
இதனைச் சிலப்பதிகாரம்,

"போதாடி வந்த புதுப்புனல் மற்றையார்
மீது ஆடின் நோம் தோழி நெஞ்சு அன்றே''.

என்று கூறுகிறது.

தலைவனிடம் தலைவி எத்துணை அன்பு பாராட்டுகின்றாள் என்பது இதனால் விளங்கும். தலைவனுக்கு உரியவான மலையும் அருவியும் பிறவும் தன்னையன்றி வேறு யாரும் தீண்டுதல் கூடாது என்ற எண்ணம் அவளுக்கு ஏற்படுகிறது. பிறமகளிர் அப்புனலில் நீராடினாலும்கூட அவள் மனம் வருந்துகிறதென்றால் அவனிடத்தில் அவள் கொண்ட அன்பைக் கூறவும் முடியுமோ? இதனைத் தன் காது குளிரக் கேட்கின்றான் தலைவன்.

தலைவன் தவிர்க்க முடியாத கடமை காரணத்தால் அவளை மணம் செய்துகொள்ள முடியவில்லை. காலமும் நீண்டு கொண்டே போகிறது. தலைவனை நினைந்து நினைந்து வருந்தியதால் தலைவி உடம்பும் மெலிகிறது. தலைவியின் தாய் மகளின் மெலிவைக் கண்டு வாடுகிறாள். அதற்குக் காரணம் காதல் நோய் என்பது தெரியாமல் இது தெய்வத்தால் வந்தது என நினைக்கிறாள். வேலனைக் கொண்டு வெறியாட்டுவித்தால் இது நீங்கும் எனத் தாய் நினைக்கிறாள். இதை அறிந்தாள் மகள். தன் தோழியைக் கூப்பிட்டு,

'தோழி, நகைப்பிற்கு'இடமாயிருக்கிறது நம் தாயின் செயல். என் நோயைத் தீர்க்கப் பூசாரியாகிய வேலன் வருகின்ருனும். என் உள்ளத்தை அறியாமல் வேலன் வருவானேல், அவனைக் காட்டிலும் அறிவில்லாதவன் வேறு எவனும் இல்லை. என் நோய் மலைநாடன் வருவானேல் நீங்கும்'' என்ருள்.

முருகனை நினைந்து பூசையிட்டனர். பார்வதியின் மகன் முருகனை வழிபட்டனர். இதைக் கண்டு தலைவனும் முருகன் போல் வேடம் தரித்து வந்தான். காதலர்கள் கடிமணம் செய்ய ஒத்துக்கொண்டனர்.

மணமக்களை ஒன்று சேர்ப்பது புதுப்பூம்புனல்; குறவர் வாழுமிடம், கண்ணகியையும் கோவலனையும் சேர்த்துவிட்டது. குறமகளிர், முருகன், பத்தினிக் கடவுளான கண்ணகி. அவர்கள் மன்னன் சேரன் முதலானோரைப் போற்றிப் புகழ்ந்து பல்லாண்டு பாடினுர்கள். இதனைச் சிலப்பதிகாரம்.

''பெற்றி யுடையதே பெற்றி உடையதே
பொற்றொடி மாதர் கணவன் மனங்காணப்
பெற்றி யுடையதுஇவ் வூர்
என்று யாம்கொண்டு நிலையாடி ஆடும் குரவையைக்
கண்டு நம் காதலர் கைவந்தார் ஆனுது
உண்டு மகிழ்ந்து ஆனு வைகலும் வாழியர்
வில் எழுதிய இமயத்தொடு
கொல்லி யாண்ட குடவர் கோவே''

என்று வாழ்த்துகின்றது.

மலைவளம் பொருந்தியது மலையாள நாடு. மதுரமான தமிழை அந்நாடு இன்று மறந்திருந்தாலும், அன்று அந்நாட்டு அரசனுன சேரன் தமிழை மறவாத தமிழன் என்பதை யாரும் மறக்க முடியாது. கேரளம் என்று இன்று அழைக்கப்படும் நாட்டின் மன்னன்தான் சேரன் செங்குட்டுவன். அவன் சாதாரணமானவனு? இல்லை! இமய முடியிலே, தன் விற்பொறியைப் பொறித்தவன் சேர

லாதன்; அவனுக்கு மகன்தான் செங்குட்டுவன். அவன் மலையின் வளங்களைக் காண எண்ணினான். ஐராவதத்தில் இந்திரன் பவனி வருவதுபோல, வஞ்சி நகரைவிட்டு மலை நாட்டுக்குச் சென்றான். அவனுடன் அவன் மனைவியும் அவன் தம்பி இளங்கோ அடிகளும் ஆசான் சாத்தனாரும் சென்றனர்.

சேரநாட்டு மலையின் அருவி முழக்கம் செய்தது. அந்த மலையில் பெருகி ஓடும் பெரியாற்றைக் கண்டவர்கள், "இதைக் காண மனிதப் பிறவியும் வேண்டுவதே இம்மா நிலத்தே என்று பாடத்தான் செய்வார்கள். அது நெடிய திருமால் மார்பின் மாலையைப்போல் காட்சி தந்தது. இந்தப் பெரியாற்றின் கரையில் சேரனும் பிறரும் வந்து தங்கினர். அப்பொழுது அம்மலைப் பகுதியில் வாழும் குறவரும் குறத்தியரும் எழுப்பிய பல்வேறுபட்ட இனிய ஓசைகள் அவன் காதில் ஒலித்தன. குரவைப்பாட்டு ஒலி, வேலன் பாட்டோசை, தினைகுற்றும் மகளிரது உலக்கைப் பாட்டொலி, அருவி நீரின் ஆரவாரம், புலியும் யானையும் போர் செய்யும் முழக்கம் முதலிய பல்வேறு ஒலிகள் மலையெல்லாம் ஒலித்தன.

இந்தக் குறமகளிர் யார்என்பதை முன்பே கண்டோம். கண்ணகி செங்குன்றில் வேங்கை மரத்தினடியில் நின்றிருந்த பொழுது, தெய்வ வடிவத்தில் தேவகணங்களுடன் கோவலன் விமானத்தில் வந்திறங்கினான். அவனுடன் கண்ணகி சுவர்க்கம் புகுந்தாள். இக்காட்சியை நேரில் கண்டவர்கள் இக்குறமகளிர். தாங்கள் கண்ணாரக் கண்ட காட்சியைக் காவலரிடமும் கூறிவிட வேண்டுமென்ற அவாவினால் அவர்கள் செங்குட்டுவனைக் காணுதற்கு விரைந்து வந்தனர். அவனைக் காண வரும்பொழுது அவர்கள் தெய்வத்தைக் காண வருவதாகவே எண்ணினார்கள். "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே'' என்பது முதுமொழியாதலால், அம்முறையிலே அவர்கள் அரசனைக் காணக் காணிக்கைப் பொருள்களுடன் வந்தார்கள். மலை

யில் கிடைக்கும் பொருள்களாகிய சந்தனம், கஸ்தூரி, கூவைக்கிழங்கு, யானை பருப்பு, பலாப்பழம் முதலிய சிறந்த பொருள்களைக் காணிக்கையாகக் கொண்டு வந்தனர். வந்த குறவர்கள் அரசனைக் கண்டு முறைப்படி வணங்கி வாழ்த்தித் தாம் கண்ட அதிசயத்தினை வரன்முறையாகச் சொல்ல லுற்று, ‘‘மலையின் பக்கத்தே கவலை தோய்ந்த முகத்தை யுடைய ஒரு காரிகை தேவர்கள் தொழுமாறு தன் கணவ னோடு சொர்க்கம் புகுந்தாள். அவள் எந்நாட்டினளோ? யார் பெற்ற மகளோ? யாம் அறியோம்? அன்றியும் இத் தகைய நிகழ்ச்சி இந்நாட்டில் இதுகாறும் ஏற்பட்டதில்லை?’’ என்று வியப்பும் அச்சமும் தோன்றக் கூறி நின்றனர். இதனைச் சிலப்பதிகாரம்,

‘‘கானவேங்கை கீழோர் காரிகை
தான் முலை இழந்து தனித்துயர் எய்தி
வானவர் போற்ற வானகம் பெற்றனள்
எந்நாட்டாள் கொல் யார் மகள் கொல்லோ
நின்நாட்டு யாங்கள் நினைப்பினும் அறியேம்’’

என்று கூறுகிறது.

குறப் பெண்கள் கூறிய வரலாற்றைக் கேட்ட மன்னன் புலவர் பெருமானைப் பார்த்தான். அவ்வுண்மையை முன்ன மேயே அறிந்த தண்டமிழ் ஆசானுகிய சாத்தனுர் கூறத் தொடங்கி, ‘‘மன்னர் மன்ன! இப்பெண்கள் குறித்த நங்கை யாகிய கண்ணகியின் கதையை நான் அறிவேன்’’ என்று கூறிக் கண்ணகியின் கதை முழுவதும் கூறி முடித்தார்.

‘‘ஆராயாது தவறிழைத்த பாண்டியன் தன் தவற்றை நினைந்து வருந்தியவாறே அரியணையிலிருந்து மயங்கி வீழ்ந்து மாண்டான். அதனைக் கண்ட பாண்டிமாதேவி தன் கணவன் உயிரைத் தேடிச் செல்பவள்போல் கணப் பொழுதும் உயிர் தரியாது மாய்ந்தாள்’’ என்று ளிறவும் சேரன் செங்குட்டுவன் வருத்தமும் இரக்கமும் கொண் டான். புலவரை நோக்கிப் ‘‘புலவர் பெருமானே! பாண்

டியன் நேர்மை தவருதவன். அரச பாரம் அஞ்சுவதற்கு உரியதே அல்லாமல், ஆசைப்படும் பொருளாக என்றுமே இல்லை. பாண்டியன் நீதி தவறினுன் என்ற பழிச்சொல் பரவுவதற்கு முன்பே, அவன், தன் உயிரைப் பலியாக இட்டுத் தன் பழியைத் துடைத்துக் கொண்டான். ஒரு நாட்டை ஆள்வது விளையாட்டுச் செயல் அன்று; இயற்கையாக மழை பெய்யாவிட்டாலும், அதற்கும் அரசனே பொறுப்பு என்று கூறுவர் இவ்வுலகோர். மக்களுக்கு ஏதாவதொரு தீங்கு நேர்ந்தால் ஆட்சியாளருக்குப் பேரச்சம் உண்டாகும். இத்தகைய இன்னலைத் தரும் அரசபாரம் வேண்டுமென்று யாராவது கேட்பார்களா?'' என்ருன்.

## 20. சேரமான் செங்குட்டுவன்

செங்குட்டுவனும் ஒரு மன்னன். வேறு ஓர் அரசன் தவறிழைத்தகாலத்து அவனைத் தூற்றாமல் போற்றும் பண்பாட்டைச் செங்குட்டுவனிடம் நாம் காண்கிறோம். பிற அரசர்கள் தவறிழைத்தபோதும் அவர்களுக்காகப் பரிந்து வருந்தும் நற்பண்பு சேர மன்னனிடம் சேர்ந்திருந்தது, அக்காலத்தின் நாகரிகத்தையே காட்டுகிறது. ஒருவரை ஒருவர் குறை கூறுவதே வெளிநாட்டு அரசியல் கொள்கையாகக் கொண்டிருக்கும் தற்கால வல்லரசுகளுக்குச் செங்குட்டுவன் பேச்சு ஒரு சிறந்த பாடமாகும்.

''எம்மோ ரன்ன வேந்தர்க்கு உற்ற
செம்மையின் இகந்த சொல் செழிப்புலம் படாமுன்
உயிர்பதிப் பெயர்த்தமை உறுக ஈங்கு என
வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோல் ஆக்கியது''

என்பது அவன் பேச்சு. இந்நிலையில், அவனது உள்ளம்,

''மழைவளம் கரப்பின் வான்பேர் அச்சம்
பிழையுயிர் எய்தின் பெரும்பேர் அச்சம்
குடிபுரவு உண்டும் கொடுங்கோல் அஞ்சி
மன்பதைக் காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழு தகவு இல்''

என்று நினைக்கின்றது. இவ்விடத்தில் ''இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும் காவலர்ப் பழிக்கும் இக்கண்

ளகல் ஞானம்'' என்ற புறநானூற்று அடிகளும் சிந்திக்கத் தக்கன.

இவ்வாறு, செங்குட்டுவன் சாத்தனுருக்குக் கூறிய பின், தன்னோடு இருந்த தன் மனைவியைப் பார்த்துக் "கணவன் இறந்தவுடனே உயிர் துறந்த பாண்டிமாதேவி சிறந்தவளா? அன்றிக் கணவன் இறந்த பின்னும் இங்கு வந்து தோன்றிய கண்ணகி சிறந்தவளா?'' என்ற சிக்கலான கேள்வியைக் கேட்டான். அது கேட்ட செங்குட்டுவன் மனைவி ''அரசர்க்கரசே! கணவன் இறந்ததனால் தனக்கு உண்டாகிய கைம்மைத் துன்பத்தை ஒரு சிறிதும் விரும்பாது அவனுடனேயே இறந்துவிட்ட பாண்டிமாதேவி மேலுலகத்தில் சிறப்படைவளாக; அவ்வாறு இல்லாமல் கையிகந்த துன்பத்தின் கொடுமை உணர்ந்து வருந்தி நம்நாடு அடைந்த கண்ணகி தெய்வத் தன்மையுடையவள்; அவளை நாம் போற்ற வேண்டும்,'' என்று கூறலுற்று,

''காதலன் துன்பம் காணாது கழிந்த
மாதரோ பெருந்திரு உறுக; வானகத்து
அத்திறம் நிற்க நம் அகல் நாடு அடைந்த இப்
பத்தினிக் கடவுளை பரசல் வேண்டும்''

என்று உரைக்கின்றாள். இங்கு செங்குட்டுவன் மனைவி தனது தீர்ப்புக்கு விடப்பட்ட செய்தியை, எத்தகைய மதி நுட்பத்தோடு ஆராய்ந்து கூறி இருக்கிறாள் என்பது அறிந்து மகிழத்தக்கது.

இவ்வாறு தன் மனைவி கூறக்கேட்ட செங்குட்டுவன் கண்ணகித் தெய்வத்துக்கு வேண்டிய கல் கொணரத் திட்டமிட்டான். அப்பொழுது அமைச்சர்கள் பொதிய மலையில் கல் எடுத்துக் காவிரியாற்றில் நீராட்டினாலும் அன்றி இமயத்தில் கல் பெயர்த்துக் கங்கையில் நீராட்டினாலும் தகும் என்றனர். அதற்குச் செங்குட்டுவன், பக்கத்தில் உள்ள பொதிய மலைக்குச் செல்லுவது தனது பெருமைக்கு பொருந்தியதாகாது என்று நினைத்து வடநாடு சென்று இமயத்தில்

கல் எடுத்துக் கொண்டு வருவதே ஏற்றது என்று கூறினுன் அக்கூற்றில் அமைந்த அவனது உள்ளக் கிளர்ச்சியை,

''பொதியில் குன்றத்துக் கல் கால்கொண்டு
முதுநீர்க் காவிரி முன்றுறைப் படுத்தல்,
மறத்தகை நெடுவாள் எம்குடிப் பிறந்தோர்க்குச்
சிறப்பொடு வரூஉம் செய்கையோ அன்று''

எனவரும் சிலப்பதிகார அடிகளால் உணரலாம்.

தன் திட்டத்தின்படியே செங்குட்டுவன் வஞ்சினம் கூறி வடநாடு புறப்படத் தயாராஞன். அப்பொழுது வில்லவன் கோதை என்றஅமைச்சன் செங்குட்டுவனது வீரத்தைப்பின் வரும் வரிகளில் கூறலுற்று, ''அரசே முன்பு ஒருநாள், தங்கள் அன்னையைக் கங்கை நீராட்டித் தாங்கள் திரும்பும்போது வடநாட்டுமன்னர் பலர் தங்களைப் பகைத்துப் போர் செய்ய வந்தார்களல்லவா? அப்போது அம்மன்னர் பலருக்கும்தாங்கள் ஒருவராகவே நின்று தங்கள் கைவாளால் பதில்சொல்லி மீண்ட காட்சி எமனையும் அச்சுறுத்தியதன்றோ?'' என்ருன்.

அமைச்சன் வில்லவன், சேரன் வடநாட்டு யாத்திரையை அந்நாட்டு அரசர்கள் எல்லோருக்கும் அறிவிக்கவேண்டும் என்பதை நினைவுபடுத்த, ''வடநாட்டிற்கு மூவேந்தர்களது அடையாளங்களும் பொறிக்கப்பட்ட ஓலையை அனுப்ப வேண்டும்'' என்ருன். இச்செய்தியை,

''இமிழ்கடல் வேலியைத் தமிழ்நாடு ஆக்கிய
இது நீ கருதினை யாயின் ஏற்பவா
முதுநீர் உலகம் முழுவதும் இல்லை
இமய மால்வரைக்கு எங்கோன் செல்வது
கடவுள் எழுத ஓர் கற்கே; ஆதலின்
வடதிசை மருங்கின் மன்னாக கெல்லாம்
தென்தமிழ் நன்னாட்டுச் செழுவில் கயல்புலி
மண்தலை ஏற்ற வரைக''

என்று சிலப்பதிகாரம் சித்திரிக்கிறது.

ஆனல் அழும்பில் வேள் என்னும் அமைச்சனது ஆலோசனைப்படியே நகரின்கண் பறையறைந்தால் போதும் என்று

முடிவு செய்யப்பட்டது. ஏனெனில் வடநாட்டு ஒற்றர்கள் வந்திருப்பார்கள்; செங்குட்டுவனது வட நாட்டு யாத்திரையை அவ்வொற்றர்கள் மூலம் வடவர்கள் அறிந்துகொள்ளக்கூடும் என்ருன். அதற்கு வேந்தன் இசைந்து அதனைச் செய்க என ஆணையிட்டான். அவனது ஆணையின்படி வட நாட்டுச் செலவு தெரிவிக்கப்பட்டது.

சேரன் செங்குட்டுவன் வடநாடு சென்று கண்ணகிக்குக் கல் எடுக்கப் புறப்படுகிருன் என்ற செய்தி இமயம் முதல் குமரி வரை எட்டிவிட்டது. "கங்கை நாட்டிலே காவேரி பாய்ந்தது, கயல்விளையாடியது" என்று தமிழக வேந்தர்கள் இறுமாப்புக் கொண்டிருப்பதைக் கேட்கக் கேட்க வடவாரியக நாட்டு வேந்தர்களான கனகன் விசயன் என்பவர்கள் மனம் கொதித்தார்கள். வரலாற்றுக் காலத்திற்கு முன்பிருந்தே வடநாடு தென்னுட்டவர்களால் வெல்லப்பட்டது உண்டே அன்றி, தென்னுடு வட நாட்டார்களால் வெல்லப் பட்டது வரலாற்று ஏடுகளில் காண முடிவதில்லை. தென்னுட்டில் தோன்றிய வைசந்து மனு முதல் அவன் இருபத்தோராவது தலைமுறையில் சிபியின் தோன்றலான இராமன் உள்படச் சேரன் செங்குவன் வரை, வடநாட்டை வென்றதையே நாம் காண்கிருேம். இவற்றை எண்ணிய வடவர்கள் ஆத்திரம் கொண்டதில் வியப்பில்லை.

இந்த ஆத்திரம், வெளி வருதற்குரிய நேரத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தது. அந்த வாய்ப்பும் ஒருநாள் கிடைத்தது. வடவர் பலரும் ஒரு திருமணத்தில் கூடியிருந்தனர். கனக விசயர்கள் அங்கே கூடியிருந்தோரை நோக்கிக் கூறலுற்று, "நாம் எல்லோரும் மன்னர்களாக இல்லாத காலத்து, தமிழ்நாட்டு வேந்தர்கள் இங்கு வந்தார்களாம்; நம்நாட்டைவென்ருர்களாம்; யாம் இப்பொழுதுமன்னராகயிருக்கும்போது அத்தென்புலத் தமிழரசர்கள் முன்புபோல் வர நெஞ்சுரம் இருக்குமா?" என்ருர்கள். இந்தச் சுடுசொற்கள் இமயத்தில் நீராடச் சென்ற முனிவர் காதுகளிலும் விழுந்தன. சேர மன்னனிடம் அம்முனிவர் இதனைத் தெரி

வித்துவிட்டனர். பொங்கிஎழுந்தான் சேரமன்னன், தனது வீரப்படைத் தலைவரை நோக்கினன். ''கனகன், விசயன்என்னும் இரண்டு ஆரிய மன்னர்கள் தமிழரசர்களை இழிவாகக் கூறினர்களாம். இச் சுடு சொற்கள் நம்மிடத்தே தங்கியிருந்தால், அது நம்மைப் போன்ற அரசரான சோழ பாண்டியருக்கு இகழ்ச்சியைத் தருவதாகும்'' என்ருன். அமைச்சர்கள் அவனை நோக்கி, மன்னர் மன்ன! அவர்கள் தங்களை ஏதும் இகழ்ந்து கூறவில்லையே. சோழ பாண்டியர்களைத்தானே இகழ்ந்திருக்கிருர்கள்'' என்ருர்கள். சேரன் சினந்து அவர்களைப் பார்த்தான்; ''அமைச்சர்களே! நாடு மூன்ருயிருக்கலாம். ஆனல், தமிழகம் என்னும்போது, அது எல்லோருக்கும் பொதுவானதாகும்; தமிழ் அன்னையைக் குறைத்துப் பேசும்போது, நாம்,எம் மன்னரைப்பற்றி என்ரு கேட்பது? எந்தத் தமிழ் மன்னருக்குப் பழி வந்தாலும் அது எனக்கு ஏற்பட்டதாகவே கருதுகிறேன். தமிழ்நாடு முழுவதிற்கும் வந்த இகழ்ச்சியைத் துடைப்பதே என் கடன்; ஆகையால், பத்தினிக்கல்லை அந்தவடநாட்டு மன்னர் தலையில் வைத்துக் கொண்டு வராவிட்டால் நான் பகையரசரைப்போரில் ஒடுக்காது குடிகளை நடுக்கும் கொடுங்கோல் மன்னனேயாவேன்'' என்று நெடுமொழி நிகழ்த்தினன். இதனை,

''இமையத் தாபதர் எமக்கு ஈங்கு உணர்த்திய
அமையா வாழ்க்கை அரசர் வாய்மொழி
நம்பால் ஒழுகுவதாயின் ஆங்கு அஃது
எம்போல் வேந்தர்க்கு இகழ்ச்சியும் தரூஉம்;
வடதிசை மருங்கின் மன்னர் முடித்தலைக்
கடவுள் எழுத ஓர் கற்கொண்டல்லது
வறிது மீளும் என் வாய்வாள் ஆகின்
செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பின்
குடி நடுக்குறூஉம் கோலேன் ஆகுக''

என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

சேரனுடைய படை வடநாடு நோக்கிச் செல்லத் தொடங்குமுன் செங்குட்டுவன், சந்திரனைச் சடையில் தாங்கிய சிவபெருமானை வணங்கினான். சேரமான் பிறரை வணங்கியதே இல்லை. வணங்கா முடியினனான செங்குட்டுவன் சிவபெருமான் திருவடித் தாமரையை,வஞ்சி சூடிநின்ற தன் மணிமுடியில் அணிந்தான். பின்னர்த் திருமாலையும் வணங்கினான். எல்லோரும் நல்வாழ்த்துக் கூற வடதிசை நோக்கிப் புறப்பட்டான் வேந்தன். வடதிசை நோக்கிச் சென்றவன் நீலகிரியை அடைந்தான். அப்பொழுது, இக்காலத்தில்ஆந்திரம்என்றுகூறப்படும் வெங்கி நாட்டிலிருந்து, சதகன்னர் என்ற நூற்றுவர் தலைவனான சஞ்சயன் என்பவன் சேரனைக் காண அங்கே வந்திருந்தான். அவன், "கன்னர்கள் நூறுபேரும் உன்னுடைய நண்பர்கள். தெய்வமான கண்ணகிக்குக் கல் எடுக்கத் தாங்களே செல்லவேண்டுமா? நாங்கள் சென்று இப்பணியை முடித்துத் தருவோம்" என்றுகூறினான். சேரன் மறுமொழி பகர்வானாய், 'உங்களுடைய திறமையில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. ஆனால் பாலகுமரன் மக்களான கனகனும்,விசயனும் தமிழ்வேந்தர்களை இகழ்ந்தனர். யா காவார் ஆயினும் நாகாக்க என்பதை அவர்கள் மறந்த காரணத்தால் இப் பெருஞ்சேனை அவர்களுடைய உயிரை உண்ணும் கூற்றம் போலச் செல்லுகிறது. கன்னர் நூற்றுவரைக் கொண்டு கங்கையைக் கடக்கத் தோணியைத் தயார் செய்து தாருங்கள்" என்றான்.

தன்வலி, மாற்றான்வலி, துணைவலி யாவையும் சீர் தூக்கி வடநாடு சென்ற சேரன், வடநாட்டில் வெற்றிமேல் வெற்றி கண்டான். கங்கையைக் கடக்கக் கன்னர்கள் தோணிகளுடன் ஆயத்தமாகக் காத்திருந்தனர்.

ஜூலியஸ் சீசர் என்ற மன்னன் பிரித்தானிய நாட்டை வென்றதைப்பற்றி ஒருகதை உண்டு. அவன் தன்நாட்டிற்கு எழுதிய கடிதத்தில் "சென்றேன், கண்டேன், வென்றேன்" என்று சொன்னான். அதுபோல 18 நாழிகைப் பொழுதிலே, கனக;விசயர்களை வென்றான் வெற்றி வேந்தனான சேரன்.

தேவாசுரப் போர் 18 ஆண்டுகளும் இராமாயணப்போர் 18 மாதங்களும் பாரதப் போர் 18 நாட்களும் நடந்தன என்று கூறுவர். ஆனால் பதினெட்டு நாழிகையில் அதாவது பாதி நாளிலேயே பாரதத்தைப் பாங்குடன் வென்றான் சேரன் இமயத்தில் கல்லெடுத்து, கங்கையில் நீராட்டி, போரில் தோற்றுத் துறவி வேடத்தில் மறைந்து தப்பிய கனக விசயரைப் பிடித்து, அவர்கள் தலையில் கல்லை ஏற்றினான். ஆரிய மன்னர்களுக்குத் தமிழர் வீரத்தினை உணர்த்தினான்.

வெற்றிபெற்ற சேரன் தன் பாசறையில் அமர்ந்து எல்லோரையும் அன்புடன் அழைத்து வெற்றிமாலை சூட்டினான். புலவர்கள் அவனுடைய புகழைப் பாடினார்கள். அப்பொழுது எதிர்பாராத வகையில் மாடலன் என்ற மறையோன் அங்கு வந்து தோன்றினான்.

"வாழ்க மன்னா! வாழி நின் கொற்றம். மாதவியின் கானல் வரி கங்கையை வென்றது; கனக விசயரின் செருக்குற்ற முடித்தலையை நெரித்தது. நீர் சூழ்ந்த உலகத்தை அடிப்படுத்தி ஆண்ட அரசே, நீ வாழ்க" என்றான். சேரனுக்கு ஒன்றும் விளங்கவில்லை; "அந்தணரே என்ன கூறினீர்கள்? பகையரசர்கள் அறியாத நகைப்புக்கிடமாகிய ஒன்றைக் கூறினீர்கள்? அதன் பொருள் என்ன?" என்று கேட்டான். மாடலன் கோவலன் கதையைக் கூறி "மன்னர் மன்ன, இதுதான் மாதவியின் மாசற்ற வாழ்க்கையின் முடிவு. ஊழ்வினை அவர்களைச் சேர்த்தது; அதே ஊழ்வினை கானல்வரி மூலம் அவர்களைப் பிரித்தது; கோவலன் மதுரையில் இறந்தான்; கண்ணகி பாண்டியனை வென்றதை அறிந்தேன். மதுரை எரிந்தது. கண்ணகிக்கு அடைக்கலம் தந்த மாதிரி தீயில் விழுந்து உயிர் நீத்தாள். கவுந்தி அடிகள் உண்ணாநோன்பு இருந்து விண்ணுலகு எய்தினார். இவ்வாறு மதுரையில் நிகழ்வதையெல்லாம் அறிந்துகொண்டு புகாருக்குச் சென்றேன். அங்கே கோவலன் தாய் துயர் பொறாது மாண்டதைக் கண்டேன். தந்தை தன் செல்வத்தைஎல்லாம் துறந்து துறவியானான். கண்ணகியின் தந்தை சமயத்துறவி

யாகிவிட்டார். அவர் மனைவி உயிர்நீத்தாள்; இவைகளைச் செவியுற்ற மாதவி 'நான் விலைமாதர் குடியில் பிறந்த பாவத்தால் எத்துணை நன் மக்கள் உயிர்விட நேர்ந்துள்ளது. கணிகையர் வாழ்வு பெரும் துன்பத்தைத் தருவதாகும். என் மகள் மணிமேகலை கணிகைக் கோலம் பூணுமல் ஒழிவாளாக' என்ருள். மேலும் அவள் அதனைத் தன் தாய்க்குக் கூறிவிட்டுப் பூங்குழல் களைந்து பௌத்த தருமத்தை மேற்கொண்டாள்'' என்ருன். ''பாண்டியன் மடிந்தவுடன் அவன் நாடு என்னவாயிற்று'' என்று சேரன் கேட்டான். ''மன்னர் மன்ன, நெடுஞ்செழியன் மகன் வெற்றிவேற்செழியன் கொற்கையிலிருந்து வந்துபத்தினிக் கடவுளர்களுக்கு வழிபாடு செய்து ஆயிரம் பொற் கொல்லரைப் பலிதானமாகத் தந்து சாந்தி செய்தான். பின்னர், அவன் அரியணை யேறி அரசியலை மேற்கொண்டான்,'' என்ருன் மாடலன்.

சேரன் செங்குட்டுவன் வடநாடு வந்து முப்பத்திரண்டு மாதங்கள் கழிந்தன. ஆகையால் தமிழகத்தின் நினைவு அவனுக்கு ஏற்பட்டது. மொழி அறியா நாட்டிலே, தன்மொழி அறிந்தவன் பக்கத்தில் இருக்க, அவன், ''மாடல! சோழன் பெருங்கிள்ளியின் கொற்றமும், செங்கோல் இயல்பும் எவ்வாறுள்ளன'' என்று கேட்டான்.

''எங்கள் வேந்தே, வாழ்க! நீதிக்கும் நேர்மைக்கும் பிறப்பிடம் சோழநாடு. புருவைக் காத்த சிபி மன்னன் நாட்டில் எவ்வாறு நீதி பிறழும்? காவிரி நாட்டு மன்னனுக்கு எக்காலத்திலும் தீதுவாராது'' என்ருன்.

தமிழகத்தில் நல்லரசுகள் தொடர்ந்து நடைபெற்று வருவதை அறிந்து மகிழ்ந்தான் சேரன். மாடலனுக்குப் பரிசு தர நினைத்தான். தமது நிறையுள்ள ஐம்பது துலாம் பரம் (ஏறத்தாழ மூந்நூறு பவுண்டு நிறை) பொன்னை மாடலனுக்குத் தந்தான்; கன்னரர் நூற்றுவர் (சதகர்னிகள்) தமது நாட்டிற்குச் செல்ல அனுமதி தந்தான்.

தெய்வப் பாவை. தமிழர்களின் வீரத்தை வடநாட்டில் காட்டிய சேர மன்னனின் திறத்தால், செந்தமிழ்ப் பாவை யாகத் தமிழகத்தில் கோயில் கொள்ள வந்தாள்.

ஏறத்தாழ மூன்று ஆண்டுகள், சேரன் மனைவி தன் கணவனைப் பிரிந்திருந்தாள். சேரன், அவள் மனம் இன்புறத் திரும்பி வந்துவிட்டான். அரசியான வேண்மாளுடன் செங்குட்டுவன் அரயணைமீது அமர்ந்து சிவபார்வதி நடனம் கண்டான்:

''திருநிலை சேவடிச் சிலம்பு வாய் புலம்பவும்
பரிதரு செய்கையில் படு பறை ஆர்ப்பவும்
செங்கண் ஆயிரம் திருக் குறிப்பு அருளவும்
செஞ்சடை சென்று திசை முகம் அலம்பவும்
பாடகம் பதையாது சூடகங் துளங்காது
மேகலை ஒலியாது மென்முலை அசையாது
வார்குறை ஆடாது மணிக்குழல் அவிழாது
உமையவள் ஒருதிறனாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்''

என்னும் அக்கூத்தினைக் கண்டு களித்துத் தனது மந்திரா லோசனை மண்டபத்தை அடைந்தான் செங்குட்டுவன்.

வடநாடு சென்று இமயத்தில் கல்லெடுத்து, ஆரிய மன்னர்களை வென்று திரும்பிய செங்குட்டுவன், ஒருநாள் தனது ஆலோசனை மண்டபத்தில் இருக்கையில் நீலன்என்பான் சில கூறக் கருதி, 'அரசர்க்கரசே, தங்கள் ஆணைப்படியே, சிறை பிடிக்கப்பட்ட ஆரிய அரசர்களைச் சோழனிடம் சென்று காட்டினேன். ஆனால் அவன் தங்களை இகழ்ந்துரைத்தான்' என்றான். ''என்னையா இகழ்ந்தான்? சோழனையும், பாண்டியனையும்,இழிவுபடுத்திக் கூறியதைப் பொறுக்காது, வடக்கே சென்று தமிழர்களின் தன்மானத்தைக் காத்து வந்திருக் கிறேனே; அதனை அவர்கள் உணரவில்லையா?'' என்றான். நீலன் மறுமொழி கூறுவானாய், ''போரில் எதிர்த்து நின்று

தாக்கும் ஆற்றல் இன்றித் தவவேடம் புனைந்து புறம் தந்து ஓடிய ஆரிய மன்னர்களைச் செங்குட்டுவன் பற்றிக் கொணர்ந்தது சிறந்த முறையாகாது என்று சோழன் கூறினான். பாண்டியனும் ஏறத்தாழ இவ்வண்ணமே கூறினான்'' என்றான். இதனைச் சிலப்பதிகாரம்,

''நீளமர் அழுவத்து நெடும்பேர் ஆண்மையொடு
வாளும் குடையும் மறக்களத்து ஒழித்துக்
கொல்லாக் கோலத்து உயிர் உய்ந்தோரை
வெல்போர்க் கோடல் வெற்றம் அன்று எனத்
தலைத் தேர்த் தானைத் தலைவற்கு உரைத்தனன்
சிலைத்தார் அகலத்துச் செம்பியர் பெருந்தகை''

என்று கூறுகிறது.

சோழனும் பாண்டியனும் தன்னை அவமதித்ததாகக் கேள்வியுற்ற செங்குட்டுவன் மிக்க சினம் கொண்டான். அப்பொழுது அங்கு நின்ற மாடலன் என்ற மறையோன், செங்குட்டுவனது சினத்தைத் தவிர்க்க நினைத்தான். தமிழ்வேந்தர் மூவரும் ஒன்றாயிருப்பதைக் கண்டு ஞாலமே நடுங்கும்போது அவர்களுக்குள் பகைமை ஏற்படின், உலகம் கைகொட்டியல்லவா நகைக்கும். ஆகையால் செங்குட்டுவனை நோக்கி ''வேந்தர் வேந்தே! நீ இதுகாறும் போர்க்கள வேள்வியே செய்து வந்துள்ளாய். உங்கள் முன்னோர் பலரும், பாரெல்லாம் புகழத்தக்க வெற்றி வீரர்களாய் விளங்கினர் என்பது உலகறிந்தது. அங்ஙனம் இருந்தும் என்ன? அவர்கள் யாவரும் ஒருவர்பின் ஒருவராய் மறைந்துவிட்டனர் அன்றோ. அன்றியும் இவ் யாக்கை நிலையாமையை உடையது. அதனால் நிலைத்த புகழுக்குரிய வேள்வி முதலானவற்றைச் செய்து சிறந்த துறக்க இன்பத்தை நீ பெறுதல் வேண்டும். அதுவே இனி நீ செய்யவேண்டியது'' என்று விரிவாக எடுத்துக்கூறிக் கோபம் மிகுந்திருந்த செங்குட்டுவனைச் சினம் தணிவித்துத் தன் வயப்படுத்தினான். அந்தணன் கூறிய அறவுரைகளை அரசன் கேட்டான்; வேதியர்களை அழைத்து வேள்விக்குரிய ஏற்பாடுகளைச் செய்யுமாறு பணித்தான்.

வில்லவன் கோதை என்ற அமைச்சன் சேரன் செங்குட்டுவனது ஆணையின்படி சிறையிடப்பட்டிருந்த ஆரிய மன்னர்களை விடுவித்து அவர்களுக்கு வேண்டுவன கொடுத்துச் சிறப்பித்தான். வேள்வியின் பொருட்டு இதுவரை கப்பம் கட்டி வந்த வேந்தர்கள் யாரும் இனிமேல் கப்பம் கட்ட வேண்டியதில்லை என்ற ஆணை பிறப்பிக்கப்பட்டது. சிறைக்கோட்டமும் அன்று முதல் வறிதே இருந்தது.

பின்பு செங்குட்டுவன் பத்தினிக் கடவுளாகிய கண்ணகியின் படிமத்தைத் தான் இமயத்திலிருந்து கொண்டுவந்த கல்லில் எழுதப் பணித்து அதனைத் தனது தலைநகரமாகிய வஞ்சிபூதூரில் கடவுள் மங்கலம் செய்வித்து மகிழ்ந்தான். இதனை இளங்கோவடிகள்,

''பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்து
இமையவர் உறையும் இமையச் செவ்வரைச்
சிமையச் சென்னித் தெய்வம் பரசிக்
கைவினை முற்றிய தெய்வப் படிமத்து
வித்தகர் இயற்றிய விளங்கிய கோலத்து
முற்றிழை நன்கலம் முழுவதும் பூட்டிப்
பூப்பலி செய்து காப்புக் கடைநிறுத்தி
வேள்வியும் விழாவும் நாடொறும் வகுத்துக்
கடவுள் மங்கலம் செய்க என ஏவினன்
வடதிசை வணக்கிய மன்னவர் ஏறு''

என மனமாரப் பாராட்டியுள்ளார்.

# 21. கண்ணகித் தெய்வம்

செங்குட்டுவன் இவ்வாறு இருக்குங்கால் கோவலன் கொலையுண்டது முதலியவற்றை மாடலன்மூலம் அறிந்த கண்ணகியின் செவிலித்தாய் அடித்தோழி காவற்பெண்டு முதலியோர் மதுரைக்குச் சென்றனர்கள். அங்கு அவர்கள் கண்ணகியைக் காண முடியவில்லை. மாதரியின் மூலமாக நடந்ததை அறிந்து சேர நாடு சென்று கண்ணகியின் கோயிலை அடைந்தனர். அடைந்தவர்கள் செங்குட்டுவனுக்குத் தங்களை அறிமுகம் செய்து, பின்னர்க் கண்ணகியின் பிரிவால் உண்டாகிய தமது ஆற்றாமையைப் புலப்படுத்தினர். மேலும் அவர்கள் கண்ணகி கோவலன் ஆகியோரின் தந்தையரும் மாதரியும் மணிமேகலையும் துறவுபூண்டசெய்திகளைத் தெரிவித்துக் கண்ணகித் தெய்வத்தை வணங்கினர். அப்பொழுது கண்ணகி செங்குட்டுவனுக்கு ஒளி வடிவமாகக் காட்சி தந்தாள். அதைக் கண்டு செங்குட்டுவன்,

''என்னே இஃது என்னேஇஃது என்னே இஃது என்னேஇஃது
பொன்னே சிலம்பின் மேகலை வளைக்கை
நல்வயிரப் பொன் தோட்டு நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடி ஒன்று மீவிசும்பில் தோன்றுமால்''

என்று வியப்புற்று நின்றான். இந்நிலையில் கண்ணகித் தெய்வம் செங்குட்டுவனுக்குக் காட்சி தந்தது. 'மன்ன, பாண்டியன் யாதொரு குற்றமும் செய்யவில்லை. அவன் விண்ணுலகில் இந்திரனுக்கு விருந்தாயினான்; நானும் அவனுக்கு மகளாயினேன். வெற்றிவேல் தாங்கிய முருகன் குன்றின்மேல்

யான் விளையாடலை மறவேன்' என்று கூறியது. இதனைச் சிலப்பதிகாரம்,

"தென்னவன் தீதிலன் தேவர்கோன் தன்கோயில்
நல்விருந்து ஆயினன் நான் அதன் தன்மகள்
வென்வேலான் குன்றில் விளையாட்டு யான் அகலேன்
என்னேடும் தோழிமீர் எல்லீரும் வம்எல்லாம்"

என்று சித்திரித்துள்ளது.

இஃது இவ்வாருக, இளங்கோவடிகள், ஆயமகளிர் ஆடிப் பாடிய அம்மானை, கந்துக வரி, ஊசல் வரி முதலியவற்றின் வாயிலாகச் சேர சோழ பாண்டியராகிய மூவேந்தருடைய சிறப்புக்களை வரன்முறையாக நடுவுநிலை தவருது எடுத் தியம்பும் தன்மை பாராட்டுதற்கு உரியது. கண்ணகியின் வரலாறு மூவேந்தர் நாடுகளிலும் நிகழ்ந்தது. அம்மூவரை யும் அடிகள் காப்பியத்தில் வாழ்த்துக் காதையில் புகழ்ந்து கூறுகிருர். "கடலை எல்லையாக உடைய சோழ நாட்டை ஆண்டு பண்டு இந்திரனுடைய அரண்களைக் காத்த வலிமை மிக்க அரசன் யார்? அவன் யாரெனின், ஆகாயத்தில் அசைந்து திரிந்த மூன்று மதில்களையும் அழித்து ஒழித்த தொடித்தோள் செம்பியன் ஆவன். அத்தகைய சோழ மன்ன னது தலைநகராகிய பூம்புகாரை நாம் புகழ்ந்து பாடுவோ மாக" என்று ஆயமகளிர் அம்மானை ஆடினர். அது,

"வீங்குநீர் வேலி உலகு ஆண்டு விண்ணவர்கோன்
ஓங்கு அரணம் காத்த உரவோன் யார் அம்மானை
ஓங்கு அரணம் காத்த உரவோன் உயர்விசும்பில்
தூங்கு எயில் மூன்று எறிந்த சோழன் காண் அம்மானை
சோழன் புகார் நகரம் பாடு ஏலோர் அம்மானை"

என்பதனுல் விளங்கும். இனித் தென்னவனுகிய பாண்டி மன்னனைக் கந்துக வரியால் சிறப்பித்துப் பாடினுர். "பொன் மாலை இந்திர வில்லைப்போலப் பிரகாசிக்கவும் மேகலை மின் னினும் விளக்கமுற்று ஒலிக்கவும் தென்னவன் வாழ்வானுக

என்று பாடிப் பந்தடிப்போம், வாரீர் என்று பெண்கள் பந்தடித்துப் பாடி மகிழ்கின்றனர். அப்பாட்டு,

''பொன் இலங்கு மேகலைகள் பொலன் செய் கோதை வில்லிட
மின்இலங்கு மேகலைகள் ஆர்ப்ப ஆர்ப்ப எங்கணும்
தென்னவன் வாழ்க வாழ்க என்று சென்று பந்து அடித்து
தேவர் ஆர மார்பன் வாழ்க என்று பந்தடித்துமே''

எனவரும்.

இறுதியாக, அப்பெண்கள் சேர மன்னனது சிறப்பைப் பாடினர்: ''பகைவரது கடம்பு மரத்தைத் தடித்த சேர மன்னனைப் பாடிப் புகழ்ந்து நாம் ஊசலாடுவோம். இமயத்தில் வில் பொறித்த தன்மையைப் புகழ்ந்து பாடி ஊசலாடுவோம்'' என்னும் பொருள்பட,

''வடங்கொள் மணியூசல் மேலிரீஇ ஐயை
உடங்கு ஒருவர் கைந்திமிர்த்து ஆங்கு ஒற்றைமேல் ஊக்கக்
கடம்புமுதல் தடிந்த காவலனைப் பாடிக்
குடங்கை நெடுங்கண் பிறழ ஆடாமோ ஊசல்
கொடுவில் பொறி பாடி ஆடாமோ ஊசல்''

என்று பாடி மகிழ்ந்தனர். இவ்வாறு இம்மகளிர் பாடிய வரிப்பாடல்களில் சேர சோழ பாண்டியர்களின் சிறப்புக்களைப் படித்துப் பார்க்கும்பொழுது அக்காலத்துத் தமிழகத்தின் சிறப்பும் தமிழரின் பெருமித உணர்ச்சியும் நம்மைப் பிணித்து நம்மையே மருட்கையில் ஆழ்த்துவது காணலாம்.

கண்ணகிக்குக் கோயில் கட்டியாகிவிட்டது. மூன்று மன்னர்களும் வந்தார்கள். இலங்கையிலிருந்து கயவாகு மன்னனும் வந்திருந்தான். அடித்தோழி கண்ணகியின் சிறப்பைக் கூறினாள்.

கண்ணகி தன்னைப் பெற்றெடுத்த தாய்க்கும் தான் செல்லும் மதுரையைக் கூறவில்லை. தோழியின் தாயான தனது செவிலியிடமும் அவள் ஒன்றும் கூறவில்லை. தன் தோழியிடம்கூட அவள் ஒன்றும் கூறவில்லை. கற்பையே அணிகல

ருகக் கொண்டு அன்று காதலனைப் பின்தொடர்ந்து வந்த நங்கை கண்ணகி. இதனைச் சிலப்பதிகாரம்,

தற்பயந்தாட்குஇல்லை தன்னைப் புறங்காத்த
எற்பயந்தாட்கும் எனக்கும் ஓர் சொல்லில்லை
கற்புக்கடம் பூண்டு காதலன் பின் போந்த
பொன் தொடி நங்கைக்குத் தோழி நான் கண்டீர்
பூம்புகார்ப் பாவைக்குத் தோழி நான் கண்டீர்

என்கிறது.

நாம் இன்று நாடகங்களிலும் கூத்து மேடைகளிலும் திரையிலும் கண்ணகியைப் பற்றிய தவறான கருத்தைக் காண்கிறோம். கண்ணகி பாண்டியனுடைய மகள். அவள் அழுதால் நாடே அழியும் எனக் கருதி அவளை ஆற்றில் விடுகிறான் பாண்டியன். அந்தக் குழந்தையை ஒரு செட்டி எடுத்து வளர்க்கிறான்.

இந்தத் தவறான கதைக்குச் சிலப்பதிகாரத்தில் என்ன ஆதாரமிருக்கிறது என ஒரு நண்பர் கேட்டார். அதற்கு ஆதாரம் வாழ்த்துக் காதையிலே வரும் ஒரு பாட்டுதான்.

''பாண்டி மன்னன் தீதற்றவன், அவன் தேவர் உலகத்தில் வாழ்கின்றான். நான் அவனுடைய மகள்'' என்று கூறுகிறது அப்பாடல்.

மூன்று மன்னர்களும் வணங்கும் தெய்வமான கண்ணகியின் வாழ்க்கையிலே பாண்டி மன்னரின் வரலாற்றை எழுதும்போது ஒரு குற்றம் தோன்றுகிறது. சேரன் மூவேந்தர்களில் ஒருவன். அவனே பாண்டியன் தீதுடையவன் எனக் கூறின் அஃது அவனுக்குப் பெருமை தராது. ஆகையால், கண்ணகி பாண்டியனது குற்றம் விதியின் பிழையால் ஏற்பட்டது என்று கூறி அவனைத் தனக்குத் தந்தையாக்கிக் கொண்டதாகக் கூறுகிறார். மகளுக்கும் தந்தைக்கும் மனவருத்தம் இருக்க முடியாதாகையால் அவர்கள் இருவரும் மகளும் தந்தையுமானார்கள். இதை அறியாத பிற்காலத்தவர்கள்—கலை உரைத்த கற்பனையை நிலையெனவே

கொண்டாடும் கண் மூடித்தனமுடைய மக்கள்—கண்ணகி உண்மையிலேயே பாண்டியன் மகள் எனக் கருதி எழுதவும் நடிக்கவும் தொடங்கினர்.

கண்ணகி தெய்வ வடிவில் வந்து சென்று விட்டாள். சேரன் செங்குட்டுவன் தேவந்தியை நோக்கினன். "அம்மையே தாங்கள் கூறிய மணிமேகலை என்பவள் யார்? அவளுக்கு நடந்தது என்ன?" என்முன்.

தேவந்தி: மன்னர் மன்ன! மணிமேகலை மாதவிக்கும் கோவலனுக்கு பிறந்த மகள். அவள் கோவலன் இறக்கும் போது பருவம் எய்தும் வயதை அடைந்தாள். அவளுடைய விசாலமான கண்களிலே செவ்வரிகள் பரந்தன. மங்கைப் பருவத்திற்கு ஏற்பட்ட பல கூறுகளும் சிறிது சிறிதாகத் தோன்றத் தொடங்கின. அவளை, ஆடல் பாடலில் பயிற்றுவித்துக் கணிகையர் குலத்து மங்கையாக்க வேண்டும் என்று மாதவியின் தாய் சித்திராபதி எண்ணினள். ஆனல் மாதவி அதற்கு உடன் படாமல் அவளைப் புத்த பிக்குணியாக்கி விட்டாள்.

சேரன்: மாதவியின் கற்பின் திறன்தான் என்னே? மணிமேகலையின் சிறப்புத்தான் என்னே! என்னே!

மாடலன்: பிறப்பவர்கள் இறப்பதும் இறப்பவர்கள் பிறப்பதும் நாளும் நடப்பவை. இதில் ஏதும் விந்தை இல்லை. ஆனல் தாங்கள் மாநிலம் விளங்க மாபத்தினியாகிய கண்ணகிக்குப் படிவம் அமைத்துப் புகழ் பெற்று விட்டீர்கள். கண்ணகித் தெய்வம் எல்லோருக்கும் வரம் ஈந்தாள். சிந்தையும் செல்ல முடியாத நெடுந்தூரமுள்ள, முடிவில்லாத இன்பத்தைத் தரக்கூடிய இறைவன் அருள் பெற்றவர் நீங்கள்.

சேரன் தம்பியாகிய இளங்கோவடிகளை அந்தமில் இன்பத்து அரசாள் வேந்தன் என்று புகழ்ந்து கூறியதை முன்பே கண்டோம். அந்தமில்லா இன்பத்திலே திளைப்பவன் இறைவன். அவனுடைய குறிப்பை அறிந்தவர் இளங்கோ. அவர் கூறுகிருர், நாம் என்ன செய்ய வேண்டுமென்று:

தெய்வம் உண்டு என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். அப்படித் தெய்வம் உண்மை தெளிந்தவர்களை நாம் போற்றவேண்டும். இதனாலன்றோ நம்பி ஆரூரரும், "அப்பாலும் அடிசார்ந்தார்க்கு அடியேன்" என்றார். பொய்யுரை கூடாது, உயிர்க் கொலை செய்யக்கூடாது. வள்ளுவர் கூறியதுபோல, "கொல்லான் புலாலை மறுத்தானைக் கை கூப்பி எல்லா உயிரும் தொழும்" என்று கூறுகிறார். கள்ளையும், காமத்தையும் அகற்ற வேண்டும். பிறர்மனை நோக்காத ஆண்மை வேண்டும். இவ்வாறு பல நலங்களையும் பெறுவோமானால் நாமும் அந்தமில் இன்பத்து அரசாள் வேந்தர்களின் பேரின்பத்தில் ஒரு பகுதியாவது பெறுவோம். இவற்றைச் சிலப்பதிகாரம்,

"பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்,
தெய்வம் தெளிமின், தெளிந்தோர்ப் பேணுமின்,
பொய்யுரை அஞ்சுமின், புறஞ்சொல் போற்றுமின்,
ஊனூண் துறமின், உயிர்க்கொலை நீங்குமின்,
தானம் செய்ம்மின், தவம்பல தாங்கிமின்
செய்ந்நன்றி கொல்லன்மின்; தீநட்பு இகழ்மின்,
பொய்க்கரி போகன்மின்; பொருள்மொழி நீங்கன்மின்;
அறவோர் அவைக்களம் அகலாது அணுகுமின்,
பிறவோர் அவைக்களம் பிழைத்துப் பெயர்மின்;
பிறர்மனை அஞ்சுமின், பிழையுயிர் ஓம்புமின்,
அறமனை காமின், அல்லவை கடிமின்,
கள்ளும் களவும் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்;
இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா;
உளநாள் வரையாது; ஒல்லுவது ஒழியாது
செல்லும் தேஎத்துக்கு உறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீர் ஈங்கென்"

என்று விளங்க உரைத்திருப்பது காண்க.